# தமிழில் தத்துவ நூல்கள்

முனைவர் நா.பாஸ்கரன்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113.

டாக்டர் பா.சிவந்தி ஆதித்தனார் அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியவர்: டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார்)

வரிசை எண் : 11

---


## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Tamiḻil tattuva nūlkaḷ |
| Author | : | Dr. N. Bhaskaran<br>Director<br>Centre for Distance Education<br>Khajamalai Campus<br>Tiruchirappalli - 620 023 |
| General Editor | : | Prof. Dr. K.A. Gunasekaran<br>Director<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai-600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 604 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2008 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | viii + 136 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs.40/- (Rupees Forty Only) |
| Printed by | : | Raagaas<br>12/293, Royapettah High Road<br>Royapettah, Chennai-600 014<br>Ph. 044-43510437 |
| Subject | : | Philosophy |


---

பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

# அணிந்துரை

மனித வாழ்வில் அறிவியலும் ஆன்மிகமும் ஒன்றையொன்று போட்டியிட்டுக் கொண்டுவருகின்றன.

அறிவியல் சொல்வதும் சரியா. கப்படுகிறது. ஆன்மிகம் கூறுவதும் சரியாகப்படுகிறது.

காரணகாரியங்களுடன் அறிவியல் சொல்கிறது. அனுபவங்களின் அடிப்படையில் ஆன்மிகம் சொல்கிறது.

இந்நிலையில் இரண்டுமே இருசாரார்களால் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

அறிவியல் அறிவு சார்ந்தது; ஆன்மிகம் சமய நம்பிக்கை சார்ந்தது. அறிவியலோ வியாபாரமயம் ஆக்கப்படவில்லை. ஆனால் ஆன்மிகமோ அண்மையில் வியாபாரமயம் ஆக்கப்பட்டு வருகிறது.

அறிவியல் சாதித்திருப்பதை ஆன்மிகவாதிகளும் பயன்படுத்திக் கொண்டு வியாபார மயமாக்கிச் சுயஇலாபம் அடைகின்றனர்.

இவ்வாறு அறிவியலார் ஒருபக்கமும் தத்துவஞானிகள் ஒருபக்கமுமிருந்து மனித வாழ்வைச் செம்மைப்படுத்துகின்றனர்.

தத்துவம் என்பது சமயம் சார்ந்ததோடு மட்டுமல்லாது பல்வேறு சிந்தனைகளை உள்வாங்கிக் கொண்டுள்ளது. ஆதலால் அது ஆன்மிகத்தின் ஒருபகுதியாகிறது.

உலகத்தோற்றம் பற்றி அறிவியலும் கூறுகிறது. ஆன்மிகமும் கூறுகிறது.

அதுபோன்றே உயிர்களின் தோற்றம் பற்றியும் இரண்டு விதக் கருத்துகள் உள.

உயிர்களில் மனிதனே ஆறறிவுபடைத்ததின் மூலம் மனம் என்பதைக் கொண்டிருக்கிறான். மனிதனிடத்திலேதான் ஆன்மாவும் உள்ளதாகச் சில தத்துவநூல்கள் கூறுகின்றன.

அறிவியலுக்கு முடிவு இல்லை என்பதுபோல் தத்துவக் கருத்துகளுக்கும் முடிவு இல்லை.

அறிவியலும் ஆன்மிகமும் இரு நேர்கோடுகளாக ஒன்றையொன்று தொடாமல் பயணிக்கின்றன.

பௌத்தமும் சைனமும் ஆன்மிகத்தின் அடிநிலையில் அறிவியலை முதன்மைப்படுத்துகின்றன.

இந்தியத் தத்துவநூல்களில் தமிழில் அமையும் தத்துவநூல்கள் கணிசமாக உள்ளன. இத்தத்துவ நூல்களில் மேற்குறிப்பிட்ட உலகு, உயிர், மனம், ஆன்மா, பிராணன், வினை, கருமம், பயன், ஊழ் போன்றவை பரவலாகப் பேசப்பட்டுள்ளன.

அறிவியல் தத்துவங்கள் அறிவு, உழைப்பு போன்றவற்றை முதன்மைப்படுத்துகின்றன. அறிவியல் ஆன்மிகம் இவற்றைக் கூறித் தமிழில் தத்துவநூல்கள் எனும் தலைப்பில் சொற்பொழிவு நூலாக முனைவர் நா.பாஸ்கரன் அவர்கள் அமைத்துள்ளார்.

பல்வேறு தலைப்புகளில் எளிமையாகவும் எடுத்துக் காட்டுகளுடனும் படிப்போரை வயப்படுத்துமுகமாகவும் இந்நூலை எழுதியுள்ளது பாராட்டுக்குரியது.

இச்சொற்பொழிவன்றே இது அச்சிட்டு நூலாக வெளிப்படுவதும் சிறப்பு.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அவர்களால் தோற்றுவிக்கப் பெற்றுள்ள இந்த அறக்கட்டளையின் 11ஆவது பொழிவாக இந்நூல் அமைகிறது. இவ் அரியபெரிய அறக்கட்டளையை நிறுவிய பத்மஸ்ரீ டாக்டர் பா.சிவந்தி ஆதித்தனார் அவர்களைப் பாராட்டுகிறேன்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையையும் காட்டிவரும்

நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான **மாண்புமிகு டாக்டர் கலைஞர்** அவர்களுக்கு என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

மாண்புமிகு தமிழக முதல்வர் போன்று, தமிழின் சிறப்புகளைத் தரணி முழுதும் எடுத்தோதி, இந்நிறுவனச் செயல்பாட்டுக்கு மேன்மை ஏற்படுத்திவரும் **தமிழக நிதியமைச்சர் மாண்புமிகு பேராசிரியர்** அவர்களுக்கு நன்றி.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் **தமிழ் வளர்ச்சி, அறநிலையம், செய்தி மற்றும் விளம்பரத்துறை அரசுச் செயலர் திரு க. முத்துச்சாமி இ.ஆ.ப.** அவர்களுக்கும் நன்றி.

இந்த அறக்கட்டளை தொடர்பான ஆயத்தப் பணிகளை ஏற்படுத்தியிருந்த இந்நிறுவன மேனாள் இயக்குநர் முழுக் கூடுதல் பொறுப்பு வகித்திருந்த **முனைவர் ம. இராசேந்திரன்** அவர்களுக்கும் நன்றி.

இச்சொற்பொழிவு மற்றும் நூல் வெளியீடு தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்களுக்கும், இந்த அறக்கட்டளைச் சொற்பொழிவின் எழுத்துருவையும் மெய்ப்பையும் திருத்திப் பதிப்பு மேற்பார்வை செய்த முனைவர் ஆ. தசரதன் மற்றும் எழுத்துருவை இந்நிறுவனத்தில் ஒளிவடிவமைப்புச் செய்த திருமதி பி.கௌசல்யா ஆகியோருக்கும் இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த ராகாஸ் அச்சகத்தாருக்கும் பாராட்டுகள்.

**இயக்குநர்**

## ஆசிரியரைப் பற்றி



இந்நூலாசிரியர் முனைவர் நா.பாஸ்கரன் அவர்கள் 28.03.1955ஆம் ஆண்டு திருவள்ளூர் மாவட்டம் திருத்தணிக்கு அருகில் உள்ள வேலஞ்சேரி என்ற சிற்றூரில் விவசாயக் குடும்பத்தில் பிறந்தவர். காஞ்சிபுரம் அருகிலுள்ள கலவை என்ற ஊரில் உயர்நிலைக் கல்வியையும் சென்னை பச்சையப்பன் கல்லூரியில் இளங்கலை மற்றும் முதுகலைப் பட்டங்களையும் பெற்றார். கல்லூரி நாட்களில் இக்கல்லூரியின் மாணவர் தலைவராகவும் சென்னை அனைத்துக்கல்லூரி மாணவர் தலைவராகவும் விளங்கினார். 1980 முதல் திருச்சி தேசியக் கல்லூரியின் தத்துவத்துறையில் விரிவுரையாளராகவும் 1995 முதல் 2006 வரை அத்துறையின் தலைவராகவும் பணியாற்றினார். இக்கல்லூரியில் பணியைத் தொடங்கியது முதலே ஆசிரியர் இயக்கத்தில் பல்வேறு பொறுப்புகளில் தன்னை முழுமையாக இணைத்துக் கொண்டு செயலாற்றினார்.

1991ல் ஆச்சாரியா வினோபாபாவே அவர்களைப் பற்றிப் பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் ஆய்வு செய்து முனைவர் பட்டம் பெற்றார். 1993 முதல் 1995 வரை சென்னைப் பல்கலைக்கழகத்தில் சைவசித்தாந்தத்துறைத் தலைவராகப் பணியாற்றினார். 2006 முதல் திருச்சி பாரதிதாசன் பல்கலைக்கழகத் தொலைநிலைக்கல்வி மையத்தின் இயக்குநராகப் பணியாற்றி வருகிறார்.

பல்வேறு கருத்தரங்குகளை நடத்தியும் ஆய்வுக்கட்டுரைகளை வழங்கியும் உள்ளார். இவர் எழுதிய 'உமாபதி சிவாச்சாரியாரின் திருவருட்பணி' எனும் நூலைச் சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ளது. மனைவி மற்றும் இரண்டு மகள்களுடன் திருச்சியில் வசிக்கிறார். சுமார் 30 வருடம் ஆசிரியர் பணியில் தன்னை ஐக்கியப் படுத்திக் கொண்டுள்ளார்.

# பொருளடக்கம்

| | | பக்கம் |
|---|---|---|
| | முகவுரை | |
| | ஆசிரியர் குறிப்பு | |
| 1. | தத்துவ அறிமுகம் | 1 |
| 2. | உலகத் தோற்றம் | 20 |
| 3. | உடல் தத்துவம் | 31 |
| 4. | பிராணன் தத்துவம் | 43 |
| 5. | மனம் என்னும் தத்துவம் | 48 |
| 6. | அறிவு என்னும் தத்துவம் | 62 |
| 7. | ஆனந்தம் என்னும் தத்துவம் | 72 |
| 8. | செயல் தத்துவம் | 81 |
| 9. | வினைப்பயன் தத்துவம் | 99 |
| 10. | பாலியல் தத்துவம் | 107 |
| 11. | மாயை என்னும் தத்துவம் | 116 |
| 12. | ஞானியர் நிலை | 125 |
| 13. | நிறை வாழ்வு | 130 |
| | பயன்பட்ட நூல்கள் | |

# 1. தத்துவ அறிமுகம்

தத்துவம் மதத்தின் அறிவுக்கூறுகள் நிரம்பிய பகுதியாகும். அது இந்திய மதங்களின் சாராம்சம் செறிந்த பகுதியாகும். அது உண்மைப்பொருளின், பேருண்மைப் பொருளின் இயல்பிற்குள் மேற்கொள்ளப்படும் நியாயமும் உத்தியும் தழுவிய தேடுதல்கள் ஆகும். அது வாழ்வின் நுணுக்கமும் ஆழமும் மிக்க சிக்கல்களுக்குத் தெளிவான தீர்வுகளை வழங்குகிறது. அது துன்பம், மரணம் ஆகியவற்றினின்று விடுபடுவதற்கான வழியினைக் காட்டிச் சாகா நிலையையும், அழியாப் பேரின்பத்தையும் பெறும் வண்ணம் உதவுகிறது. தத்துவஞானம் மனிதன் செயல்படுவதற்கான தேவைகளில் வேர் ஊன்றித் தழைக்கிறது. மனிதன் சிந்திக்கத்தக்க நிலையில் இருக்கும்பொழுது மேம்பாடான விஷயங்களைப் பற்றி அறிந்து கொள்ள விரும்புகிறான். மரணத்தைப் பற்றிய மர்மம், சாகாநிலை பற்றிய இரகசியம், ஆன்மா, உயிர், படைப்புப் பொருள், உலகம் ஆகியவற்றின் இயல்பு முதலியவைகளைப் பற்றித் தெரிந்துகொள்வதற்கான உந்துசக்தி அவனிடம் இயல்பாகவே குடிகொண்டிருக்கிறது. இவைகளைப் பற்றி அறிய, தத்துவம் அவனுக்கு உதவி புரிகிறது. மனிதனிடம் உள்ள வளர்ந்தோங்கும் மன எழுச்சிக்கான சுய விளக்கமே, தன்னொளியே தத்துவமாகும்.

தத்துவ அறிஞர்கள், ஆராய்ச்சியாளர்கள், தத்துவம் முழுதறிந்தவர் என்று கொண்டாடப்படும் ஞானிகள் யாவரும் அதன்குரலில், அதாவது தத்துவத்தின் குரலில் பேசுகின்றனர். மாபெரும் ஆக்கப் பூர்வமான சிந்தனையாளர்கள், தத்துவ வித்தகர்கள், காலந்தோறும் தோன்றுகின்றனர். அவர்கள் மக்களை ஊக்குவிக்கின்றனர்; உயர்த்துகின்றனர்; உயர்வு பெறச் செய்கின்றனர்.

மனிதனின் உள்ளத்தில் சில தத்துவஞான வினாக்கள் முளைத்தெழுகின்றன. சம்சாரம் என்றால் என்ன? அதன் நோக்கம் அல்லது காரியந்தான் என்ன? உலகம் உண்மையானதா அல்லது வெறுந்தோற்றமா?

படைப்புக் கர்த்தா அல்லது அண்டங்களை ஆட்டிப் படைக்கும் அதிகாரி யாரேனும் உண்டா? அவ்வாறு ஒரு படைப்போன் இருப்பின் அவனது இயல்புதான் என்ன? பதி என்று கூறப்படுகின்ற இறைவனுக்கும், பசு என்று கருதப்படுகின்ற மனிதனுக்கும், (சீவனுக்கும்) இடையே ஏதாவது உறவு உண்டா? பிறப்பு - இறப்புச் சுழற்சியினின்று விடுபட ஏதேனும் வழி உண்டா? மனிதனுக்கு அப்பாற்பட்ட பொருளைக் குறிக்கும் ஏதேனும் முழுமுதற்பொருளாம் பரம்பொருள் உண்டா? அவ்வாறு இருப்பின் அதன் சிறப்பான இயல்புதான் என்ன? இப்பாசக்கட்டு அல்லது உலக வலைக்குள் மனிதன் எவ்வாறு சிக்கிக்கொண்டான்? அவனது சிறப்பியல்பு யாது? அவன் பரம்பொருளின் ஒரு கூறா? அல்லது அவனும் அதுவும் ஒன்றா? மனிதனைக் குறிக்கும் ஆண்டவனுக்கும், அனைத்துப் பொருள்களுக்கும் அப்பாலுக்கப்பாலாய் விளங்கும் எல்லையற்ற பரம்பொருளுக்கும் இடையேயுள்ள வேறுபாடுதான் என்ன? இந்த அண்டத்திற்கான மூலப்பொருள் யாது? பொருள் என்றால் என்ன? மனம் என்பது யாது? தனித்த ஆன்மா என்று ஒன்று உண்டா? வாழ்வின் இறுதி இலட்சியம் என்ன? இவ்வகைப் பிரச்சனைகள் அல்லது சிக்கல்களின் தீர்க்கமான தீர்வுக்கான ஆராய்ச்சிக்குத் தத்துவஞானம் என்று பெயர். இவ்வகை ஞானம் நேர்த்தியான சிறப்பான முறையில் எல்லாவகையான பிரச்சனைகளுக்கும் முடிச்சுகளுக்கும் தீர்வு காண்கின்றது.

இந்தியத் தத்துவங்கள் தற்சார்புடையவை. பிற மேலைநாடுகளின் தாக்கமில்லாமல் தனக்கு வேண்டிய, தேவைப்பட்ட தத்துவங்களை இந்தியா தானே உருவாக்கிக் கொண்டுள்ளது. இந்தியத் தத்துவங்கள் "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற உலகந்தழுவிய நிறைமொழியை, மறைமொழியை உட்கருவாகக் கொண்டு முகிழ்ந்தவை. இத்தத்துவங்கள் வாழ்வின் உறுதிப்பேறுகளில் மையங்கொண்ட நாட்டத்தின், தேடுதலின், வினவுதலின் அடிப்படையில் விரிவடையும் வட்டம் போன்று உருவானவை. வாழ்வியலோடு பின்னிப் பிணைந்துள்ள, இலைமறைகாயாக விளங்கிக்கொண்டிருக்கின்ற தன்ஒளிமிக்க இயற்கை நெறிமுறைகளை அடித்தளமாகக் கொண்டு எழுந்த எழின் மாடங்களாகும்; கூடங்களாகும். எனவே வாழ்க்கை வேறு தத்துவங்கள் வேறு என்று பிரித்தறிய இயலாது. பழமும் பழச்சுவையும் போல உடனாய் விளங்குபவை. எனவே இத்தத்துவங்களில் சகிப்புத் தன்மையைப் போற்றும் பண்பு மேலோங்கியிருப்பதைக் காணலாம்.

இந்தியத் தத்துவங்கள் யாவும் வேதப்பாசுரங்களில் இருந்தும் அவற்றின் உயர் ஆன்மீக நெறியிலிருந்தும் பிழிந்தெடுக்கப்பட்டவை என்று கருதுவது மிகவும் தவறான நம்பிக்கையாகும். தத்துவங்கள் எந்த நாட்டிற்கு உரியவைகளாக இருந்தாலும் மனித இனத்தின் இயற்கையான வளர்ச்சியோடு இணைந்து வளர்பவை என்பதுதான் முற்றிலும், மெய்யானதும், எல்லோராலும் ஒப்புக்கொள்ளத்தக்கதும் ஆகும். ஏனெனில் தத்துவங்கள் விளங்காத காலத்திலும் மனித இனம் வாழ்ந்துள்ளது. எள்ளிலிருந்து எண்ணெய்யைப் பிழிந்து எடுத்ததுபோல வாழ்வியல் அனுபவங்களின் திரட்சியிலிருந்து கனிந்தவைதான் தத்துவங்கள். அப்படிப்பட்ட தத்துவங்கள்தான் நின்ற உண்மைகளாகும். இந்தியத் தத்துவங்கள் மதத்தைச் சார்ந்தும், மதத்தைச் சாராமலும் இருக்கின்றன என்பதையும் உளங்கொள்ளவேண்டும்.

இந்தியாவின் நெடிய வரலாற்றைப் படித்துணர்ந்த பண்பாளர்கள் ஓர் உண்மையைத் தெள்ளிதின் உணரலாம். அஃதாவது, பழம்பெரும் நாடான இப்பாரதநாட்டில் தத்துவ சகிப்புத் தன்மையும் சமயப் பொறையும் ஒருங்கே நிலவி வருகின்றன என்பதே அவ்வுண்மை. எந்தப் பொருளையும் காரண காரியத்தோடு விளக்குவதற்கு இந்தியாவில் தோன்றி வளர்ந்து பரவிய மதங்கள் தவறியதில்லை. எனவே பிறர் கருத்துகளையும் செவிமடுக்கும் பண்பு சகிப்புத்தன்மையின் இலக்கியமானது. எந்த ஒரு தனிமனிதனும், அமைப்பும் தன் கருத்துகளைக் கூறுவதற்கும் அதைப் பின்பற்றுவதற்கும் சமயங்கள் தடையாக நிற்கவில்லை. நின்றவையும் நிற்க இயலவில்லை. அதனால்தான் முரண்கோட்பாட்டாளர்கள், ஐயுறவுக்கொள்கையாளர், கடவுள் மறுப்புக் கொள்கையினர், பகுத்தறிவு நெறியினர், பொருள் முதல் வாதிகள், இன்பக்கோட்பாட்டினர், ஆகிய பலதரப்பட்ட தத்துவமுடையாரும் வாழ்வும் வளர்ச்சியும் பெற முடிந்தது.

இந்தியத் தத்துவங்கள் கால அடிப்படையில் மூன்று கட்டங்களாகப் பிரித்து அறியப்பட்டு வருகின்றன. கி.மு. 1500 முதல் கி.மு.600 வரையிலுள்ள காலத்தில் தோன்றியவைகளை வேதகாலத் தத்துவங்கள் என்றும், கி.மு.600 முதல் கி.பி.200 வரையிலான நானூறு ஆண்டுக் காலங்களில் தோன்றிய காவியங்கள் கூறும் தத்துவங்கள் காவியக்காலத் தத்துவங்கள் என்றும் கி.பி. இரண்டாம் நூற்றாண்டிற்குப் பின் தற்போது வரையிலும் கூறப்பட்டும், பயிலப்பட்டும், போற்றப்படுவதுமான தத்துவங்கள்

கற்றறிவாளர் தத்துவங்கள் என்றும் டாக்டர் இராதாகிருட்டிணன் வகைப்படுத்துகிறார். இந்த வரையறைகள் முறையானவைகளா? சரியானவைகளா? என்று ஆராய்ச்சியில் காலங்கழிப்பது வீண் வேலையாகும். அவை தத்துவங்களை உணர்ந்து கொள்ள ஓரளவு உதவும் என்பதில் கருத்து வேறுபாடு வேண்டியதில்லை.

மதம்சார்ந்த அறுவகை இந்தியத் தத்துவமுறைகள் அல்லது அறுவகைத் தரிசனங்கள் எனப்படுபவை தத்துவத்தின் அறுவகை வைதீக ஏற்பாடுகளாகும். தத்துவ வைதீக முறைகள் வேதாந்தங்களின் அதிகாரத்தில் நம்பிக்கை கொண்டுள்ளன. இந்த ஆறு தரிசனங்களும் நித்தியமாயுள்ள சத்தியப் பொருளைக் காணும் வழிகளாகும். அவை,

பூர்வ மீமாம்சம்
உத்திர மீமாம்சம்
சாங்கியம்
யோகம்
வைசேடிகம்
நியாயம் அல்லது (இந்திய வாதம் ) என்பனவாகும்.

இன்னொரு ஆறுவகைத் தரிசனங்கள் மத நம்பிக்கையில்லாதவை. வேதங்களின் அதிகாரத்தை, ஆதிக்கத்தை மறுப்பவை. வையத்தில் வாழ்வாங்கு வாழ மனிதனுக்கு உதவும் உயர்ந்த கோட்பாடுகளையும் ஒழுக்க நெறிகளையும் வகுத்துக் கூறுபவை. வேதத்தை அடிப்படையாக ஏற்றுக் கொள்ளாத தரிசனங்கள் முறையே,

1. சாருவாகத்தின் உலகாயுதக் கொள்கை
2. மாத்யமிகர்களின் சூன்யவாதக் கொள்கை
3. யோகாசாரத்தின் இலட்சிய வாதக்கொள்கை
4. வைபாஷிகர்களின் பிரதிநிதிகளின் கொள்கை
5. சாத்ராணிகத்தின் நிரூபண வாதிகளின் கொள்கை
6. ஜெயினரின் கொள்கை

என்பவையாம். இங்கு வரிசையாகக் கூறப்பட்டவற்றுள் இடைப்பட்ட(2-5) நான்கு கொள்கைகளும் புத்தரின் கொள்கைகளாகும்.

இந்த இரண்டு வகையான தரிசனங்களும் இந்திய மக்களால், தத்தம் விருப்பத்திற்கேற்பப் பின்பற்றப்படுகின்றன. வேதத்தை ஏற்றுக்கொண்ட தரிசனங்கள் உயர்ந்தவையா? வேதத்தை அங்கீகாரம் செய்யாத தத்துவங்கள் உயர்ந்தவையா? அதன் அதன் போக்கிலே அது அது நடைபெற்று வருகிறது. உயர்வு தாழ்வு கற்பிப்பதால் யாதொரு பயனும் இல்லை. பிணக்குகளே மலியும். எனவே சத்திய நாட்டம் மட்டுமே பிரதானமாக இருக்கவேண்டும்.

அறுவகை வைதீக ஏற்பாடுகள் நேரடியாகவே வேதங்களிலிருந்து வளர்ந்து ஓங்கின. 'தரிசனம்' என்றால் காட்சி அல்லது பார்வை என்று பொருள்படுகிறது, தரிசனம் என்பது ஓர் தத்துவமுறை. தரிசனத்தை ஒட்டிய இலக்கியம் இறைத் தத்துவமணம் நிறைந்தது. ஒவ்வொரு தரிசனமும் உண்மைப்பொருளாம் பரம்பொருளைக்காணும் வழி அல்லது நோக்கு நிலையாகும்.

கௌதம முனிவர் இந்தியத் தருக்கம் அல்லது நியாயத்தின் அறநெறிக்கொள்கைகளை (விதிகளை) ஒழுங்குபடுத்தியுள்ளார். காணாதர் வைசேடிக சூத்திரங்களைத் தொகுத்துள்ளார். கபிலமுனிவர் சாங்கிய ஏற்பாட்டினை உண்டாக்கினார். பதஞ்சலியின் யோக சூத்திரங்கள் வேதத்தின் சடங்குகளை ஒட்டிய பிரிவுகளை அடிப்படையாகக் கொண்டவை. அவை வியாசபகவானின் சீடரான ஜெய்மினி என்பவரால் இயற்றப்பட்டவை. வேதாந்தத்தின் வெவ்வேறான கொள்கைகள் தம்தம் கடவுள் தத்துவங்களை இச்சூத்திரங்களின் அடிப்படையில் வைத்துக் காட்டியுள்ளன.

மக்களின் வெவ்வேறான இயல்புகள், ஆற்றல்கள், மனோசக்திகள், ஆகியவற்றிற்கேற்ப இலட்சியத்தை அணுகுவதற்கான வழிகள் அல்லது முறைகள் வேறுபடுகின்றன. ஆனால் அவைகள் எல்லாவற்றிற்கும் ஒரே ஒரு நோக்கம்தான் உண்டு. அதாவது அஞ்ஞானத்தைப் போக்குதல், அதன் பலன்களாகிய தொல்லைகள், துன்பங்கள் ஆகியவற்றை அகற்றுதல், விடுதலை பெறுதல், முழுத் தன்மையடைதல், இறுதியில் ஞானத்தின் மூலம் அழியாப் பேரின்பத்தை அடைதல்.

இந்தத் தத்துவ முறைகளைக் கற்றல் கூரிய அறிவையும், பரந்த அறிவையும் அளிக்கும். உண்மைப் பொருளைப் பற்றிய பரந்த தெளிந்த அறிவு உண்டாகும். மனத்தின் கண் பொதிந்துள்ள அறிவு மேலோங்கி, அதனால் பெறும் இன்பம் பன்மடங்காகப் பெருகும்.

நியாய தத்துவமும், வைசேடிக தத்துவமும் உலக அனுபவங்களைக் கூறுபடுத்திக் கொடுக்கின்றன. அவை உலகப் பொருள்களைச் சிற்சில வகைகளாக வரிசைப்படுத்தியுள்ளன. அணுக்கள், பரமாணுக்கள் ஆகியவற்றால் சரீர சம்பந்தமான உலகம் படைக்கப்பட்டிருக்கிற விதத்தை விளக்குகின்றன. சாங்கியம் உளநூல் பண்பினை உடையது. மனத்தின் செயல்கள் அல்லது எண்ண அலைகள், தியானம் ஆகியவற்றைக் கையாளும் முறைபற்றி யோகம் எடுத்துரைக்கின்றது. மனத்தையும் புலன்களையும் ஒரு கட்டிற்குள் கொண்டு வருவதற்கு உரிய வழிமுறைகளை யோக ஏற்பாடு கற்பிக்கிறது.

ஒவ்வொரு தத்துவமும் ஞானத்தின் மூலம் அஞ்ஞானத்தை, பொய்யறிவை ஒழிப்பதிலேயே கண்ணுங்கருத்துமாய் உள்ளன. அதன் பின்னரே ஒருவன் அழியாத்தன்மையையும் நிலையான பேரின்பத்தையும் அடைகின்றான். நியாயம், வைசேடிகம் ஆகியவை வேதங்களை உயரிய அதிகாரம் பெற்றதாக ஒப்புக்கொண்ட போதிலும் அவைகள் பகுத்தறிவின் மீது அதிக நம்பிக்கை கொண்டுள்ளன. மனித அறிவு பலவீனமுடையது. பிழைபடக்கூடியது. வரம்புடையது. அதற்கென்று சொந்த எல்லையுடையது. அது காலம், வெளி அல்லது இடம், காரணம் ஆகியவைகளால் அடைக்கப்பட்ட வேலிக்குள் செயல்படுகிறது. பகுத்தறிவின் கண்டுபிடிப்புகள் தீங்கு விளைவிக்காது, எனினும் உலகியல் அறிவுக்கு மேற்பட்ட விஷயங்களைத் தீர்க்கும் ஆற்றல் உடையதாக இல்லையென்று ஆன்மீக உலகம் கருதுகின்றது.

எல்லா அறிவும் நான்கு எல்லைகளாகக் குறித்துக் காட்டுகின்றன. அவை,

1. அறிபவன் (கர்த்தா)
2. அறியப்படும் பொருள் (பிரமேயம்)
3. அறிவதன்மூலம் உண்டாகும் பயன்தரும் நிலை (பிரமிதி).
4. அறிவுக்கான வழி (பிரமாணம்) என்பவையாம்.

நேர்மையான அறிவினால் பெறப்படும் பொருள்கள் பன்னிரண்டு என்று கூறப்படுகின்றது. அவை

1. ஆத்மன்
2. உடல்

3. புலன்கள்
4. புலன்களுக்கான பொருள்கள் (அர்த்தம்)
5. புத்தி
6. மனது
7. செயல் (பிரவிர்த்தி)
8. பிழை (தோஷம்)
9. மறுபிறப்பு
10. பலன்
11. துக்கம்
12. முக்தி (விடுதலை) ஆகியவையாகும்.

அறிவுக்கான வாயில்கள் (1)புலப்பாடு (பிரத்தியட்சம்) (2)அனுமானம் (3) உவமானம் (4)சப்தம் என்பவனவாம். சப்தம் என்பது சப்தத்தில் வேதநீதியிலான புலப்பாடு. பிரத்தியட்சம் என்பது புலன்கள் மூலம் அறிவு பெறுதல்.

அறிவின் எல்லைகள், அறிவினால் பெறப்படும் பொருள்கள் அல்லது அடையப்படுபவை மற்றும் அறிவின் வாயில்கள் இவையாவும் மானுட வாழ்வில் ஏதோ ஒரு விதத்தில் அனுபவமாகின்றன. எனினும், சிந்தித்துப் பார்க்கும் வழக்கம் இல்லை. வாழ்க்கையின் ஓட்டம் அவர்களுக்கு அந்த ஆர்வத்தை உண்டாக்குவதில்லை. எனவே பெரும்பாலோர் தத்துவத் தரிசனங்களில் ஈடுபட முடிவதில்லை. தத்துவத் தரிசனங்களில் நாட்ட முடையவரைத் தத்துவ ஞானி என்கிறோம்.

யார் யாரெல்லாம் தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபடலாம், யார் யாரெல்லாம் தத்துவம் கற்கலாம் என்பதற்கு எந்த வரையறையும் இல்லை. மெய்ப்பொருள் உண்மை - தத்துவம் - யாரால் பகரப்படுகிறது, யாரால் கற்கப்படுகிறது என்பதும் ஆராய்ச்சிக்குரியதன்று. அது தேவையுமன்று. கீழ்ப்பால் ஒருவன் பகரலாம். மேல்பால் ஒருவன் கேட்டு ஒழுகலாம். மேற்பால் ஒருவன் பகரலாம். கீழ்ப்பால் ஒருவன் கேட்டு ஒழுகலாம். பலபிணியும் சிற்றறிவும் உடைய மனிதகுலச் சிக்கல்கள் தீர்ந்து, வாழ்வு மேம்பட விரும்பும் எந்த ஒரு மனிதனும் தத்துவம் பகரலாம். நாட்டமுடைய ஒருவன் கற்றுப் பயன் அடையலாம்.

தத்துவ ஞானி என்பவர் தத்துவம் மிகுந்தவர். நின்ற உண்மையை அறிந்து அதனால் நிறைந்து நிற்பவர். தத்துவஞானியும் சராசரி மனிதர்

போன்றவர்தான், எனினும் அவர் ஆழ்ந்து சிந்திப்பவர். மிகவும் பிடிவாதம் உள்ளவர். மலை அசையினும் தான் அசையா உறுதிப்பாடுடையவர்.

தத்துவஞானி வில்லியம் ஜேம்ஸ் அவர்களின் கூற்று இவ்விளக்கத்திற்கு அரணாக அமைகிறது. "காணவியலாத பிடிவாதத்துடன் நிலையாக, சலனப்படாமல் எதைப்பற்றியும் விருப்பு வெறுப்பின்றி ஆழமாக அடித்தளம் வரை சென்று சிந்திக்க முயலும் பண்புடையவர் தத்துவஞானி" என்று உரைக்கின்றார். கீழை நாட்டறிஞர்களும் அதை ஏற்றுக் கொள்கின்றனர். மெய்ப்பொருள் நாட்டத்தில் அதாவது தத்துவ நாட்டத்தில் கண்ணும் கருத்துமாயிருப்பவர் சாதி, இனம், மொழி, சமயம் ஆகிய எவற்றிலும் சிக்கிக் கொள்ளமாட்டார் என்பது வெள்ளிடைமலை. காலங்காலமாக நின்று நிலவிவரும் அடிநிலை உண்மையை (நின்ற உண்மையை) எந்த ஒரு மனிதனாலும் மாற்றி அமைக்கவோ திரிவுபடுத்தவோ இயலாது. கடலளவு கற்றவர் எனினும், மலையளவு உயர்ந்தவர் எனினும் நிலம், நீர், தீ, வளி, வான் என்று அமைந்து கிடக்கின்ற இயற்கைக் கூறுகளை வயப்படுத்தியவர் எனினும், இன்னும் பிறவாற்றான் திறம் உடையவர் எனினும் நின்ற உண்மையை அழித்து எழுதவோ, மறித்துப் பகரவோ முடியாது என்பதை யாவரும் ஒப்புக்கொள்ள வேண்டும்.

இந்தியாவில் காலங்காலமாகப் பயின்று வரும் தத்துவங்கள் 96 என்பர். கூட்டியும் குறைத்தும் கூறுபவர் உண்டு.

**96 தத்துவங்கள்,**

1. பஞ்சபூதங்கள் (5)
   நிலம், நீர், தீ, வளி, வான்
2. கர்மேந்திரியங்கள் (5)
   மொழி, கை, கால், எருவாய், கருவாய்
3. ஞானேந்திரியங்கள் (5)
   மெய், வாய், கண், மூக்கு, செவி
4. தன்மாத்திரைகள் (5)
   சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்
5. அந்தக்கரணங்கள் (4)
   மனம், புத்தி, சித்தம், அகங்காரம்

6. நாடிகள் (10)

இடைகலை, பிங்கலை, சுழிமுனை, அத்தி, சிங்கு, புருஷன், காந்தாரி, அலம்புருடன், சங்கினி குருதன்

7. வாயுக்கள் (5)

பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன்

8. உபவாயுக்கள்

நாகன், கூர்மன், குருகரன், தேவதத்தன், தனஞ்செயன்

9. ஆச்ரயங்கள் (5) (கழிவுகள்)

அமராச்ரயம், விபஜனாச்ரயம், ஜலாச்ரயம், மலாச்ரயம், சுக்கிலாச்ரயம்

10. கோசங்கள் (5) (அடுக்குகள்)

அன்னமயம், பிராணமயம், மனோமயம் விஞ்ஞான மயம், ஆனந்தமயம்.

11. ஆதாரங்கள் (7)

மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிப்பூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞேயம், சகஸ்ராரம்

12. தோஷங்கள் (3)

வாதம், பித்தம், சிலேத்துமம்

13. ஈஷணாத்திரங்கள் (3) (இச்சைகள்)

திரேஷண, புத்திரேஷண, வித்தேஷண

14. குணங்கள் (3)

சாத்வீகம், இராஜஸம், தாமசம்

15. தீயகுணங்கள் (14)

இராகம், துவேஷம், காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சர்யம், டம்பம், தாம, ஈர்ஷை, அசூயை, ஆங்காரம், மமகாரம்

16. விளைவுகள் (2)

நல்வினை தீவினை

17. அவத்தைகள் (5)

ஜாக்ரதம், சொப்னம், சுஷீப்தி, துரியம், துரியாதீதம்

அறுபத்து நான்கு கலைகள்

1. அக்கர இலக்கணம்
2. இலிகிதம்
3. கணிதம்
4. வேதம்
5. புராணம்
6. வியாகரணம்
7. நீதிசாத்திரம்
8. சோதிடசாத்திரம்
9. தருமசாத்திரம்
10. யோகசாத்திரம்
11. உருவசாத்திரம்
12. மந்திர சாத்திரம்
13. சகுனசாத்திரம்
14. சிற்ப சாத்திரம்
15. வைத்திய சாத்திரம்
16. இதிகாசம்
17. காவியம்
18. அலங்காரம்
19. மதுரபாடனம்
20. நாடகம்
21. நிருத்தம்
22. சத்தப்பிரம்மம்
23. வீணை
24. வேணு (புல்லாங்குழல்)
25. மிருதங்கம்
26. தானம்
27. அத்திர பரிட்கைஷ
28. கனக பரிட்கைஷ
29. இரத பரிட்கைஷ
30. கஜ பரிட்கைஷ
31. அசுவ பரிட்கைஷ

32. இரத்தின பரிட்சைஷ
33. பூமி பரிட்சைஷ
34. சங்கிராம இலக்கணம்
35. மல்யுத்தம்
36. ஆகருடணம்
37. உச்சாடணம்
38. வித்து வேடணம்
39. மதசாத்திரம்
40. மோகனம்
41. வசீகரணம்
42. இரசவாதம்
43. காந்தருவ வாதம்
44. பைபீல வாதம்
45. கவுத்தக வாதம்
46. தாதுவாதம்
47. காருடம்
48. முட்டி
49. நட்டம்
50. ஆகாயப்பிரவேசம்
51. ஆதாய கமனம்
52. பரகாயப் பிரவேசம்
53. அதிரிசயம்
54. இந்திர ஜாலம்
55. மகேந்திர ஜாலம்
56. அக்கினித் தம்பம்
57. ஜலத் தம்பம்
58. வாயுத் தம்பம்
59. திட்டித் தம்பம்
60. வாக்குத் தம்பம்
61. சுக்கிலத் தம்பம்
62. கன்னத் தம்பம்
63. கடகத் தம்பம்
64. அவத்தைப் பிரயோகம்

என்பனவாகும். மேற்கண்டவாறு பட்டியலிடப்பட்ட தத்துவங்களைப்

பகுத்தும், வகுத்தும், கூட்டியும், குறைத்தும் சமய வாதிகள் தத்தமக்கேற்றவாறு கற்றும் கற்பித்தும் பின்பற்றியும் வருகின்றனர். சமயத்தால் கட்டுப்படுத்தப்பட்ட அல்லது சமயச்சார்புடைய தத்துவங்கள் அந்த அந்தச் சமயத்தினரால் மட்டுமே போற்றப்படும். எத்தனை உயர்ந்ததென்று போற்றப்பட்டாலும், அயல் மதத்தினர் அவற்றைப் பொருட் படுத்துவதில்லை. அவரவர் மதம் அவரவர்க்குப் பெரிது. இதனால் யாரும் யாரையும் குறை கூறவோ குற்றம் சாட்டவோ தேவையில்லை. அவரவர் வழியில், தடத்தில் பயணம் செய்து பயன் அடையலாம்.

கூறப்பட்ட அறுபத்து நான்கு கலைகளும் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்ட செயல்முறைகளாகும். கலை, தொழிலாகவும், தொழில் கலையாகவும் பயன்படும் தன்மைக்கேற்ப மாறி நிற்பதும் உண்டு. கட்டடக்கலையின் அழகு தாஜ்மஹால். கட்டுவது தொழில். கட்டப்பட்டது அழகான கலைப்பொருள். இவ்வாறே சிற்சில கலைகள் தொழிலாகவும், தொழில் கலையாகவும் உருமாற்றம் அடைவது எண்ணி மகிழத் தக்க ஒன்றாகும். கலையாயினும், தொழிலாயினும் எல்லாவற்றையும் ஒரு மனிதன் தன்வாழ்நாளில் கற்றுத் தேர்ச்சியடைந்து அதனால் பயன் அடைவது என்பது இயலவே இயலாது. ஓரிரு கலைகளைக் கற்று, தானும், சமுதாயமும் மேம்பாடடையும்படி வாழ்ந்தாலும் அது பாராட்டுதலுக்குரிய, போற்றுதலுக்குரிய வாழ்க்கையாக அமையும்.

ஞானவெட்டியான் என்னும் தமிழ் நூல் மேற்கூறப்பட்ட தொண்ணூற்றாறு தத்துவங்களையும் உடலில் கண்டு விளக்குகிறது, அவற்றுள் பெரும்பாலோர் படித்திராத ஒருசிலவற்றிற்கு ஞானவெட்டியானில் கண்டுள்ளவாறு விளக்கம் கூறலாம். இடைகலை, பிங்கலை, சுழிமுனை, அத்தி, சிங்கு, புருஷன், காந்தாரி, அலம்புருடன், குருதன், சங்குனி ஆகியவைகள் தசநாடிகள் எனப்படுகின்றன. இவற்றுள் இடைகலை இடதுபெருவிரல் மேலும், பிங்கலையானது வலது பெருவிரலிலும் சுழிமுனை சுத்தமாகிப் பரஞ்சுடர் ஒளிமேலும் ஓங்காரமாய்ச் சுற்றியே நிற்கும். காந்தாரி நாடியானது கண்டத்தினின்று கலந்து, நீர் பாய்ந்திடும். அத்தியும், சிங்குவையும் ஆகிய நாடிகள் அவத்தைகள் நான்கையும் (ஜாக்ரதம், சொப்பனம், சுஷீப்தி, துரியம்) அறிவிப்பதாகும். அவத்தை என்பது நிலைமாற்றமாகும்.

இவற்றுள் சிங்குவை அப்புவின் மயமாய் நின்ற நிறமும் சலநிறமேயாம். சொல்லப்பட்ட அலம்புருடன் என்னும் நாடி இரண்டு கண்களிலும் பொருந்தும். காந்தாரி என்னும் நாடி காதளவாய் நிற்கும். அத்தி என்னும் நாடி வலபாரிசத்தினின்று பின் வேண்டிய அளவாய் அமைந்து பிரம்மவித்தையைப் போல் உயிரையும் புலன்களையும் இயக்கும். சங்குனியானது தாள் பக்கத்திலிருந்து அழகிய இலிங்கத்தின் சார்பாய் நிற்கும். குருதன் நாடி ஆனந்தத்தை விளைவிக்கும்.

நாடி எனப்படுவது பத்து நரம்புகளும் ஒன்றாகக் கூடி யாக்கையைப் பலப்படுத்தி நடத்துவதாகும். அவை நீண்டு உலாவும் அசையும், தடுக்கும், எப்பொழுதும் சொந்தமாய் நரம்பானது அசையும், மடக்கும், நடந்தோடி நகர்ந்து புரண்டோடி ஒன்றாகச் சேர்ந்து இழுக்கும். இச்செய்கைகளே அன்றி, இந்நரம்புகள் நீண்டு மாறி மாறி ஏறிப்படுக்கும். இங்ஙனமாக, தசநாடிகளும் தத்தம் நெறிப்படி உடலில் இயங்குகின்றன.

அடுத்து, தச வாயுக்கள் பற்றி அறியலாம். அவை பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், கூர்மன், நாகன், திரிகரன், தனஞ்செயன், தேவதத்தன் ஆகிய பத்து வாயுக்கள். பிராண வாயுவானது மூலாதாரத்தின் மேல் தொடர்ந்தோங்கிப் பன்னிரண்டங்குலம் வெளிப்பாயும். இப்பன்னிரண்டங்குலத்தில் எட்டங்குலம் நின்றும் நான்கு அங்குலம் வெளியிலுமோடும். அபானன் மலசலத்தை அறிந்து வெளியேற்றும். வியானன் உண்டசாரத்தைப் பிரித்தெழுப்பி எழுபத்திரண்டாயிரம் நாடிக்கும் ஊட்டும். உதானன் அவைகளைச் செரிக்கச் செய்யும். சமானன் குற்றங்குறைகளைக் களைந்து சரிப்படுத்தும். நாகன் விக்கல், சோம்பல் இவைகளை உண்டாக்கும். கூர்மன் கண்ணில் தங்கி இமைக்கச் செய்யும். திரிகரன் கோபத்தை உண்டாக்கும். தேவதத்தன், கொட்டாவி, சிரிப்பு முதலியவற்றை உண்டாக்கும். தனஞ்செயன் உச்சியில் தங்கி வாழ்ந்து ஆன்மா அடங்கிய பின் சிரசின் வழியாகப் போகும் குணமுடையது.

இனி ஐந்து வசையங்கள் பற்றி ஒரு சிறிது அறிவோம். மாவசையம், பருவசையம், மலவசையம், சலவசையம், சுக்கில வசையம் என்பன ஐந்து வசையங்களாகும். இவை மானுட உடலைப் போற்றி வளர்ப்பதில் பெரும் பங்கு வகிக்கின்றன. சோறும் சலமும் இருக்கிற இடம் மாவசையம் ஆகும். அவைகளைப் பிரிக்கும் இடம் பருவசையம் எனப்படும். மலம் சேருமிடம் மலவசையம் என்றும் சிறுநீர் சேருமிடம் சலவசையம் மற்றும் விந்து சேருமிடம் சுக்கில வசையம் என்றும் கூறப்படுகின்றன.

உடம்பு கோசங்கள் எனும் அடுக்குகளால் ஆனது. கண்ணுக்குப் புலனாகும் அன்னமய உடம்பு முதல் கோசம். அன்மைய கோசத்தில் பிராணமய கோசமும், பிராணமய கோசத்தில் மனோமய கோசமும், மனோமய கோசத்தில் விஞ்ஞான மய கோசமும், அதனில் ஆனந்த மயகோசமும் ஒன்றுள் ஒன்றாக அழகாக அமைந்துள்ளன. பிராணமயம் காற்றுடன் செயல்படும் சக்தி ஓட்டமாகும். முறையான தியானப் பயிற்சியின் மூலம் இந்தக் கோசங்களை அழகாக உணரமுடியும்.

உடல், மனம், சக்தி ஆகிய மூன்றும் ஒன்றாக ஓருடலில் ஏழு இடங்களில் சந்தித்துக் கொள்கின்றன. இவைதான் சக்தி மையங்கள். இவைகளே ஆதாரங்கள் என்றும் சக்கரங்கள் என்றும் இயம்பப்படுகின்றன. உடல், மனம், சக்தி ஆகிய மூன்றும் சக்கரங்களில் பின்னிப்பிணைந்து சக்தி ஓட்டத்திற்கு ஒரு ஒழுங்கை ஏற்படுத்துகின்றன. இவைகளை ஆராய்ச்சிப் பொறிகளின் வாயிலாகக் கண்டறிய இயலாது. குருவின் வழிகாட்டுதலின்படி தியானப் பயிற்சியின் மூலம் இச்சக்கரங்களை விழித்தெழச் செய்யலாம். இவை அளவு கடந்த நன்மையையும் ஆனந்தத்தையும் தரவல்லவை.

இச்சக்கரங்கள் முதுகெலும்பின் அடி நுனியிலிருந்து உச்சந்தலை வரை வரிசையாக அமைந்திருக்கின்றன. அவை,

1. மூலாதார சக்கரம் (Root Chakra)
2. சுவாதிஷ்டான சக்கரம் (Spleen Chakra)
3. மணிப்பூர சக்கரம் (Navel Chakra)
4. அனாகத சக்கரம் (Heart Chakra)
5. விஷுத்தி சக்கரம் (Throat Chakra)
6. ஆக்ஞா சக்கரம் (Brow Chakra)
7. சஹஸ்ரார சக்கரம் (Crown Chakra)

என்பனவாம்.

வினையின் அளவாக, விளைவாக உடம்பெடுத்த உயிர்களுக்கு இயல்பாக இச்சைகள் இருக்கின்றன. அவையாவன: புத்திர இச்சை, லோக இச்சை, அர்த்த இச்சை என மூன்றாகும். புத்திர இச்சையின் குணமானது பொருள்மேல் ஆசை கொள்ளுதல். மண்ணாசை, பெண்ணாசை, மற்றும்

பொருளாசை என விரியும். லோக இச்சையின் குணமானது உலகத்தில் உயர்ந்த காணியாட்சியை விரும்பல். நெடுநாள் உறவின் முறையாருக்குத் தக்கவற்றையும் தகாதவற்றையும் எடுத்துக்கூறுதல். பொருந்தி வரும் காரியங்களைத் தெரிந்து அதன்மேல் ஆசை வைத்தல். காரியங்களைச் செய்து நன்மை, தீமை அறிதல் என்பதாக அமைகிறது. அர்த்த இச்சை மேன்மேலும், பொருள், பணம் ஆகியவற்றைச் சேர்ப்பதில் ஈடுபடுத்தும். அன்பைப் பெருக்கி இன்பமுண்டாக்கும்.

இவ்வாறு தொண்ணூற்றாறு தத்துவங்களில் ஒரு சிலவற்றிற்குத் தேவையான அளவில் விளக்கம் கூறப்பட்டுள்ளது, பிற வேண்டிய இடங்களில் தக்கவாறு விளக்கப்படும். கூறாதுவிடப்பட்டவை, அன்புடைய குருவை நாடி அவர் வழி நின்று கற்றறிய வேண்டியவையாம். இத்தத்துவங்கள் யாவும் சாதி, சமயம், இனம், மொழி கடந்து மனித இனம் முழுவதற்கும் பொதுவானவை. இவற்றை அறிந்து, உணர்ந்து அதன்வழி நடப்பவர்கள் வாழ்வில் உயரிய நிலையை அடைந்து நிலையான பேரானந்தத்தில் அழுந்தலாம்.

## தமிழில் தத்துவம்

தத்துவம் என்பது வாழும் கலைக்கு ஆதாரமானது. நின்ற உண்மையாக விளங்கும் தத்துவங்களை இந்தியத் திருநாட்டின் மிகவும் தொன்மையான மொழிகளான செம்மொழியாம் தமிழிலும், வடமொழியிலும் பிற இந்திய மொழிகளிலும் எழுந்த நூல்களில் காணலாம். வடமொழியில் மட்டுமே தத்துவ நூல்கள் உள்ளன என்று சிலர் வன்முறையாகக் கூறுவர். தமிழ்மொழியின் ஆழ அகலங்களை அறியாத பலர், எல்லாம் வடமொழியிலே உள்ளன என்று கூறும் வழக்காறு உள்ளது. இது ஒரு தலையானதாகும். தமிழும், வடமொழியும் ஆழங்கால் பட்ட அறிஞர் பெருமக்கள் இரண்டிலும் தத்துவம் பற்றிய அருமையான கருத்துகளும் விளக்கங்களும் இருப்பதை உணர்ந்து கூறியிருக்கின்றனர். தமிழறியாத நெஞ்சினர் ஒரு சார்பாக நினைத்துக் கொண்டிருப்பது தமிழ் மக்களுக்குப் பெரிதும் வருத்தம் உண்டாக்கும் மனப்பான்மையாகும்.

வடமொழியும், தென்மொழியாம் தமிழும் வரலாற்றுத் தொடர்புடையவை. ஒன்றை உயர்த்தியும் மற்றொன்றைத் தாழ்த்தியும் பேசுவது எவ்வகையிலும் நன்றன்று. ஒவ்வொரு மொழிக்கும் அதனதன்

இயற்கைக்கு ஏற்பத் தொன்று தொட்டு வரும் இலக்கண இலக்கிய நெறிகளும் மரபுகளும் இருக்கின்றன. உலகில் தற்போது பயன்பட்டு வரும் மொழிகளில் தமிழ் மிகவும் தொன்மையானது. உலகில் எங்கணும் தமிழ் மக்களால் இன்றளவும் பேசப்பட்டு வரும் மொழி. பொருள் இலக்கணம் பாடி மனித இனம் முழுமைக்கும் வாழும் வழியைப் படம்பிடித்துக் காட்டிய மொழியாகும்.

முன்னர்ப் பட்டியலிட்டும் ஒருவாறு விளக்கம் தந்தும் கூறப்பட்டுள்ள தொண்ணூற்றாறு தத்துவங்களும் ஆன்ம தத்துவம் என்று கூறப்படும். ஆன்ம தத்துவம் என்பது உடல், மனம், அறிவு, ஆற்றல் இவைபற்றியும், இவற்றுடன் தோன்றியும் தோன்றாமலும் நிற்கும் ஆன்மாவைப் பற்றியும் கூறும். ஆன்ம தத்துவம் எல்லா நாடுகளிலும் வாழும் மனிதர்கள் அனைவருக்கும் பொதுவானது. ஆன்மாவே இறைவன் என்பதை உணரும்வரை பொதுவான தத்துவம். என் ஆன்மாவில் சிவன் விளங்குவதை அனுபவித்தேன் என்று நாயன்மார் கூறுவர். அப்போது அது சைவ சமயமாகிவிடும். பெருமாளைக் கண்டு தண்டனிட்டேன் என்றால் வைணவமாகிவிடும். இவ்வாறு அவரவர் வணங்கும் பெயரும் திருமேனியும் விளங்க ஆன்மாவில் அனுபவமானால் அவ்வம்மதமாக மாறிவிடும். எத்தனை மனிதர்கள் இருக்கின்றார்களோ அத்தனை விதமான நாமரூப தரிசனங்கள் ஆன்மாவில் விளங்கும. ஒவ்வொரு தரிசனமும் ஒருமதமாகிவிடும். ஆகவே மதம் சார்ந்த தத்துவங்களை முன்னிலைப்படுத்தாமல் மனிதகுலம் அனைத்திற்கும் எங்கும் எப்போதும் பயன்பட்டு வரும் தமிழ்நலங் கனிந்த தத்துவங்களை அறிய முற்படுவதே நலம் பயக்கும்.

வாழ்வில் மேன்மை அடைய வழிவகுக்கும் தத்துவங்கள் அடங்கிய பனுவல்களைச் 'சங்கத்தமிழ்' என்று கூறிவிடலாம். சங்கத்தமிழ் நூல்களும், சங்கம் மருவிய காலத்து நூல்களும் ஒருபோதும் இது தத்துவம், இது வாழ்க்கை என்று பிரித்துக் காட்டவில்லை. இலக்கண நூலில் வாழ்க்கைத் தத்துவங்களை மிகவும் எளிமையாகக் கூறியது! தமிழே. வாழ்க்கையை அகம் எனவும், புறம் எனவும் வகுத்துக் கூறியது அன்னைத் தமிழ். எந்த மண்ணிலும் இம்மாதிரி வகுத்துக் கூறிய நூல்கள் இல்லை. இல்லவே இல்லை. காதல் மணங்கமழும் இல்லற ஒழுக்கத்தை அகத்தில்

வைத்து, வீரத்தையும் பொருள்தேடும் முயற்சியையும், அரசியல் நடத்தும் முறையினையும், வள்ளல் தன்மையையும் புறத்தில் வைத்துத் தமிழ் மக்களின் ஒப்புயர்வற்ற வாழ்க்கை முறையினைத் தமிழ்நூல்கள் கவின்மிகு சொல்லோவியமாகத் தீட்டியுள்ளன. சிலம்பில் பறல்போல், பாலில் படுநெய்போல் தமிழ் நூல்களில் தத்துவங்கள் படிந்திருக்கின்றன. பாவும் ஊடையும் போல் தமிழும் தத்துவமும் உடனாய் நின்று பயன்தருகின்றன.

பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் சங்கத் தமிழ் நூல்களாகும். சங்கம் மருவிய காலத்தில் தோன்றியவைகள் ஐம்பெருங்காப்பியங்கள். வையம் புகழும் வள்ளுவர் பெருமான் எழுதிய குறள் தவிர்த்த பிற பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் காப்பிய காலத்திற்குப் பின் தோன்றியவைகளாகும். திருவள்ளுவர், ஏசுநாதர் பிறப்பதற்குச் சில ஆண்டுகள் முன்னர்த் தோன்றியவராவர். தமிழ் இலக்கியங்களை நன்கு புரிந்து கொள்ள உதவும் ஒல்காப் பெரும்புகழ் தொல்காப்பியமும் சங்கத்தமிழ் இலக்கண நூலாகும். இலக்கணமும் இலக்கியமும் அடையாளங்காட்டும் ஆசானாகவும் விளங்கும் ஒரு நூல் தொல்காப்பியம் எனின் மிகையன்று.

'பத்துப்பாட்டு' எனப்படும் தொகுதியில் அடங்கும் ஒவ்வொரு நூலும் ஒரே பாட்டினால் இயன்றவை. ஒரு பாடலே ஒரு நூலாகும். அவை,

1. திருமுருகாற்றுப்படை
2. பொருநராற்றுப்படை
3. பெரும்பாணாற்றுப்படை
4. சிறுபாணாற்றுப்படை
5. முல்லைப்பாட்டு
6. குறிஞ்சிப்பாட்டு
7. மதுரைக் காஞ்சி
8. நெடுநெல்வாடை
9. பட்டினப்பாலை
10. மலைபடுகடாம்

என்பனவாம்.

முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி-மருவினிய
கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து

என்ற பாடல் நெஞ்சில் நின்றால் நலம் பயக்கும்.

'எட்டுத்தொகை' என்னும் தொகுப்பில் எட்டு நூல்கள் அடங்கியுள்ளன. ஒவ்வொரு நூலும் நூற்றுக்கணக்கான பாடல்களால் ஆனது. அவை,

1. நற்றிணை
2. குறுந்தொகை
3. ஐங்குறுநூறு
4. பதிற்றுப்பத்து
5. பரிபாடல்
6. கலித்தொகை
7. அகநானூறு
8. புறநானூறு

என்பனவாம்.

நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு
ஒத்த பதிற்றுப்பத்து ஓங்குபரிபாடல் - கற்றறிந்தார்
ஏத்தும் கலியோடு அகம்புறம் என்(று)
இத்திறத்த எட்டுத் தொகை.

என்னும் வெண்பா படித்து இன்புறத்தக்கது. எந்நாட்டவர்க்கும் இறைவன் சிவனே என்ற உறுதியோடு சித்தத்தைச் சிவன் பாலே வைத்த சிவனடியார்கள் ஆகிய நாயன்மார்கள் அருளிய தேவாரத் திருமுறைப் பாடல்கள் 'தெய்வத் தமிழ் ஆகும்.' பல ஆயிரம் பாடல்களின் தொகுப்பான பன்னிரு திருமுறைகளில் மதம் சார்ந்த தத்துவமும், தத்துவம் கடந்த தத்துவமும் கொட்டிக் கிடக்கின்றன. பச்சைப் பசுங்கொண்டலான வைகுண்டப் பெருமான் தாளடியில் மண்டிக்கிடப்பதில் அளவிலாத ஆனந்தம் அடைந்த பன்னிரு ஆழ்வார்கள் அருளிய நாலாயிரத் திவ்வியப்

பிரபந்தமும் தெய்வத் தமிழேயாம். வைணவத் தமிழிலும் மணி மணியான தத்துவங்கள் பொதிந்துள்ளன. அவ்வையார் வழங்கிய ஆத்திசூடி தத்துவ வாய்பாடு ஆகும் எனின் மிகையன்று.

நூற்றாண்டுதோறும், அடுத்தடுத்து அறமும் தத்துவமும் உரைத்தவர் எண்ணிலர். பட்டினத்தார், பதினெண்சித்தர்கள், இராமலிங்க அடிகளார் ஆகியோரின் பாடல்களில் அகிலம் தழுவிய தத்துவங்கள் விளங்கக் காணலாம். பாரதியார், பாரதிதாசன் போன்ற இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த கவிஞர்கள் பாடல்களில் மனிதகுல மேன்மையை முன்னிட்டுக் கூறிய செழுமையான செம்மையான தத்துவச் செய்திகள் நிறைய இருக்கின்றன. தமிழில் தத்துவம் கூறும் பலவகையான இலக்கிய வடிவங்களில் நூல்கள் ஆண்டுதோறும் தோன்றிக்கொண்டுதான் இருக்கின்றன. காலத்திற்கேற்றவாறு தத்துவ உருமாற்றங்களும் நடைபெற்று வருகின்றன. நற்றமிழ் வல்லார் எழுதும் நூல்களைப் படித்து அமைதியாக எண்ணிப்பார்த்து அன்றன்றே தணிக்கை செய்பவர்கள் நெஞ்சில் தத்துவம் நடம்புரியும். பாரதியார் பாடிய தோத்திரப் பாடல் ஒன்றுடன் இப்பகுதியை நிறைவு செய்யலாம்.

பக்தியினாலே - இந்தப்
பாரினில் எய்திடும் மேன்மைகள் கேளடீ
சித்தந் தெளியும் - இங்குச்
செய்கை அனைத்திலும் செம்மை பிறந்திடும்
வித்தைகள் சேரும் - நல்ல
வீரர் உறவு கிடைக்கும் மனத்திடைத்
தத்துவ முண்டாகும் - நெஞ்சிற்
சஞ்சலம் நீங்கி உறுதி விளங்கிடும்.

# 2. உலகத் தோற்றம்

நாம் வாழ்ந்து வருகின்ற இந்நில உலகமும், அதற்கு அணியாய் ஆதரவாய் விளங்குகின்ற ஞாயிறு, திங்கள் (சந்திரன்) போன்றவற்றோடு பிறகோள்களும் வானில் வலம் வந்து கொண்டிருக்கின்றன. இவற்றிற்கு மையமாக நின்று கொண்டே இருப்பது சூரியன். சூரியனை ஆதித்தன் என்றும் கூறுவர். ஞாயிறு என்பதும் சூரியனைக் குறிக்கும் சொல்லே. சூரியனை மையமாகக் கொண்டு பல்வேறு கதியில் இயங்கிக்கொண்டிருக்கும் கோள்களும், சூரியனும் சேர்ந்து 'ஞாயிற்று மண்டலம்' அல்லது சூரியமண்டலம் என்று அழைக்கப்படும். இந்த மண்டலமே நாம் வாழும் அண்டம். நம்முடைய சூரியமண்டலம் போல் பலநூறு மண்டலங்கள் இயங்குகின்றன. அவற்றை நாம் பகிர் அண்டங்கள் என்று கூறுகிறோம். 'பகிர' என்றால் வெளியே தள்ளி உள்ளது என்று பொருள். 'அண்ட பகிரண்டங்கள்' என்பது யாவரும் அறிந்த தொடர்.

அண்டங்களும் பகிரண்டங்களும் எவ்வாறு தோற்றத்திற்கு வந்தன? தோற்றத்திற்கு வருமுன் எந்தத் தாயின் கருப்பத்தில் ஒடுங்கி இருந்தன? இவையாவும் தோன்றியது ஏன்? யாருடைய வாழ்வையும் வளர்ச்சியையும் முன்னிட்டு இவ்வண்ட பகிரண்டங்கள் தோன்றின? இவ்வாறு ஆயிரமாயிரம் வினாக்கள் பலதரப்பட்ட மக்கள் மனதில் தோன்றியுள்ளன. வானியல் அறிஞர்களும், ஆன்மீக உலகினரும் இதுநாள் வரையிலும் அவரவர் அறிந்தவாறே, உணர்ந்தவாறே, நம்பியவாறே விளக்கம் அளித்துள்ளனர். இவ்விளக்கங்கள், விடைகள் அனைத்தையும் இரண்டு தொகுப்பில் அடக்கலாம். அறிவியல் அடிப்படையிலான சுதந்திரமான ஆராய்ச்சியின் விளைவாகத் தோன்றியவை ஒரு தொகுதியுள் அடங்கும். கடவுள் பற்றினால் கடவுளின் ஆற்றல் மீது கொண்ட அவாவினால் கூறப்பட்ட விளக்கங்கள் இரண்டாவது தொகுதியுள் அடங்கும்.

அறிவியல் அறிஞர்கள் பல்வேறு கருதுகோள்களை (Hypothesis) முன்னிறுத்தியும் தங்களிடமுள்ள அறிவியற் கருவிகளைத் துணையாகக் கொண்டும் இன்று வரையிலும் ஓயாது ஒழியாது துருவித் துருவி ஆராய்ந்து

வருகின்றனர். இயற்கையின் உண்மைகளை அறிவதே அவர்கள் நோக்கம். யாரையும் எதையும் சார்ந்தது அல்ல அறிவியல் உண்மை. நடுவு நிலையாக இருந்து ஆராய்ந்து உரைத்த கருத்துக்கள் மற்றும் விளக்கங்கள் முழுமையாக ஏற்றுக்கொள்ளப்படவில்லை. அறிவியல் அறிஞர்களிடையே முரண்பாடுகள் இருக்கின்றன. இம்முரண்பாடுகள் பகையை வளர்க்காமல் மேன்மேலும் ஆராய வழிவகுத்துக் கொண்டிருக்கின்றன. முரண்பாடுகளையும் ஐயங்களையும் அடிப்படையாகக் கொண்டு வளர்வதுதான் அறிவியல்.

அன்றிலிருந்து இன்றுவரையிலும் ஆன்மீக உலகம் தங்களிடையே நிலவிவரும் வெறும் நம்பிக்கையினை ஆதாரமாகக் கொண்டு ஏற்றுக்கொண்ட கருத்துக்களைக் காலத்திற்கேற்பத் திருத்தி அமைத்துக் கொள்வதில் ஆர்வம் காட்டவில்லை. தயக்கமே காட்டி வருகின்றது. தத்தம் நம்பிக்கைகளைத் தகர்த்தெறியும் சில உண்மைகள், கருத்துகள், விளக்கங்கள் வெளியிடப்படும்போது சினம் அடைவது ஆன்மீக உலகின் தொன்றுதொட்ட இயல்பாக உள்ளது. உயிரியல் அறிவியல் அறிஞர் டார்வின் உயிர்களின் தோற்றம் பற்றி வகுத்துரைத்த பரிணாமக் கொள்கையைக் கண்டு மேலைநாட்டு ஆன்மீக உலகம் ஆட்டம் கண்டது. தங்கள் தலைமை பறிபோய்விடுமோ என்று அஞ்சியது. ஆட்சியாளரின் துணைகொண்டு அவரை வாட்டி வதைத்தது. மேலை நாட்டு ஆன்மீக உலகம் மக்களின் அறிவு வளர்வதில் ஆர்வமில்லாமல் அறிவே கடவுள் என்பதை ஏற்காமல் தங்களது ஆதிக்கம் சிதைந்து விடுமே என்ற அச்சத்தினால் அறிவியலாரின் கண்டுபிடிப்புகளை ஏற்க மறுத்தது. பூமி தான் கதிரவனைச் சுற்றி வருகின்றது. கதிரவன் பூமியைச் சுற்றி வரவில்லை என்ற உண்மையைப் புலப்படுத்தியதற்காகக் கலிலீயோ போன்ற பேரறிஞர்கள் ‘பைத்தியக்காரன்’ என்று ஏசப்பட்டனர். சிறையில் அடைக்கப்பட்டுப் பல சொல்ல முடியாத கொடுமைக்கு ஆளாக்கினர். எனினும் அவர்கள் தங்கள் கண்டுபிடிப்புகள் பற்றி வருந்தவில்லை. வேதனைப்படவில்லை. எதையும் அறிவினால் ஆராய்ந்து ஏற்றுக்கொள் என்று கூறினார் சாக்ரடீசு. ‘உன்னையே நீ அறிவாய்’ என்று கூறிய வாயில் நஞ்சு ஊற்றப்பட்டது. அறிவில் நாட்டங்கொள்ளாத ஆன்மீகம் முட்டாள்தனமானது என்று பழுத்த ஆன்மீகரான தமிழ்த் தென்றல் திரு.வி.க. அவர்கள் துணிச்சலாகக் கூறினார். ஆன்மீகம் இல்லாத கலவாத அறிவு முரட்டுத்தனம் என்றும் கூறினார். எண்ணிப் பார்க்க வேண்டிய கருத்துகள்.

இந்திய நாட்டு ஆன்மீக உலகம் மேலைநாட்டு ஆன்மீகத்தோடு ஒப்பிடும்போது மிகவும் பண்பட்டதாகவே விளங்கி வந்துள்ளது. அறிவு வளர்ச்சியை நம்நாட்டு ஆன்மீகம் தடை செய்யவில்லை. சமயங்கள் தங்களிடையே பூசலிட்டுக் கொண்டன. போட்டி, பொறாமையில் ஈடுபட்டுப் பகைமையை வளர்த்துள்ளன. ஒரு சமயத்தைத் தழுவியவருள்ளும் பேரழிவுகளும் ஏற்பட்டுள்ளன. சமயப் போர்களும் பூசல்களும் வரலாற்றுண்மைகளாகும். இந்தியாவிலும் சமயப்பூசல்கள் இன்றும் நிகழ்கின்றன என்பது வருந்தத்தக்கதாகும். எனினும் அறிவியல் உலகத்தோடு இந்திய ஆன்மீக உலகம் மோதிக்கொள்ளவில்லை. தொடக்கக்கால இந்திய மருத்துவம் ஆன்மீகம் தந்த கொடையாகும். சித்த மருத்துவம், ஆயுர்வேத மருத்துவம், யுனானி மருத்துவம் இன்னும் பல்வேறு மேலை நாட்டு மக்களிடையே (Tribal community) பழக்கத்தில் இருந்து வரும் மருத்துவ முறைகள் எனப்பலவும் இந்திய ஆன்மீக உலகத்தின் சாதனையே ஆகும். இம்மருத்துவ முறைகள் தலைமுறை தலைமுறையாக வளர்ந்து இன்றளவும் பயன்பட்டு வருகின்றன.

சிலசில வேறுபாடுகள் இருப்பினும் ஆன்மீக உலகம், மேலை நாடாயினும் கீழை நாடாயினும் இவ்வண்டங்களும் பகிரண்டங்களும் இறைவனால் படைக்கப்பட்டன. இறைவனால் இயற்றப்பட்டு இயக்கப்படுகின்றன. அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்பதை ஆணித்தரமாக நம்புகின்றன. உலகத்தோற்றம் இறைவனது அருளாற்றலால் விளைந்தது என்பதே இறையியலாளரின் துணிவு.

ஆன்மீக உலகம் தான் கண்டறிந்த அளவில் உலகத் தோற்றம் பற்றிய கருத்துகளை ஏற்றுக்கொள்ளட்டும். அறிவியல் உலகம் தான் அறியும் உண்மைகளைக் கூறட்டும். அண்டங்களும் பகிரண்டங்களும் இவர்கள் என்ன உணர்ந்தார்கள், அறிந்தார்கள், கூறுகிறார்கள், என்பது பற்றியெல்லாம் எள்ளளவும் கவலைப்படுவதுமில்லை, வருந்துவதுமில்லை. அண்டங்களும் பேரண்டங்களும் தத்தம் கதியில் சென்று கொண்டிருக்கின்றன என்பதே நின்ற உண்மையாகும். நாம் உணரவேண்டிய பெரிய தத்துவமாகும்.

மனிதனும் எண்ணிலாத பிற உயிர்களும் வாழ்கின்ற பிரபஞ்சம் என்று கூறப்படுகின்ற உலகம் எதனால் ஆக்கப்பட்டது என்பதை அறிவது நல்லது. பிரபஞ்சத்தின் தோற்றம் பற்றி அதிகம் கவலைப்பட வேண்டுவது தேவையற்றது. உயிர்கள் வாழ்கின்ற இவ்வுலகம் எதனால் ஆனது என்பதைத்

தமிழ் நூல்கள் மிகவும் தெளிவாகக் கூறுகின்றன. பிரபஞ்சத் தத்துவம் ஓர் அடிப்படையான தத்துவம். அதிலிருந்துதான் பிற தத்துவங்கள் தோன்றின. பிரபஞ்சத்தின் ஆணிவேர் சூரியன். சூரியன்தான் பிற கடவுள் தத்துவங்கட்கு வழிவகுத்தவன். நாம் வணங்கும் கடவுளர் அனைவரும் சூரிய தத்துவத்திலிருந்து வருவிக்கப்பட்டவர்களே. 'அவன் அன்றி ஓரணுவும் அசையாது' என்ற நூற்பாவின் சூத்திரத்தில் 'அவன்' என்பது சூரியனே. சூரியனே ஞாயிறு. தமிழ், இப்பிரபஞ்சத்தின் ஆணிவேர் தத்துவமான ஞாயிற்றைப் போற்றும் விதம் எண்ணி எண்ணி வியக்கத்தக்கதாகும்.

ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்று நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம். இது ஒரு மக்கள் காவியம். ஒரு நாட்டுக் குடிமகனையும் குடிமகளையும் கதை மாந்தர்களாகக் கொண்டு புனையப் பட்ட வரலாற்றுண்மை நிறைந்த அழகான காப்பியமாகும். இதனை இயற்றியவர் துறவு நெறியில் ஊன்றித் திளைத்து வாழ்ந்த இளங்கோவடிகள். பெருங்காவியங்களையும், இதிகாசங்களையும், நெடுங்கதைகளான இயற்கையிறந்த கற்பனைகள் நிறைந்த புராணங்களையும் எழுதுவோர் கடவுள் வாழ்த்துப் பாடுவதே மரபு. தாம் எழுத விரும்பிய காவியமோ கதையோ இனிதே முடிய வேண்டும் என்று வேண்டித் தத்தம் கடவுள்களையே முதற்கண்பாடுவர். அதுவே காப்பு யாப்பு அல்லது காப்புச் செய்யுளாக, காப்பியத்தின் தோற்றுவாயாக அமையும். ஆயினும் இளங்கோ அடிகள் எந்தக் கடவுளையும் தன் காப்பியத்திற்குக் காப்பாகப் பாடிப் போற்றவில்லை. தொண்ணூற்றாறு தத்துவத்திற்கும் ஊற்றுக்கண்ணாக விளங்கி உலகம் விளக்கி வரும் ஞாயிற்றையே முதற்கண் பாடினார். இப்புதுமையைக் கடவுள் மறுப்பாகக் கருதாமல் பிரபஞ்சத்தின் முதல் தத்துவத்தைப் போற்றியதாகவே தமிழ் உலகம் மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டு பாராட்டியது. இதோ பாடல்.

திங்களைப் போற்றுதும்! திங்களைப் போற்றுதும்!
கொங்கு அலர்தார்ச் சென்னி குளிர்வெண்குடை போன்று இவ்
அம்கண் உலகுஅளித்த லான்.

ஞாயிறு போற்றுதும் ! ஞாயிறு போற்றுதும் !
காவிரி நாடன் திகிரிபோல் பொன் கோட்டு
மேருவலந் திரித லான்.

மாமழை போற்றுதும் ! மாமழை போற்றுதும்
நாமநீர் வேலி உலகிற்கு அவன் அளிபோல்
மேல்நின்று தான் சுரத்தலான்.

பூம்புகார் போற்றுதும்! பூம்புகார் போற்றுதும்!
வீங்குநீர் வேலி உலகிற்கு அவன் குலத்தோடு
ஓங்கிப் பரந்தொழுக லான்.

இப்பாடலடிகளின் பொருள் அறிந்து இன்புறுவது கடமையாகும். இனிநிரலாகப் பொருள் கூறப்படுகிறது.

திங்களைப் (சந்திரனை) போற்றுவோம்! பூந்தாது சொரியும் ஆத்தி மாலையினையுடைய சோழனின் அருள்மிகுந்த வெண்கொற்றக் குடையினைப் போன்று, அதுவும் இந்த அழகிய உலகிலே தண்ணொளி பரப்புகின்றதனால், நாமும் அந்தத் திங்களைப் போற்றுவோம்.

ஞாயிற்றைப் போற்றுவோம்! காவிரி நாடனின் ஆணைச் சக்கரம்போல், அழகிய மலைமுகடுகளை உடைய மேருமலையினை அதுவும் சுற்றி வலம் வருகின்றதனால், நாமும் அந்த ஞாயிற்றைப் போற்றுவோம்!

பெருமை பொருந்திய மழையைப் போற்றுவோம்! அச்சந்தரும் கடல்களை வேலியாக உலகம் சூழ்ந்துள்ளது எனினும், அவன் அருளைப் போலத் தான் மேல்நின்று சுரந்து, அனைத்துயிரையும் வாழ்விக்கின்றதனால், நாமும் பெருமை மிகுந்த அந்த மழையைப் போற்றுவோம்!

அழகிய புகார் நகரினைப் போற்றவோம்! மிகுதியான நீர் வேலியாகச் சூழ்ந்துள்ள உலகிற்குச் சிறப்புடைய சோழனின் மரபினரோடு தானும் (புகாரும்) புகழாமல் உயர்ந்து பரவிய புகழுடன் அதுவும் நிலவுவதால், நாமும், அந்த அழகிய புகார் நகரினைப் போற்றுவோம்!

திங்களும், மழையும், மன்னனும் ஞாயிற்றின் பிள்ளைகளே. ஞாயிறு போற்றியதில் மழையும், திங்களும் உடன் போற்றப்பட்டன. நயமிக்க உத்தியாகும்; எண்ணி மகிழ்வோம். இளங்கோவடிகள் போற்றிப் பாடிய ஞாயிறு இயற்கைப் பொருள்கள் எல்லாவற்றையும் விட மிகவும் உயர்ந்தது. ஞாயிறு என்று நற்றமிழால் அழைக்கப்படுகின்ற, பாடப்படுகின்றவனாகிய சூரியன் இயற்கையுடன் வைத்திருக்கும் நல்லிணக்கமே, சமய ஒழுக்கம் ஆயிற்று.

இயற்கையோடு வைத்துள்ள தெய்வீக இணக்கமே இயற்கையோடு இயற்கையாகவும் இயற்கைக்கு அப்பாலும் உள்ளதை அறியும் ஞானக் காட்சிக்குத் துணைபுரிகிறது. இயற்கையினால் அருளப்பட்ட சிறந்த சமய ஒழுக்கம் சடங்குகளைத் தாண்டியது. அறிவு வாயில்களான மெய், வாய், கண், மூக்கு, செவி போன்ற பண்பட்ட இந்திரியங்களும் தெளிந்த மனமும் பிறகு ஞானக் கண்ணாக மாறிவிடுகின்றன.

மேலோட்டமாக நினைத்தால் ஞானக் கண்கொண்டு பார்க்கின்ற பொருள் வேறு, ஐம்புலன்களால் அறியப்படும் பொருள் வேறு என்பதுபோல் தோற்றமளிக்கும். உண்மை அதுவன்று. ஒரே பொருள் ஐம்புலன்களுக்குப் புலனாகும்போது இயற்கை என்னும் பெயர் பெறுகிறது. வாலறிவால், அதாவது ஞானக்கண்ணால் ஊடுருவிப் பார்க்கும்பொழுது தெய்வம் என்னும் பெயர் பெறுகிறது.

மிக உயர்ந்த இயற்கைப்பொருள் என்று பார்த்தாலும் வாலறிவால் உணர்ந்தாலும் தெய்வம் என நினைத்துப் போற்றினும் சூரியன் அதற்குத் தகுதி உடையவனே. இருவேறு கருத்துகளுக்கு இடமில்லை. மனிதனோடு தொடர்புடைய பிரபஞ்சப் பொருட்களின் தலைவன் சூரியனே. தத்துவங்களில் உயர்ந்தது சூரிய தத்துவமே. சூரியனைச் சூரியநாராயணன் என்று போற்றி வழிபடும் மரபு இருக்கிறது. பாரதியார்,

சுருதியின் கண்முனிவரும் பின்னே
தூமொழிப் புலவோர் தாமும்
பெரிது நின்றன் பெருமை என்றேத்தும்
பெற்றி கண்டுனை வாழ்த்திட வந்தேன்
பிரதியே, பொருள் யாவிற்கும் முதலே
பானுவே, பொன்செய் பேரொளித் திறனே
கருதி நின்னை வணங்கிட வந்தேன்
கதிர்கொள் வாண்முகம் காட்டுதி சற்றே

என்ற பாட்டில் பரிதியின் எழிற் கோலங்களைப் பார்த்து மகிழ்ந்ததோடு 'பொருள் யாவிற்கும் முதலே' என்று சூரியனின் முதன்மையையும் போற்றுகிறார்.

நந்தமிழ் நாட்டு மக்கள் சமயச் சடங்குகளில் பொருளும் பொழுதும் செலவிடாமல் 'இயற்கையோடிசைந்த இன்பம், இன்பத்தோடிசைந்த வாழ்வு'

என்று வாழ்ந்தனர். அவர்கள் வாழ்வில் எளிமையும், இனிமையும் இயல்பாகவே அமைந்திருந்தன. சங்கத்தமிழ் இதை நன்கு படம் பிடித்துக் காட்டி உள்ளது. சூரிய வழிபாடு ஒரு குடியினருக்கு மட்டுமே உரியதன்று. சூரியனை அன்றி உலகம் இல்லை என்பதை உணர்ந்தவர் யாவரும் அருக்கனை, அதாவது சூரியனை வழிபட்டு வருகின்றனர். வைகறையில் துயில் நீக்கி, காலைக்கடன் முடித்து, குளித்து, தூய்மையான ஆடையை அரையிலே உடுத்திக்கொண்டு சூரியனைப் பார்த்து வழிபடுதல் இன்றும் காணலாகும் காட்சியாகும். அவரவர் குடிமரபிற்கேற்றவாறு வழிபாட்டு முறைகள் மாறியிருக்கலாம். சூரியவழிபாட்டு முறையைப் பாடும் நற்றமிழ் பாடல் ஒன்று இதோ.

ஒற்றைத் திகிரியானை ஓரேழ் பரியானை
கற்றைக் கதிரோனைக் கைம்மலரான் - மற்றினியே
பொய்கையில் நீராடிப் போற்றிப் புது உளத்தான்
வைகறையில் வாழ்த்திடுவோம் நாம்

சூரிய வழிபாடு வைகறை வணக்கமாகும். வைகறை வழக்கமாகும். சங்கத்தமிழில் பத்துப்பாட்டில் ஒன்றான தலைமையான பாடல் திருமுருகாற்றுப் படையைப் பாடியவர் தலைமைப் புலவர் நக்கீரர். மன்றாடும் பெருமானிடம் "நெற்றிக்கண் திறப்பினும் குற்றம் குற்றமே" என்று தமிழுக்காக மன்றாடிய நக்கீரர் தான் பாடிய திருமுருகாற்றுப்படையில் "உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு பலர் புகழ் ஞாயிறு" என்றே அடி எடுத்துப்பாடினார். ஒளிவளர் விளக்குமாகி உயிர்வளர் விளக்குமாகி அறிவு வளர்ப்பவன் சூரியநாராயணன். உலகோர் உவக்கும் தத்துவம் ஞாயிறு தத்துவம்.

வேதமரபினர், நான்மறையாளர், வேதியர் எனப்படுபவர் வேதங்களை விருட்சம் (மரம்) என்றும் காயத்ரி மந்திரத்தை வித்து என்றும் கூறுவர். காயத்ரி மந்திரங்களில் உயர்ந்தது சூரியகாயத்ரி ஆகும். பார்ப்பனர் குடியினர் காலை அந்தியிலும் மாலை அந்தியிலும் நீர்நிலைகளில் மூழ்கி எழுந்து நின்று கதிரவனைப் பார்த்தவாறு காயத்ரி மந்திரம் செபித்து வருவதை இன்றியமையாத நாள் கடமையாகக் கொண்டுள்ளனர். நீர்நிலைகள் அமையாத இடங்களில் அதற்கேற்ற உபாயங்களை மேற்கொண்டு சூரிய காயத்ரி செபித்து மகிழ்வர்.

சூரியனை மட்டுமே வழிபட்டு வரும் மரபினர் சௌரமதத்தினர் ஆவார். இவர் வேறு எந்தத் தெய்வத்தையும் வழிபடுவதில்லை என்று

கூறுகின்றனர். இப்பூவுலகில் ஆயிரமாயிரம் உருவில் பெயரில் தெய்வ வழிபாடுகள் நடைபெற்று வருகின்றன. உலகந்தோன்றிய நாளிலிருந்து இன்றுவரை வழிபாட்டிற்கு வந்துள்ள தெய்வங்கள் யாவற்றிற்கும் வித்தும், முதலும் ஊற்றும் அவனே. அவனை வணங்கினால் ஆயிரமாயிரம் தெய்வங்களை வழிபட்டதற்கு ஈடாகும்.

இவ்வாறு பல மரபினரும், வெவ்வேறு குடியினரும், பல மதத்தினரும் சூரியனை வழிபடுகின்றனர். சூரிய தத்துவம் உயர்ந்தது. சமய சமரசத்திற்கும் அடிகோலும் தத்துவமாகும். ஞாயிற்று மண்டலமே நாம் வாழும் அண்டம். பிரபஞ்சம் எல்லாம் ஞாயிறு நீக்கிய அண்டம். ஞாயிற்றால் விளக்கம் பெற்று வருகிறது. அண்டம் எதனால், எப்பொருள்களால் உருவாக்கப்பட்டுள்ளது என்ற வினாவிற்குப் புறப்பாடல் மிக அழகாக அருமையாக விளக்கம் தருகிறது.

மண் திணிந்த நிலனும்
நிலன் ஏந்திய விசும்பும்
விசம்பு தைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்
தீ முரணிய நீரும் என்றாங்கு
ஐம்பெரு பூதத்து இயற்கை போல... (புறம்.1)

இறுகி விளங்கும் மண்ணும், மண் உருண்டையின் மேல் கவிந்திருக்கும் வானமும், வானத்தைத் தடவி அலையும் காற்றும், காற்றினால் உயிர்பெற்று உயர எழும்பும் இயல்புள்ள தீயும், குளிர்ச்சி பொருந்திய நீரும் என இவ்வைந்தும் கலந்தும் மிடைந்தும் நின்ற இயற்கைப் பொருளே அண்டம். இந்த அண்டத்தில் உள்ளதே மனிதப் பிண்டத்திலும் உள்ளது.

மண் தான் அசையாது இருந்து தன்னுள் விழுந்த வித்தினை வளர்த்துப் பயன் தரச் செய்யும். மனித உடலிலும் உயிரை வளர்க்கும் ஆற்றல் இருக்கிறது. விந்தும் அண்டமும் (கருமுட்டை) இணைந்து கருவாகி உருவாகிக் குழந்தையாய்த் தாயின் கருப்பையிலிருந்து வெளியேறுகிறது. நம் உடம்பின் வயிற்றுப்பகுதியில் ஆகாசம் இருக்கிறது. காற்றால் நிரப்பும் பகுதியே ஆகாசம் (வான்) எனப்படும். நம் உடம்பில் ஒரு வினாடியும் ஓயாமல் காற்றோட்டம் (மூச்சு) நிகழ்ந்து கொண்டேயிருக்கிறது. இம் மூச்சினைப் பின்னியவாறே பிராணன் சக்தி ஓட்டத்தை நடத்துகிறது.

உயிருள்ள உடம்பில் எப்போதும் அளவான வெப்பம் இருந்து வினையாற்றிக் கொண்டேயிருக்கும். வெப்பம் அளவில் குறைந்தால் குளிரும். வெப்பம் மிகுந்தால் காய்ச்சல் உண்டாகும். நம் உடல் என்னும் பிண்டத்தில் பெரும்பகுதி நீரே. எனவேதான் அறிஞர் பெருமக்கள் அண்டமும் பிண்டமும் ஒன்றே என்றனர்.

காற்றில் புயலும் சூறாவளியும் உண்டாகி மக்கள் வாழ்க்கையைப் புரட்டிப் போடுகிறது. அதுபோலவே மனதில் வீசும் புயல் சிலவேளைகளில் மனிதனை மிருகமாக்கிக் கொலை களவு போன்றவற்றில் தள்ளிவிட்டு வாழ்க்கையின் போக்கைத் தலைகீழாக மாற்றி நசுக்கி விடுகிறது. உணவில்லாத வயிறு உலைக்களம் போல் எரியும். நீரில் மூழ்கித் திளைத்தல் ஒன்று. நீரில் மூழ்கி மடிதல் இன்னொன்று. மகிழ்ச்சி வெள்ளத்தில் உள்ளம் அழுந்துதல் உண்டு. கடனில் மூழ்கிக் குடி முழுகிப் போதலும் உண்டு. இந்த வகையிலும் அண்டபிண்ட விளக்கங்கள் உள்ளன.

ஐம்பெரும் பூதத்து இயற்கையாய் விளங்கும் அண்டத்தில் எவ்வாறு உயிர்கள் தோன்றின என்பதற்குத் தரும் காரணகாரிய விளக்கங்கள் ஓரளவே உண்மையானவை. இம்மண்ணுலகம் பல நூறாயிரம் ஆண்டுகட்கு முன் நெருப்புப் பிழம்பாக வீசப்பட்ட ஒரு பொருள் ஆகும். மண்ணுலகம் சூரியன் கருப்பத்திலிருந்து சுழற்றி எறியப்பட்ட பொருள் ஆகும். பின்னர் அது எண்ணிலடங்கா பௌதீக, வேதியியல் மாற்றங்களால், விளைவுகளால் உயிர்கள் தோன்றி வளர்வதற்கு ஏற்ற சூழலையும் பக்குவத்தையும் பெற மேலும் பல ஆயிரம் ஆண்டுகள் ஆயின. பண்பட்ட நிலத்தில் மட்டுமே பயிர் விளைவது போல் அமைதி நிலை பெற்ற மண்ணுலகில் உயிர்கள் தலையெடுக்கத் தொடங்கின.

இம்மண்ணில் தோன்றிய உயிர்களை நிலைஉயிரி என்றும் இயங்கு உயிரி என்றும் சங்கத் தமிழ் மிகவும் அருமையான முறையில் வகுத்து வைத்துள்ளது. நிலைத்திணை என்பது நிலையாக ஓரிடத்தில் வேர் வீழ்த்தி நின்று வாழும் மரம், செடி, கொடி மற்றும் புல் பூண்டுகளாகும். இருந்த இடத்திலேயே தோன்றி வளர்ந்து பயன்தந்து மடிந்து எருவாகி மண்ணை வளப்படுத்தும் உயர்பண்பின. இயங்குதிணை என்ற தொகுதியில் இடம்பெயர்ந்து வாழும் பாங்குடைய நீர்வாழ் விலங்குகளும் நிலந்தவழ் விலங்குகளும் பறந்து திரியும் பறவையினங்களும் மாந்தர் இனமும் அடங்கும். இவ்வாறு பிரபஞ்சத்தில் வாழும் உயிர்களை இரண்டு விதமாகப் பகுத்துக் கூறுவது ஒரு மரபு.

இன்னொரு விதத்தில் ஓரறிவு உயிர், ஈரறிவு உயிர், மூவறிவு உயிர், நான்கறிவு உயிர், ஐந்தறிவு உயிர், ஆறறிவு உயிர் என வரிசைப்படுத்துதலும் மரபாகும். புல்லும் மரமும் போல்வன ஓர் அறிவுடைய உயிரிகளாகும். இவை தொடு அறிவு மட்டுமே உடையன. நந்து, நத்தை, சங்கு, இப்பி போன்றவை தொடு அறிவுடன் சுவையறியும் வாய் உணர்வுடையவை. எனவே இரண்டு அறிவு உடையன. சிதலும் எறும்பும் போல்வன மூக்காலும் அறியும் ஆற்றல் உடையவை. எனவே மூன்று அறிவுடையன. நண்டும், தும்பியும், இவற்றோடு கண் உடையவை, பார்த்து அறிபவை. இவை நான்கு அறிவு உடையனவாகும். நீரிலும் நிலத்திலும் வாழும் விலங்குகளில் பல இவற்றுடன் செவிப்புலன் உடையவை. ஒலியைக் கேட்டுணருபவை ஐந்தறிவுடையவை. மெய், வாய், மூக்கு, கண், செவி என ஐம்புலன் அறிவொடு 'மனம்' உடையவன் மனிதன். இவன் ஆறு அறிவு உடைய விலங்கு. 'திருந்தியமைதல்' என்னும் பரிணாம வளர்ச்சிக்கு முற்றிலும் தகுதி வாய்ந்த விலங்கினம் மனிதன்.

பூமியில் முதன்முதலில் நீரில்தான் உயிர்கள் தோன்றின. அதன் தொடர் விளைவாக நிலத்தில் உயிர்கள் தோன்றின. பின்னர்ப் பறக்கும் உயிர்கள் தோன்றின. பரிணாம வளர்ச்சியின் படித்தரம் இவ்வாறே அமைந்திருக்கிறது. நிலம் வாழ் உயிரியான குரங்கு இனத்தின் ஒரு பிரிவிலிருந்து மனித இனம் தோன்றி நாடொறும் தன்புலன்களைப் புதுப்பித்து வளர்த்து இன்றைய நிலையை அடைந்து உள்ளது. ஒரு கண்ணோட்டத்தில் இயற்கையின் தோற்றத்தில் மனிதன் ஓர் உன்னதமான இடத்தைப் பெற்றுக்கொள்கிறான். 'மனம்' என்ற புலன் அவனை மிகவும் அன்பான பிராணியாகவும் மாற்றி விடுகிறது. 'மனம்'என்ற புலனே மனிதப் பிறவியில் மிகவும் சவாலானதாகும். மனம்தான் வாழ்க்கைப் போராட்டத்தின் கரு.

உயிர்கள் நான்கு வகையில் தோன்றுகின்றன. விதையிலிருந்தும், முட்டையிலிருந்தும், கருப்பையிலிருந்தும், அழுக்கிலிருந்தும் உயிர்கள் தோன்றி வளர்கின்றன. வடமொழியாளர் இந்நான்கு வழிகளை நால்வகை 'யோனி' என்று கூறுவர்.

இந்நூற்றாண்டில் உயிரினங்களின் உறுப்புகளிலிருந்து செல்களைப் பிரித்தெடுத்துத் தக்க வகையில் ஊட்டமளித்து வளர்க்கின்ற குளோனிங்முறை ஆராயப்பட்டு வெற்றி பெற்றிருக்கின்றது. இந்த

ஆராய்ச்சிகளின் விளைவைக் கற்பனையில் பெருக்கிப் பார்த்தவர் மருண்டு போயினர். மருண்டவர் எதிர்க்கின்றனர். இதன் பயனை அறிந்தவர் வரவேற்கின்றனர். எதிர்ப்பதும் ஆதரிப்பதுமான முரண்பாடான நிலைகள் எப்போதும் எங்கும் இருக்கின்றன. முரண்பாடுகள் வளர்ச்சிக்கே வழிவகுக்கின்றன எனின் வரவேற்கத்தக்கதே.

இயற்கையின் படைப்பில் மிகவும் மேலானவன் மனிதன். பிறவிலங்குகள் தொடக்கக் காலந்தொட்டு இருந்தபடியே இருக்கின்றன. 'நான்', 'என்னுடையது', 'எதிர்காலம்' என்ற அறிவு பிற உயிர்களிடத்தில் இல்லை. 'நான்' என்ற தனது இருப்பை அறிகின்ற உணர்வும் 'என்னுடையது என்ற உரிமை உணர்வும்' 'நேற்று', 'இன்று', 'நாளை' என்ற உணர்வும் மனிதனிடம் இருந்ததால்தான் பலதுறையிலும் திருத்தம் பெற்று வளர்ந்து வரமுடிந்தது.

மனிதன் தவிர்த்த பிற உயிர்களிடம் 'மனம்' என்ற ஆறாவது அறிவு இல்லை. ஆதலால் வினையும், வினைப்பயனும் என்ற பிணிப்பும் தொடர்ச்சியும், பாவம், புண்ணியம் என்ற காரியங்களும் காரணங்களும் இல்லை. இவற்றின் வாழ்க்கை 'உடல் ஊழ்' என்ற தத்துவத்தின் படியே நடக்கின்றன. உடல் ஊழுக்கு அப்பாலும் வாழ்க்கையில்லை. இப்பாலும் வாழ்க்கை இல்லை. அருந்துதலும் பொருந்துதலும் என்ற அளவில் வாழ்க்கை வட்டம் சுழல்கின்றது.

மனிதனுக்கு 'மனம்' என்ற ஆறாம் அறிவால் நன்மையும், தீமையும் வந்து சேருகின்றன. விலங்குகட்கு இருக்கின்ற 'உடல் வாழ்' என்ற தத்துவமும், 'வினை ஊழ்' என்ற தத்துவமும் அவன் வாழ்க்கையை இரட்டை மாட்டு வண்டி போல் இழுத்துச் செல்கின்றன. உடல் ஊழும், வினை ஊழும் ஒன்றுக்கொன்று ஒத்து இழுக்கும்போது 'மனித வாழ்க்கை' என்னும் வண்டி ஒழுங்காகச் சென்று, சேர வேண்டிய இடத்தை அடைகிறது. இவை இரண்டும் ஏறுமாறாக நடந்தால், 'கட கட வண்டி லொட லொட வண்டி, மாடு ரெண்டும் சண்டி வண்டிக்காரன் நொண்டி' என்ற கதையாய்ப் பயணம் பெரும்பாடாகி விடுகிறது.

# 3. உடல் தத்துவம்

விலங்கினங்களின் அறிவு பகுத்தறியும் உணர்வோடு கூடாமல், உலகத்துப் பொருள்களை மட்டும் அறிவிக்கும் ஐம்புலன்களோடு இயைந்து நிகழ்கிறது. எனவே பசியெடுத்தால் உணவைத் தேடி உண்டு பசி ஆறுதலும், பருவம் வாய்ந்தபோது காமம் மிகுந்து பொருந்திக் களித்தலும் எனக் காலம் கழிக்கின்றன. விலங்கினங்களின் அறிவு புறப்பொருள் பற்றிய புற அறிவாய் மிகச் சிறியதாய் இருத்தலின் அவற்றின் அறிவு 'சிற்றறிவு' எனப்படுகிறது. எனவே அவை அடையும் இன்பமும் மிகச்சிறியதாகவே இருக்கும். அது 'சிற்றின்பம்' ஆகும்.

மனிதன் அறிவு புறத்தே உள்ள உலகத்துப் பொருள்களை மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறி வாயிலாக அறிவதுடன் அங்ஙனம் அறிந்தவற்றைத் தமது அகத்தே கொண்டுபோய் வைத்து 'இது நல்லது, இது தீயது' எனவும் 'இஃது இதனை ஒக்கும், இஃது இதனை ஒவ்வாது வேறுபட்டது' எனவும் பகுத்துணர வல்லதாயும் இருக்கிறது. ஆகவே விலங்கினங்களின் அறிவை விட எத்தனையோ பெரிதான இவ்வகப்புற அறிவால் வரும் இன்பமும் அச்சிற்றுயிர்கள் எய்தும் இன்பத்திலும் எத்தனையோ மடங்கு பெரியதாய்த் திகழ்கின்றது.

அகப்புற அறிவால் பேரறிவு பெற்றுள்ள மனிதன் புற அறிவை மட்டுமே பெற்றுள்ள விலங்கின வாழ்க்கையினின்று மேம்பட முடிந்தது. மாங்கனி ஒன்றைக் குரங்கு தின்றது எனின் தின்று பசி அடங்கிய அளவிலே அதன் முயற்சி நின்றுவிட்டது. மாங்கனியின் சுவை, பலாப்பழத்தின் சுவையைவிட வேறுபட்டது என்ற உணர்வு மனிதனுக்கு மட்டுமே தோன்றக்கூடியது. வேறுபடுத்திப் பார்த்தலும், பகுத்துப்பார்த்தலும் போன்ற முயற்சிகள் அறிவு வளர்ச்சிக்கு வித்திட்டன. அறிவு வளர்ச்சியில் வாழ்க்கை முறையில் தெளிவு பிறந்தது. தெளிவின் விளைவாகக் குடும்பம், பிள்ளைகள், பொறுப்பு, தொழில் என்பவை படிப்படியாக வந்து சேர்ந்தன. மனிதன் மட்டுமே தொழில் புரிகின்றான். தொழில் புரிய நேர்ந்ததால் கூடவே

கற்றலும் நிகழ்ந்தது. கற்றலும் தொழிலும் ஒன்றை ஒன்று வளர்த்தன. கல்வியும் தொழிலும் வளர்ந்ததால் வசதிகள் மேல் நாட்டம் ஏற்பட்டது. பொருள் தேடும் முயற்சி பெரிதானது. பொருள் தன்னை வந்து சேரச் சேர இன்பநாட்டமும் கூடிக்கொண்டே போயிற்று. எல்லையில்லாத இன்பத்தில் திளைத்ததால், துன்பத்தில் முடிகிற அனுபவம் ஏற்பட்டது. இதுநாள் வரையிலும் தான் அனுபவித்து வந்தது ஓரளவிற்கு உட்பட்ட இன்பமே எனவும் அவ்வின்பத்தால் பெரும்பயன் விளையாது என்றும் உணரத் தலைப்பட்டான். எனவே பேரின்ப நாட்டம் ஏற்பட்டது. அவனையும் அறியாமல் தத்துவ ஆராய்ச்சியும் வளர்ந்தது.

மனிதவாழ்வு பற்றிய எல்லாத் தத்துவங்களும் உடலை அடிப்படையாக வைத்தே செயல்படுகின்றன. உடம்பை வைத்துக்கொண்டுதான் வாழ்க்கை என்னும் ஓவியத்தை வரையவேண்டும். கண்டோர் கண்களையும், கருத்தையும் கவரும் வண்ணம் வாழ்க்கை ஓவியம் கவின் பெற வேண்டுமெனில் உடல் நலம் பேண வேண்டும். உடல்நலம் பேண உடல் பற்றி நன்கு அறிந்து கொள்ள வேண்டும். உடற்கூறு பற்றிய அறிவு வேண்டும். உடற்கூறு பற்றிய அறிவு இல்லாமல், உடலைப் பராமரித்தல் இயலாது. உடற்கூறு பற்றியும் உள்நடக்கும் வினைகள் பற்றியும் அறிவது மிகுந்த நன்மையைத் தரும்.

மனித உடலை எண்சாண் குடில் என்பார்கள். "எட்டடிக் கூட்டுக்குள்ளே, முருகா இன்னும் எத்தனைநாள் இருப்பேன்?" என்று வினவுகிறார் முருகனடியார் ஒருவர். 'எண்சாண் உடம்பிற்குச் சிரசே பிரதானம்' என்ற கூற்றிலும் 'எட்டு' அளவே கூறப்பட்டுள்ளது. கூடு என்றாலும் கட்டடம் என்றாலும் ஒன்றுதான். 'தோல் துருத்தி' என்றார் ஒரு சங்கப்புலவர். வையம் தழைத்து மாண்புற வழிகாட்டி அறம், பொருள், இன்பம் வகுத்துரைத்துச் செம்பொருள் தந்த திருவள்ளுவர் 'என்புதோல் போர்த்த உடம்பு என்று கூறுகிறார்.

ஒரு கட்டடம் போல்தான் உடம்பும் அமைந்துள்ளது. ஒரு கட்டடத்தின் அடிப்படைப் பொருள் கல்லும், செங்கல்லும், சிமெண்டும், மேற்பூச்சுகளும் ஆகும். இவற்றினும் அடிப்படையானது செங்கல்லும் சிமெண்டுமே. மேற்பூச்சுகள் தேவைக்கு ஏற்பவே அமையும். செங்கல்லும் சிமெண்டும் இன்றிக் கட்டடம் எழும்பாது. கட்டடத்திற்கு எவ்வாறு செங்கல் அடிப்படை உறுப்போ அதுபோல் எல்லா உயிரினங்களின் உடம்பு

அமைப்பிற்கு அடிப்படை செல் அமைப்பு ஆகும். உடம்பினுள் உடம்பாய் இருந்து உருவத்தையும் இயக்கத்தையும் தருகின்ற இச்செல்லை வெறுங்கண்களால் காண இயலாது. உருப்பெருக்கி (microscope) என்கிற நுண்ணோக்கி வாயிலாகத்தான் காண முடியும். நுண்ணோக்கி ஒரு செல் அமைப்பைப் பல ஆயிரம் மடங்கு உருப்பெருக்கம் செய்தபிறகுதான் கண் அதனைப் பார்க்கமுடியும். பார்த்து அதனுள் பொதிந்துள்ள இன்னும் பல செல் நுண்பொருள்களைக் காண இயலும். மிகமிக நுட்பமானவை செல்லும் அதனுள் அடங்கியிருக்கும் செல் நுண்பொருள்களும்.

செல்கள் பல இணைந்தும், பிணைந்தும் 'திசு' என்ற அடுத்த நிலை அமைப்பு உருவாகிறது. செல்லைவிடப் பெரியது திசு. திசு தனித்தனி உறுப்புகள் உருவாவதற்கு உரிய கட்டுமானப் பொருள் ஆகும். எலும்பை உருவாக்கும் திசு எலும்புத் திசு. நரம்பை உருவாக்கும் திசு நரம்புத்திசு. தசையை உருவாக்கும் திசு தசைத்திசு. தோலை உருவாக்கும் திசு தோல்திசு. இதயத்தை உருவாக்கும் திசு இதயத்திசு. உணவுக்குழாய், இரைப்பை, சிறுகுடல் மற்றும் பெருங்குடல் போன்றவற்றைக் குடல் திசு உருவாக்குகிறது. இரத்தத் திசு இரத்தத்தைத் தருகிறது. இவ்வாறே உடலின் கட்டுமானப் பணியில் பெரும்பங்கு திசுக்களுடையதே ஆகும்.

ஒரே பணியைச் செய்யும் திசுக்கள் ஓர் உயிரியல் ஒழுங்கில் அமைந்து உறுப்புகளை (Organs) உருவாக்கம் செய்கின்றன. இதயம் ஓர் இன்றியமையாத உறுப்பு. நுரையீரல் ஓர் உயிர் வளர்க்கும் உறுப்பு. தலைமை உறுப்பாக அமைந்திருப்பது மூளை. கண்ணும், காதும் அறிவு வாயில்களாக அமைந்த உறுப்புகள்.

கண்ணில் பார்வைத் திசுக்கள் பார்வைக்கு உதவும். செவியில் உள்ள திசுக்கள் ஒலியை உணரும் ஆற்றல் உடையன. எல்லா உறுப்புகளிலும் நடைபெறும் செயல்களை மூளைக்கும் அறிவிக்கும் செய்தித் தொடர்பாளர் பணியைச் செய்வது நரம்புத்திசு. இரத்தத்திசு இரத்தக்குழாய்களில் எங்கும் நிற்காமல் ஓடிக் கொண்டே உறுப்புகளுக்கு ஊட்டச்சத்தை ஊட்டி வேண்டாதவற்றைச் சுமந்து கொண்டு வந்து கழிவைக் கழிவு உறுப்புகளில் கொட்டி வெளியேற்ற உதவுகிறது. ஓட்டாமல் ஓடும் திசு இரத்தத்திசு. இங்ஙனம் உடலுக்குள் பல்வேறு பணிகளைத் திசுக்களே மேற்கொள்ளுகின்றன.

செல் கூட்டம் திசுவாகிறது. திசுக்களின் திரட்சி உறுப்பாகிறது. ஒரு குறிப்பிட்ட பணியை மேற்கொள்ளும் உறுப்புகள் ஒன்றிணைந்து ஒரு மண்டலத்தை (System) உருவாக்குகின்றன. நம் உடலில் பல மண்டலங்கள் இருக்கின்றன. எலும்புகள் யாவும் சேர்ந்து அமைந்தது எலும்பு மண்டலம். உடலில் எங்கணும் அமைந்துள்ள நரம்பு வளையமும் மூளையும் சேர்ந்தது நரம்பு மண்டலம். இதயம், இரத்தம் ஓடும் குழாய்கள், இரத்தம் ஆகியவை இரத்த ஓட்ட மண்டலம் ஆகும். நுரையீரல், தோல், சிறுநீரகம் ஆகியவை கழிவுமண்டலமாகும். மூக்கு, மூச்சுக் குழாய்கள், நுரையீரல் ஆகியவை அடங்கியது மூச்சுமண்டலம். வாய், உணவுக்குழாய், இரைப்பை, சிறுகுடல், பெருங்குடல், மலக்குடல், கல்லீரல், கணையம் ஆகியவை செரிப்பு மண்டலமாகும். உடல் நலத்திற்கும், வளர்ச்சிக்கும் பாதுகாப்பிற்கும் தேவையான நீர்களைச் சுரக்கும் சுரப்பிகள் அடங்கியது சுரப்பி மண்டலமாகும். இவ்வாறு பல மண்டலங்களால் கட்டப்பட்டுள்ளதே மனித உடலாகும்.

எலும்பு மண்டலம் ஒரு மனிதனின் உருவ அமைப்பில் பெரும் பங்கு ஆற்றுகிறது. தோல் அழகான தோற்றத்தைத் தரவல்லது. தோலின் நிறத்தைப் பொறுத்து மேனிக்கு மெருகு கூடுகிறது. தோல் உடம்புக்கு மிகவும் பாதுகாப்பான உறையாகும். "ஈச்சிறகன்னதோர் தோல் அறினும், வேண்டும் காக்கை கடிவதோர் கோல்" என்றார் ஒரு புலவர். தோல் அறுந்தால் உடம்பு புண் ஆகிவிடும். மிகவும் கவனமாகப் பாதுகாக்க வேண்டும்.

உடம்பின் தத்துவம் ஒன்றுக்குள்ளேதான் தொண்ணூற்றாறு தத்துவங்களும் கோயில் கொண்டுள்ளன. பலர் இதனை அறியார். எனவே, 'புண்புலால் யாக்கை' என்றும், 'இடும்பைக் கொள்கலன்' என்று இழித்தும் பழித்தும் கூறுவர். தத்துவங்களின் உறைவிடமும், உய்விடமும் அதுவேதான் என்று உணர்ந்தவர்கள் உடம்பினைப் போற்றி வாழ்ந்து உறுபயன் பெற்றனர்.

பன்னிரண்டு திருமுறைகளுள் திருமூலர் இயற்றிய திருமந்திரம் பத்தாம் இடத்தைப் பெற்றுள்ளது. எனினும் சமயநூல்களுள் அதுவே முதன் நூலாகும். சைவ சமயத்தார்க்கு உரிய பதினான்கு சாத்திரங்களுக்கும் வழிகாட்டியுமாகும். திருமந்திரம் சமயநூல் மட்டுமன்று பார் போற்றும் உயர்ந்த அறநூலும் ஆகும். தோத்திர நூலும் ஆகும். யார் எதை நாடினும் திருமந்திரம் என்னும் அட்சய பாத்திரம் தங்குதடையின்றி அள்ளித் தரும்.

தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும் - கோவை
திருவாசகமும் திருமூலர் சொல்லும்
ஒருவாசகம் என்று உணர்

என்று அவ்வையார் போற்றிப் பாடியுள்ள பெருமை உடையது திருமந்திரம்.

'வெகுளிக் கூறினும் அருளிக்கூறினும் தப்பாது பயன்தரும்' நிறைமொழியும் அதனால் ஆன மறைமொழியும் வல்லவர் திருமூலர். திருமூலர் ஒரு நிறைமொழி மாந்தர். உடல் பற்றி அவர் கூறிய கருத்தினை அறிவது மிகவும் பயனுடைய செயலாகும். பண்புடைய பணியுமாகும். 'சரீர சித்தி உபாயம்' என்ற பகுதியில் சித்தர் திருமூலர்

உடம்பினை முன்னம் இழுக்கென்று இருந்தேன்
உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்று
உடம்பினை யான்இருந்து ஓம்புகின்றேனே.

என்று கூறுகிறார். ஒரு சமயம் உடம்பை இழிவானது என்று கருதினேன். அது தவறு என்று உணர்ந்தேன். உடம்பினுள்ளே தத்துவமும் தத்துவம் கடந்த பொருளும் குடிகொண்டிருப்பதை அறிந்து கொண்ட பின் உடம்பினைப் பாதுகாக்கும் கடமையை உணர்ந்தேன் என்று தெளிவுபடுத்துகிறார்.

வினையின் விளைவாகத் தன் விருப்பமின்றியே முகந்து கொண்ட உடம்பினை இழித்துப் பழித்தவர் யாதொரு பயனையும் பேற்றினையும் அடையமாட்டார் என்பதை உறுதியாகப் பகரலாம்.

எனவே மீண்டும் மீண்டும் திருமூலர் கூறுவதை அறிந்து கொண்டால் உடலின் அருமையை உணரலாம். உறுதிப்பட உணரலாம்.

உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே

உடம்பு அழியின் உயிரும் நீங்கும். உடல் வலிமை இழந்தவர் உறுதியான ஞானத்தை அடையமாட்டார். ஆதலால் உடம்பைப் பேணிக் காக்கும் முறையை அறிந்து உடம்பைக் காத்து உயிரையும் காத்திடவேண்டும்.

உயிர் உடம்பில் உள்ளபோது உடம்பின் பயனாகிய, உறுபொருளாகிய ஞானத்தைப் பெற்றுவிட வேண்டும். இவ்வாறு மீண்டும் ஒரு முறை திருமூலர் கூறி உடம்பின் இன்றியமையாமையை உணர்த்துகிறார்.

உடம்பு தன் அளவில் (As it is) தீயதுமன்று நல்லதுமன்று; 'அணு ஆற்றல்' பொதிந்துள்ள யுரேனியம் போன்றது. உடம்பினுள்ளே வாழ்கின்ற 'நான்' என்பவன் அதை எப்படிப் பயன்படுத்துகிறானோ, போற்றுகிறானோ அதற்கேற்பப் பயன் அடையலாம். நல்வழியில் கட்டுப்பாட்டுடன் உடலோடு வாழ்ந்தால் உறுதிப்பேற்றினை அடையலாம். கட்டுப்பாடின்றிப் 'போனால் போகட்டும் போடா' என்ற போக்கு இருந்தால் அணுகுண்டு போல் பேரழிவு உண்டாகும். உணர்ந்து உடலைப் போற்ற வேண்டும். நெடுநாள் வாழ்ந்து நற்பயன் அடைய வேண்டும்.

உடம்பினை எங்ஙனம் பராமரிப்பது? பராமரிக்கும் முறைகள் யாவை? என்பதை நன்கு அறிந்து கொள்ள வேண்டும். உடம்பின் அடிப்படை உணவே. சோறும் நீருமே உடம்பை வளர்க்கும். உணவே உற்றுழி உதவும் மருந்துமாகும். உடலை வளர்க்கும் முறைகளில், உடலைப் பாதுகாக்கும் உத்திகளில் முதன்மையானது உணவேயாகும். இங்கு உடம்பின் முதல் அடுக்கு அன்னமய அடுக்கு ஆகும் என்பது குறிப்பிடத்தக்கது.

உடற்பயிற்சிகள், ஆசனப் பயிற்சிகள் தியானம் போன்ற யோகப் பயிற்சிகள் யாவையும் தேவையே எனினும் நல்ல திடமான உடலின்றி இப்பயிற்சிகளைச் செய்வது நல்லதல்ல. பயிலும்போது உண்டாகும் வருத்தத்தையும், அதிர்வுகளையும் உடல் தாங்கவேண்டும். எனவே திடமான உடல் வேண்டும். திடமான உடம்பு நல்ல சத்துணவினால் மட்டுமே அமையும். எனவே, உணவின் அருமையையும் பெருமையையும் உணர்ந்து நல்ல உணவுப் பழக்கத்தைக் கைக்கொள்ள வேண்டும்.

நம் உடலோடு ஒட்டிப் பிறந்தது பசி. இதனைப் பசிப்பிணி என்றும் கூறுவர். பசிப்பிணியும் பிறவிப்பிணியும் உடல்தோறும் சாகும்வரையிலும் தொடரும். அளவான பசி நல்லதே. அது பிணி எனினும் உண்ணத் தூண்டுவது அதுவே. எனவே, இயல்பான பசி நன்றே செய்யும். பசி எடுத்தால் பொருந்தும் உணவினை உண்ண வேண்டும்.

பசி அளவாக இருப்பினும், மிகையாக இருப்பினும் உணவால் மட்டுமே தணிக்க முடியும். உணவு இல்லாமல் பசி தணியாது. பசியறாத மனிதன், பசியால் வாடும் மனிதன் எல்லா மாண்புகளையும்

புறந்தள்ளிவிடுவான். பசியால் பண்பிழக்கும் வேதனையைப் பண்டைத் தமிழ்நூல் மணிமேகலை கண்ணீர் மல்க வைக்கும் துயரக் காட்சியாகக் காட்டுகிறது.

குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்
நாணணிகளையும் மாணெழில் சிதைக்கும்
பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி என்னும் பாவி

(மணிமேகலை பாத்திரம் பெற்ற காதை)

கடும்பசியால் உருக்குலைந்து வாடித் துடிக்கும் ஒருவன் ஒரு பிடி சோற்றுக்காகத் தான் பிறந்த குடிப்பெருமையைத் தூக்கி எறிந்து விடுவான். படித்ததை எல்லாம் மறந்துவிடுவான். மான வெட்கத்தை விட்டுவிடுவான். கூச்சமில்லாமல் பெண்டு பிள்ளைகளுடன் பிறர் வீட்டில் சோற்றுக்காக அலைய வைப்பான் பசிப்பிணி என்னும் பாவி.

நீரின்றி வாடும் பயிரினையும் சோறின்றித் தவிக்கும் மனிதனையும் கண்டு உளம் வருந்தினார் வடலூர் வள்ளல். "வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன், வீடுதோறும் இரந்தும் பசி அறாத வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்" என்று வருத்தந் தோயப் பாடுகிறார். அதனால் பசித்து வந்தோர்க்கு உணவு அளிக்கத் தருமசாலை நிறுவினார். இன்று வரை பசி நீக்கும் நல்லறம் நடந்து வருகிறது.

ஆபுத்திரனும், மணிமேகலையும் அட்சய பாத்திரங்கொண்டு பசிப்பிணி போக்கும் அறத்தில் ஈடுபட்டனர். ஊர்தோறும் ஊர்தோறும் சென்று மணிமேகலை "கண்ணில்லாதவர்களே வாருங்கள், காது கேளாதவர்களே வாருங்கள், கைகால் முடம் ஆனவர்களே வாருங்கள், உணவளித்துப் பாதுகாக்கும் உறவினர் இல்லாதவர்களே வாருங்கள், பிணியால் நடுங்கிக் கொண்டிருப்பவர்களே வாருங்கள், பசித்தோர் எல்லோரும் வாருங்கள். வயிறார உண்ணுங்கள்" என்று கூவியழைத்து, வருந்தி அழைத்து உணவிட்டாள். ஆபுத்திரனும் மணிமேகலையும் பசியின் கொடுமையையும் தீமையையும் உணர்ந்து உணவறம் மேற்கொண்டு உயர்ந்தனர்.

நோன்பு இருக்கிறேன், விரதம் இருக்கிறேன் என்று எந்தவித உணவும் உட்கொள்ளாமல், நீரும் அருந்தாமல் பல வேளைகளில்

பட்டினியாக இருப்பது, பல நாட்கள் பட்டினியால் உடலை வாட்டுவது என்பதெல்லாம் அறியாமை. இச்செயல், இக்கொடுஞ் செயல், இத்தீய செயல் அறமும் அன்று; தவமும் அன்று. உடல் தகுதியிழந்தவர் எந்தப் பேற்றினையும் அடைய முடியாது என்பதை நன்றாக உணர்ந்து கொள்ள வேண்டும்.

அரிய பெரிய தவம் புரிந்தோருக்கும் பசி எடுக்கும். அவர் பசியைப் பொறுத்துக் கொள்ளலாம். ஆனால் பசியைப் போக்கிக் கொள்ள இயலாது. அவரால் பிறர் பசியையும் போக்க இயலாது. பசியைத் தாங்கிக் கொள்ளும் ஆற்றலுடைய தவ முனிவர்களை விடப் பசிபோக உணவளிப்பவரே பெரிய ஆற்றலும் பெருமையையும் உடையவர் என்று கூறுகிறார் வள்ளுவர்.

ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின் (குறள் 225)

நல்ல முறையில் தொழில் செய்து, நேர்மையான வழியில் பொருள் ஈட்டுபவன் செலவு போக மீதியை வங்கியில் சேமித்து வைப்பான். சேமித்து வைக்க விரும்புபவன் பாதுகாப்பான வங்கியைத் தேடிப் பிடித்து அதில் தன் பணத்தைச் சேமித்து வைப்பான். ஆனால் வள்ளுவர் நம் கண்ணில் படுகின்ற, நாம் தெரிந்து வைத்துள்ள வங்கிகள் எல்லாவற்றையும் விடப் பணக்காரன் ஒருவனுக்கு மிகவும் பாதுகாப்பான வங்கி "பசித்த வயிறு" என்கிறார்.

அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி (குறள் 226)

எல்லா நன்மைகளையும் அழிய வருதலின் 'அழிபசி' என்றார். அற்றார் அழிபசி தீர்க்கச் செலவிட்ட பணம் பன்மடங்காகிப் பின் பசி தீர்த்தவர்க்கே வந்து உதவும் என்பது அறம்.

உடலின் இயற்கை பசி எடுத்தல். பசி எடுத்தால் நல்ல உணவு சாப்பிட வேண்டியது மிகவும் அவசியம். உடம்பில்லாமல் எந்த அறத்தையும் செய்ய முடியாது. அதனால்தான் வள்ளுவர் 'உணவே மருந்து' என்று கூறி உடலோம்பும் நெறியினை மிகவும் எளிமையாக இனிமையாக வகுத்துரைத்துள்ளார்.

உணவுப் பழக்கத்தை மிக உயர்ந்த தத்துவமாகப் பார்க்கிறார் தெய்வப்புலவர் திருவள்ளுவர். திருவள்ளுவர் ஒப்புயர்வற்ற உணவு

மருத்துவர். உணவு மருத்துவர் திருவள்ளுவரின் கருத்துக்களை நான் மறைகளும் அவற்றின் பிழிவாகிய உபநிடதங்களும் ஒத்துக்கொள்கின்றன. இந்த வடமொழி நூல்கள் உணவே படைப்புக் கடவுள், பிரம்மன் என்று வலியுறுத்திக் கூறுகின்றன.

உடம்புக்கு இயல்பாகிய நோய் மூன்று வகையினதாகும். அவை வாதம், பித்தம், சிலேத்துமம் எனப்படுகின்றன. இம்மூன்றும் நோயாகி வருத்துவதற்குக் காரணங்கள் இரண்டு. சுவை, வீரியம், அளவு இவைகளை அறியாமல் உணவருந்தும் பழக்கம் ஒரு காரணம். மனம், மொழி, உடல் ஆகிய மூன்றும் ஒத்துப்போகாமல் செய்யும் தொழில்கள் இரண்டாவது காரணம்.

ஒரு வேளை பசி எடுத்த உடன் உணவு உட்கொள்ளுகிறான் ஒருவன். மீண்டும் உணவு உண்ண வேண்டுமாயின் முன்னர்ச் சாப்பிட்ட உணவு முற்றிலும் செரித்துத் தீர்ந்து விட்டதா என்பதை நன்றாக அறிந்து கொள்ள வேண்டும். எவ்வாறு அறிந்து கொள்ள முடியும்? மீண்டும் நல்ல பசி எடுக்க வேண்டும். நல்ல பசி இருந்தால் உடல் களைப்படைவது போல் தெரியும். அறிகுறிகளால் நல்ல பசிதான் என்று உறுதிப்படத் தெரிந்துகொண்டபின் அவன் உண்ணலாம். இப்படி உண்டால் அவன் நலமாக இருப்பான். எந்த நோயும் அண்டி வருத்தாது. பசியறிந்து உண்ட உணவே நோய் வருமுன் காக்கும். தடுப்பு மருந்தாகி உடலைப் பிணியின்றிப் பாதுகாத்து வளமாக்கும்.

மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றது போற்றி உணின் (குறள் 942)

நீண்டநாள் வாழ்ந்து எய்த வேண்டிய பேறுகளை அடைய விரும்பும் ஒருவன் முன்னர் உண்டது செரித்த பின், இனிச் செரிக்கும் அளவினை நன்குணர்ந்து அதற்கேற்ப உண்ண வேண்டும். எத்தனையோ பிறவிகட்குப் பிறகு மானிடப் பிறவி வாய்க்கிறது. எனவே மனித உடம்பைப் பெற்றவன் நெடுநாள் வாழும் நெறியை அறிய வேண்டும். நெடுநாள் வாழும் நெறி நல்ல உணவு நெறியாகும்.

அற்றால் அளவறிந்து உண்க அஃதுடம்பு
பெற்றால் நெடிதுய்க்கும் ஆறு (குறள் 943)

முன் உண்டது முற்றிலும் செரித்து விட்டதையும் செரித்தலின் பயனாகிய 'இரதம்' சற்று தாமதித்தே ஆறும் ஆதலின் அதுவும்

செரித்துவிட்டது என்பதையும் நன்கு உணர்ந்த பின்பே அடுத்து உடலுக்குப் பொருந்துகின்ற உணவை அளவாக உண்ண வேண்டும். குளிர்காலம், கோடைகாலம், வேனிற் பருவம், வெஃகைப் பருவம் போன்ற பருவகாலங்களையும், காலை, மாலை இரவு எனச் சிறுபொழுதுகளையும் எண்ணிப்பார்த்து உணவு கொள்ள வேண்டும். இவ்வாறெல்லாம் எண்ணிப் பார்க்காமல் மனம்போனபடி உண்டால், உண்டு களித்தால் மரணத்தை அறிவிக்கும் நோய்வாய்ப்படும் நிலைமை ஏற்பட்டுவிடும். தேனே எனினும் காலமும் அளவும் ஒத்துப்போகவில்லை என்றால் நஞ்சாகிவிடும். அளவுக்கு மீறினால் அமிழ்தமும் நஞ்சாகும் என்ற பழமொழியும் எண்ணிப் பார்க்கத் தகுந்ததாகும்.

அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து (குறள் 944)

வாதம், பித்தம், சிலோத்துமம் என்று சொல்லக் கூடிய நாடிகள் நம்முன் மாறுபட்டு நோய் உண்டாக்காத உணவுவகைகளைத் தெரிந்து உண்ண வேண்டும். ஆசைஆசையாக உள்ளம் விரும்பியபடி அளவு கடந்து உண்ணாமல் பிணி வாரா அளவில் உண்ண வேண்டும். இவ்வாறு உண்டால் நோயினால் உடம்பின் கண் தங்கியுள்ள உயிர் துன்பம் உறாது. குறைந்த அளவு உணவு எப்போதும் நலமே தரும்.

உண்ணும் உணவைப் பற்றி உணவின் அளவு, காலம், அவ்வுணவினால் உடலுக்கும் உயிருக்கும் உண்டாகும் நன்மை ஆகியவற்றைத் தெரிந்து கொண்டால் வருத்தும் நோய் அண்டாது. இளம் வயதிலேயே நல்ல உணவு நெறியைப் பின்பற்றினால் அளவற்ற நன்மை உண்டாகும்.

மாறுபா டில்லா உண்டி மறுத்துண்ணின்
ஊறுபா டில்லை உயிர்க்கு (குறள் 945)

நன்கு பசி எடுத்த பின் நிறைய உண்ண ஆசையாய் இருக்கும். சுவையான உணவு நமக்காகக் காத்திருக்கிறது என்று அறிந்தால் ஆசையும் ஆர்வமும் மேலெழும். ஒரு பெருமூச்சோடு ஆசையையும் ஆர்வத்தை ஆறப்போட்டு விட்டு உண்ணலாம். அளவில் கொஞ்சம் குறைத்து உண்டால், உடலால் பெறும் இன்பம் குறையவே குறையாமல் இருக்கும். மனம், மொழி, மெய் மூன்றும் ஒரே நேர்கோட்டில் இருந்து இயங்கினால் யோகியர் அடையும் இன்பம் உண்டாகும். குறைத்து உண்ணுபவனை யோகி என்பர்.

பசி, பசி என்று அலைந்து அளவற்று உண்ணுபவன் விலங்கு போன்றவன். 'யானைப் பசி போல்' மனிதன் பசி இருந்தால் அடுத்தடுத்து ஓய்வின்றி உண்ணுவதே தொழிலாகிவிடும். அவனை, திருவள்ளுவர், 'கழிபேர் இரையான்' என்று குறிப்பிடுகிறார். 'கழிபேரிரையான்' என்றால், இரையை அளவின்றி எடுத்து அதனால் வருந்தும் விலங்கு போன்றவன் என்பது பொருளாகும்.

இழிவறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
கழிபேர் இரையான்கண் நோய் (குறள் 946)

ஒருவன் தன் உடற்கூற்றின் இயற்கையை அறியாமல், அதற்கேற்ற உணவும் காலமும் ஆராயாது விரும்பியதோர் உணவை விரும்பியதோர் காலத்தில் வயிற்றுத்தீயின் அளவறியாது உண்ணும் பழக்கம் தொடர்ந்தால் அவன் உடம்பு எல்லையற்ற நோய்களை வளர்க்கும் குப்பைத் தொட்டியாகிவிடும்.

தீஅள வின்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோய்அள வின்றிப் படும் (குறள் 947)

மனித உடம்பின்கண் நின்று நிலவி, அதனையே பற்றுக்கோடாகக் கொண்டிருக்கும் மற்ற பிற தத்துவங்கள் அனைத்தும், வளமான உடம்பில், திடமான உடம்பில் நன்னெறியிலே செல்லும் உடம்பில் நல்ல பயன் தரும் உடம்பே ஆலயமாகி, உள்ளிருக்கும் சிவன் சிவமாகி ஆராதிக்கப்படும் நிலைக்கு உயர்ந்து உன்னத நிலைகளை எல்லாம் எட்டிவிடும்.

உள்ளம் பெருங்கோயில் ஊன் உடம்பு ஆலயம்
வள்ளல் பிரானார்க்கு வாய் கோபுர வாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சிவன் சிவலிங்கம்
கள்ளப் புலன் ஐந்தும் காணா மணி விளக்கு - திருமூலர்.

இனி அதர்வண வேதம் கூறும் கருத்து அறிய வேண்டியதாகும். அன்னம் அல்லது உணவின் பெருமையை அதர்வண வேதம் மிகவும் அழகாக, கவினுற எடுத்துரைக்கின்றது. இதனைப் பார்க்கும்போது அன்னமும் மனிதனுக்குப் பேரின்பத்தை அளிக்கவல்லது என்று தெரிகிறது. உலகம் முழுவதுமே அன்னமயமானது. இங்கு இருப்பதெல்லாம் அன்னத்தின் தன்மயமான உருவங்களே. உலகம் அன்னத்தின் விஸ்வரூபம்.

அன்னத்தை எப்படி உட்கொள்ள வேண்டும் என்பதற்கு முனிவர்களும் ரிஷிகளும் உதாரணமாகச் சொல்லப்படுகிறார்கள். அவர்கள் அன்னத்தைப் பயன்படுத்திய வழியிலேயே நாமும் செல்வது நலம் பயக்கும் என்று உணர்த்தப்படுகிறது. இல்லையேல் பெருத்த நாசம் உண்டாகும் என்ற எச்சரிக்கையும் விடுக்கப்படுகிறது.

அன்னத்தினால் மனிதனுக்கு மகிழ்ச்சி வளர வேண்டும். ஆனால் மனிதன், இதே அன்னத்தினால் வேதனையும் அடைகின்றான். ஏன் இப்படி நடக்கிறது? வினாவுக்கு விடைதேட வேண்டும்.

அன்னமே அன்னத்தைச் சாப்பிடுகிறது. அதாவது சாப்பிடப்படுவதும் சாப்பிடுவதும் ஒன்றுதான். அனுபவிப்பவன் அனுபவிக்கப்படுகிறது இரண்டுமே ஒன்றுதான். அன்னமே பிரம்மம். பிரம்மம் அர்ப்பணத்திற்கு உரியது. பிரம்மமே அர்ப்பணம் செய்யப்பட வேண்டியது.

பகவத்கீதையில் கண்ணன் "கொல்பவனும் நானே கொல்லப்படுகின்றவனும் நானே" என்று கூறுகிற தத்துவம் இங்கு அன்னம் பற்றி மறைமுகமாக உரைக்கப்படுகிறது. நாம் உணவு உண்டபின் சற்றே ஓய்வாக இருக்கும்பொழுது நல்ல மனநிலையுடன் வெளியே விடப்படும் மூச்சுக்காற்றால், தாவரங்கள் உயிர் வாழ்கின்றன. 'சாப்பிடுவது' என்பது ஒரு சாதாரணமான தத்துவம்தான். அன்றாடும் நடைபெறும் செயல்தான். அதில் சில தத்துவங்கள் மறைந்திருப்பதை அதர்வண வேதம் சுட்டிக்காட்டுகிறது.

தேவைக்கேற்ப உணவு அவசியம். தேவைக்கு அதிகமான உணவை ஒருவன் வைத்திருப்பது பிறருக்கு உரிய உணவைத் திருடி விட்டதாகப் பொருள். ஒருவன் அன்னத்தைப் பசிக்காக, உடல் வளர்ச்சிக்காகச் சாப்பிட வேண்டுமே தவிர அதனை ஒரு சுகபோகத்தின் சாதனமாகப் பயன்படுத்துதல் கூடாது. ஒருவன் உண்பதால், நாம் அனைவரும் உண்பதால் நாம் மட்டுமல்ல தாவர இனங்களும் நன்றாக வளர்கின்றன. நாம் விடும் மூச்சுக் காற்றே அத்தாவரங்களுக்கு உணவு. அது திரும்பத் தரும் உணவை மறுபடியும் நாம் பெறுகிறோம்.

எனவே, உடம்பின் முதல் அடுக்கான அன்னமய கோசம், நல்ல உணவினால் மட்டுமே வளம் பெறும். நல்ல உரம் பெறும். நல்ல உடல் வாழ்க்கையின் எல்லா முயற்சிகளிலும் உறுதுணையாய் விளங்கும்.

# 4. பிராணன் தத்துவம்

## (பிராணமய உடம்பு)

பருவுடல் தத்துவத்திற்குப்பின் அடுத்து அறிந்துகொள்ள வேண்டிய தத்துவம் பிராணத் தத்துவம் ஆகும். பிராணனைப் பற்றி அறிந்துகொள்வது பிராண வித்யை (கல்வி) எனப்படும். பிராணன் பற்றிய அறிவு மிகவும் மேலானதும் அவசியமானதும் ஆகும். நம் உடலில் பலவிதமான சக்திகள் இருக்கின்றன; இயங்குகின்றன. எல்லா வகையான சக்திகளிலும் பிராண சக்தியே தலையாயது. உடலில் உள்ள பல சக்திகள் ஒன்றன் பின் ஒன்றாகச் செயல் இழந்தாலும், பிராண சக்தி தான் இயங்குவதை நிறுத்துவதில்லை. ஆனால் பிராண சக்தி செயலிழந்துவிட்டால் வேறு எந்தச் சக்தியும் செயல்படமுடியாது. பிராண சக்தியே எல்லாச் சக்திகளுக்கும் ஆதார சக்தியாகும்.

பிராணன் என்பது உயிர்ச் சக்தியாகும் (Life Energy). சமஷ்டிப் பார்வையில் பிராண சக்தி எங்கும் இயங்குகிறது. தனிப்பட்ட முறையிலும் பிராணன் இயங்காத இடமே இல்லை. எல்லா உடல்களுக்கும் பிராணனே பிரதானம். உயிரினங்களின் உடலில் உள்ள எல்லா அவையவங்களையும் பிராண சக்தியே இயக்கி வைக்கிறது. எல்லா அங்கங்களுக்கும் அதுவே ஆதாரம். எல்லா வகையான உடல்களும் பிராணனின் ஆட்சியில் உள்ளன.

பிரபஞ்சம் முழுவதும் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் பிராணன், தாயின் கருப்பையிலிருந்து குழந்தை வெளிவந்த உடனே உச்சந்தலை வழியாக மனித உடலுக்குள் செல்கிறது. ஆன்மாவில் பரவிவிடுகிறது. பழமும் சுவையும் போல ஆன்மாவில் பிராணன் பரவியுள்ளது. மனிதன் செயல்பாடுகளால் அது மனித உடம்புள் புகுகிறது. பிராணன் என்பது நம் உடலிலுள்ள சக்தி ஓட்டம். சுவாசப்பைகளின் (நுரையீரல்) இயக்கத்தை ஒழுங்குப்படுத்துவதாகும். இந்தப் பிராண இயக்கம் மூச்சுகளோடு இணைந்து நிற்பது. அது மூச்சினால் ஆவதல்ல. பிராணன் சுவாசப் பைகளை

இயக்கவல்லது. தசைக்கட்டுகளின் வலிமையை உறுதிப்படுத்தி ஒழுங்குபடுத்துவது.

பிராணனின் ஒரு கூறு உடலின் பௌதீக சக்திகளுடன் தொடர்பு வைத்துக்கொள்கிறது. மற்றொரு பகுதி ஆத்ம சக்தியுடன் தொடர்பு வைத்துக் கொள்கிறது. சரீர சக்தியுடன் தொடர்பு வைத்துக் கொள்ளும் பிராணனின் பாகத்திற்கு ஞானத்தை அடைவது மிகவும் சுலபமாகும். ஆனால் ஆத்மாவின் சக்தியுடன் பிராணனின் செயலை அறிவது அவ்வளவு எளிதானதன்று.

மனிதனின் இச்சா சக்தியால் தூண்டப்படும் பிராணன், உடலுக்கு ஆரோக்கியம் தரும் சக்தியாக மாறுகிறது. நம் உடல் ஐந்து அடுக்குகளால் (கோசங்கள்) ஆனது. ஒவ்வொன்றும் ஒரு விலைமதிப்பற்ற சொத்தாகும்.

அன்னமய சரீரம்
பிராணமய சரீரம்
மனோமய சரீரம்
விஞ்ஞானமய சரீரம்
ஆனந்தமய சரீரம்.

என்பவையே அவை. இவ்வைந்தில் பிராணமய சரீரமே மிகவும் தலையாயதாகக் கருதப்படுகிறது. மிகவும் பிரியமான சரீரம் என்று கூறப்படுகிறது. வடமொழியில் பிராணமய சரீரம் 'ப்ரிய தனு' என்று கூறப்படுகிறது.

எல்லோரும் பிராணமய உடம்பையே மிகவும் அதிகமாக விரும்புகிறார்கள். அம்மாதிரியே அபானனும் மனிதனால் விரும்பப்படுகிறது. பிராணனால் சக்தி வளர்கிறது. அபானத்தினால் உடம்பில் உள்ள நஞ்சு நீங்குகிறது. அதனால் உடம்பு தூய்மையாகிறது. பிராணன் தன்னில் ஒரு மருத்துவ ஆற்றலைப் பொதிந்து வைத்துள்ளது. இந்த மருத்துவ ஆற்றலே உடலில் உள்ள விஷத்தனமான சக்திகளை வெளியே கொண்டுபோக உதவுகிறது. பிராணனின் இந்தப் புனிதமான செயலால், 'பிராணன்' ஒரு மருத்துவனும் ஆகிறது.

ஒரு தாயும் தந்தையும் எப்படித் தம் பிள்ளைகளைப் பாசத்துடனும், ஆசையுடனும் வளர்ப்பார்களோ அவ்வாறே பிராண சக்தியும் நம்மை வளர்க்கிறது. அப்பிராண சக்தியை மேலும் மேலும் வலுப்படுத்தும் பயிற்சிகள் பிராணாயாமம் எனப்படுகின்றன.

## பிராணாயாமம்

பிராண சக்தியை அடக்கி ஆளுவதே பிராணாயாமம் எனப்படுகிறது. அதாவது சுவாசப்பையின் இயக்கத்தைக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வருவதாகும். இந்த இயக்கம் மூச்சினோடு இணைந்து நிற்பது. அது மூச்சினால் ஆவதல்ல. பிராணன் சுவாசப் பைகளை இயக்க அவ்வியக்கத்தினால் காற்று உள்ளே இழுக்கப்படுகிறது. சுவாசப் பைகளை இயக்குகிற தசைக்கட்டுகளின் வலிமையை அடக்கியாளுவதே பிராணாயாமம் ஆகும். பிராணாயாமம் உயர்வான யோகம் போன்றது.

பலவிதமான பிராணாயாமப் பயிற்சிகள் இருக்கின்றன. சராசரி வாழ்க்கையினருக்கு ஏதாவது ஒரு பிராணாயாமப் பயிற்சி போதுமானது. மிகவும் உகந்தது. நாடிசுத்திப் பிராணாயாமப் பயிற்சி எல்லோருக்கும் எளிதாகப் புரியும் ஆசனம் பத்மாசனம். ஓரிரு நாட்களில் பத்மாசன முறையில் அமர்தலைத் தெரிந்து கொள்ள முடியும்.

படுக்கை விரிப்பைத் தேவையான அளவில் மடித்துத் தரையில் விரித்துக் கொள்ளுங்கள். பத்மாசன நிலையில் வசதியாக அமர்ந்துகொள்ளுங்கள். உடலில் விறைப்பு எதுவும் வேண்டாம். முதுகுத்தண்டு நேராக இருக்க வேண்டும். இடதுகை முழங்காலின் மேலும் வலது கை மூக்கின் மேலும் இருக்க வேண்டும். கட்டை விரல் மூக்கின் வலதுபுறமும், நான்காவது ஐந்தாவது விரல்கள் இடதுபுறமும் இருக்க வேண்டும். சுட்டுவிரலையும் நடு விரலையும் மடக்கிக்கொள்ள வேண்டும். மூக்கை அழுத்தித் திருப்பாமல் எலும்புப் பகுதியை மட்டும் அழுத்திக்கொண்டு மூச்சுப் பயிற்சியில் ஈடுபடவேண்டும்.

முதலில் இடது மூக்குத்துளையின் வழியாக மூச்சை வெளியே விட்டு, பின்னர் அதே வழியாக நீண்ட உள்மூச்சை இழுக்க வேண்டும். அப்போது வலது மூக்குத் துவாரம் மூடியிருக்க வேண்டும். பின்னர் இடது மூக்குத் துவாரத்தை மூடிக்கொண்டு, வலது மூக்குத் துவாரத்தின் வழியாக மூச்சை வெளிவிடவேண்டும். இது ஒரு வட்டம் என்று கணக்கிட வேண்டும். இந்தச் சுவாச முறையில் உள்மூச்சு, வெளிமூச்சு இரண்டும் மிகவும் மெதுவாக நடக்க வேண்டும். சப்தம் எதுவும் உண்டாக்காமல் பயில வேண்டும். உடலை வருத்திக் கொள்ளக்கூடாது. விடியற்காலை அல்லது பின்மாலை நேரம் இதற்கு ஏற்றதாகும். ஏனெனில் சூரியனிடமிருந்து வரும் புற ஊதாக் கதிரிகள் உடலில் உள்ள ஆஸ்துமா, சளி, இருமல்

ஆகியவற்றை விரட்டுகின்றன. வைட்டமின் 'டி' சூரியனில் உள்ள புற ஊதாக் கதிரில் உள்ளது.

இப்பயிற்சியினால் நுரையீரல்கள், இதயம், வயிறு ஆகியவை சுத்தமடையும். நுரையீரல்கள் சுவாசிக்கும் தன்மை அதிகப்படும். சுவாசம் சீரடையும். பிராண சக்தி வலிமை பெறும். இப்பயிற்சியைக் காலையில் அரை மணிநேரமும், மாலையில் அரைமணி நேரமும் செய்யலாம். நன்கு பயிற்சி பெற்றபின் நேரத்தை நீட்டிக் கொள்ளலாம். நாள்தோறும் இடைவிடாமல் தொடர்ந்து இப்பயிற்சியைச் செய்து வந்தால் உன்னதமான பிராணமய சரீரம் அமைவதை உணரமுடியும்.

பிராணயாமப் பயிற்சியினால் நற்பயன்கள் விளைகின்றன. மேல் மூளைப் பகுதியை அதிகமாகச் செயல்படவைக்க முடியும். இதனால் மூளையின் சுவாசமண்டலப் பகுதியைக் கட்டுப்படுத்தித் தீய செயல்களுக்குக் காரணமாயுள்ள ஹைப்போதாலஸ் பகுதியை அடக்கியாளவும் முடியும். இரத்தம் சுத்தமடைந்து உடல் முழுவதும் பரவமுடிகிறது. உடலிலுள்ள சுரப்பிகள் நன்றாக இயங்கும் திறனைப் பெறுகின்றன. அளவுக்கு மீறிய உணர்ச்சிகள் ஏற்படா. நியாய உணர்வு மேலோங்கும். பொறுமை, அன்பு, நட்பு போன்ற உயர்ந்த குணங்கள் மலரும். சண்டையிடும் மனப்பான்மை மறையும். மன்னிக்கும் குணம் வரும். தியாக உணர்வு மேலோங்கும். மனிதன் நிலை இழக்காமல் இருந்தால் மூளையின் சக்தி வீணாகாமல் பலம் பெறும்.

பல்வேறு காரணங்களால் ஏற்படும் இறுக்கநிலை குறைந்து உடல் மன அமைதி பெறும். இதனால் முகத்தில் ஒரு தேஜஸ் தோன்றும். கண்கள் பளிங்கு போல் ஒளிரும். களைப்பில்லாமல் அதிக நேரம் இன்முகத்துடன் பணியாற்ற முடியும்.

பிராணாயாமம் ஒன்றே நம் உடலில் உள்ள சக்தியைக் கட்டுப்படுத்தும் வல்லமை உள்ளது. பிராணனைக் கட்டுப்படுத்த அறிந்த ஒருவன் உலகில் எல்லாச் சக்திகளையும் கட்டுப்படுத்த வல்லவனாகிறான். சுவாசத்தைக் கட்டுப்படுத்துபவனுக்கு மனத்தையும் கட்டுப்படுத்துவது எளிது. இதில் எது குறைந்தாலும் மற்றதும் குறையும்.

பிராணாயாமம் பயில்பவருக்கு நல்ல தோற்றம், மகிழ்ச்சி, உயிர்ச்சக்தி, நல்ல பலம், மனதை ஒரு முகப்படுத்தும் வல்லமை, மனோதிடம் ஆகிய பண்புகள் படியும். உடற்கூற்று அறிவியலின்படி ஒருவனது ஆயுள் அவன் வயதைப் பொறுத்தது அல்ல. மாறாக அவன் விடும்

மூச்சைப் பொறுத்தது. உயிர்ச்சக்தியும் நல்வாழ்வும் நீண்ட உள்மூச்சு, வெளி மூச்சு இவற்றிலேயே அடங்கியுள்ளன.

பிராணன் பற்றியும், பிராணாயாமத்தின் பயன் பற்றியும் திருமூலர் கருத்து இரண்டொன்றினை அறிவது நன்று.

ஐம்பொறிகளுக்கு நாயகன் அவ்வூர் தலைமகன்
உய்யக் கொண்டேறும் குதிரை மற்று ஒன்றுண்டு
மெய்யார்க்குப் பற்றுக் கொடுக்கும் கொடாது போய்
பொய்யாரைத் துள்ளி விழுந்திடும் தானே

ஐம்பொறிகளுக்குத் தலைவனும், அவ்வுடம்புக்கு நாயகனும் ஆகிய ஆன்மா உய்திபெற்று மேல் செல்லுவதற்கு மனத்தோடு பிராணனாகிய குதிரை ஒன்றுள்ளது. அது தேகத்தை விட்டு அகண்டத்தைப் பற்றி நின்றோர்க்கு வசப்பட்டு மேன்மைகள் செய்யும். மெய் உணர்வில்லாது உலகியல் பொருள்களில் மட்டுமே நாட்டமுடையாருக்கு வசப்படாமல் சவாரி செய்பவரைத் தள்ளிவிடும் குதிரையைப் போல் பயன்படாது.

புள்ளினும் மிக்க புரவியை மேற்கொண்டால்
கள்ளுண்ண வேண்டாம் தானே களிதரும்
துள்ளி நடப்பிக்கும் சோம்பு தவிர்ப்பிக்கும்
உள்ளது சொன்னோம் உணர்வுடை யோருக்கே

பறவையை விட வேகத்துடன் கூடிய பிராணனின் வழி சிரசை நோக்கிச் சென்றால் கள்ளுண்ணாமலேயே மகிழ்ச்சியுண்டாகும். களி மயக்குண்டாகும். உடலில் சோர்வு நீங்கும். சுறுசுறுப்புடனும் இருக்கும். பிராணனும் மனமும் சிரசில் பாயும் மனம் உடையவர்க்கே இவ்வுண்மையைச் சொன்னோம்.

ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்கும்
காற்றைப் பிடிக்கும் கணக்கறிவார் இல்லை
காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை உதைக்கும் குறியது தானே

'காற்றைப் பிடிக்கும் கணக்கு' என்பது பிராணாயாமத்தில் உள்மூச்சு, வெளி மூச்சு ஆகியவற்றின் கால அளவு பற்றியது. பிராணாயாமப் பயிற்சியைத் தெரிந்தவர் காலனைக் கடக்கும் இலட்சியத்தில் குறியாய் இருப்பார். காலனை வெல்லவும் கூடும். ஆயுளை வேண்டியவாறு நீட்டித்தல் முடியும்.

# 5. மனம் என்னும் தத்துவம்

மானுட சரீரத்தின் ஐந்து கோசங்களில் (அடுக்குகளில்) அன்னமய கோசம் முதலாவது. பிராணமயகோசம் இரண்டாவது. மூன்றாவது மனோமயகோசம். மனத்தினால் ஆன அடுக்கு அல்லது உறை என்று கூறப்படும்.

உலகத்தில் காணப்படும் பல்வேறு முரண்பாடுகளுக்கும், பிணக்குகளுக்கும், சண்டை சச்சரவுகளுக்கும் மூலமாக இருப்பது மனமே. மனம் ஒரு குரங்கு என்பார் வள்ளல் இராமலிங்க அடிகள். மனத்தைப் பார்த்து "மனமெனும் பேய்க்குரங்கே மருட்டாதே கண்டாய்" என்று எச்சரித்தார். பிறரும் பலரும் மனம் ஒரு குரங்கு போல் மேலும் கீழும் தாவும் என்கின்றனர். 'ஒன்றை நினைந்து ஒன்றை மறந்து ஓடும் மனம்' என்று தாயுமானவர் தம் பராபரக் கண்ணியில் மனத்தின் குரங்கியல்பை அழகாகக் கூறுகிறார். எனவே மனத்தைப் பற்றி ஆதியோடந்தமாக அறிவது மிகவும் அவசியமாகும்.

பிராணனும் மனமும் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை. பிராணனே மேல்சட்டை என்றும் அல்லது மனத்தை இழுத்துச் செல்லும் ஊர்தி என்றும் சொல்லப்படுகிறது. பிராணன் இருக்குமிடத்தில் மனம் இருக்கும். ஏதாவது ஒரு பொருளின் மேல் சிந்தனையில் ஆழ்ந்திருந்தால் மூச்சுவிடுவது மெதுவாகி விடுகிறது.

பிராணவாயுவின் குறைவால் திக்குமுக்காடல் உண்டாகும்போது மனத்தின் வீச்சு குறைந்து விடுகிறது. மனத்தைப் பாகனென்றும், பிராணனைக் குதிரையென்றும் சரீரத்தைத் தேரென்றும் நூல்கள் கூறுகின்றன. பிராணன் இயங்க மனம் அசைகின்றது. நினைக்கின்றது. பிராணன் கட்டுப்பட்டால் மனம் கட்டுக்குள் அடங்குகிறது. அவ்விதமே மனம் அடங்கினால் பிராணனும் மட்டுப்படும்.

செடிகளுக்கு உயிர் இருக்கிறது. விலங்குகளுக்கு இந்திரிய உணர்ச்சியும் இருக்கிறது. இவற்றோடு மனிதனுக்கு மனோபாவம் இருக்கிறது. ஆத்மா அல்லது 'உயர்ந்த நான்' என்பதுதான் மனத்திற்கு ஆதாரம். ஆத்மாவுக்கு மாயையினிடமாக மனம் பிறந்தது என்பது சமயவாதிகள் கூற்று.

இவ்வுலகில் மனம் மிக உயர்ந்த சக்தியாக விளங்குகிறது. தன் மனத்தை எவன் கட்டுப்படுத்துகிறானோ அவனிடம் சக்திகள் அனைத்தும் காணப்படுகின்றன. அவனால் எல்லோர் மனத்தையும் தன்வசமாக்க முடியும். வியக்கத்தக்க ஆற்றலும் சக்தியுமுடையது மனம். அபாரமான சூக்கும சக்திகள் வாய்ந்த மனத்திற்கு ஆத்மாதான் ஆதாரம்.

மனம் ஒரு ஜடப்பொருளே. அப்பொருள் மிகவும் சூக்குமமாக இருக்கிறது. அது சூக்குமமான பஞ்சபூதங்களால் உண்டாக்கப்பெற்றது.

நிறைந்து நிற்பதும் எங்கும் பரந்துள்ளதுமான ஆத்மாவானது தன்னுடைய கற்பனையாற்றலால் முகந்து கொண்ட உருவமே மனம். மனம் படைக்கும், அழிக்கும். தன் கற்பனா சக்தியால் உலகம் முழுவதையும் உண்டாக்கும். கற்பனை செய்வதுதான் மனத்தின் முதன்மையான குணமாகும். எத்தகைய சுகதுக்கங்களுக்கும் அதுவே மூலம். அம்மனமே எதனையும் அனுபவிக்கின்றது. கட்டுக்கும் விடுதலைக்கும் அல்லது பந்தமோட்சங்களுக்கும் அம்மனமே ஏதுவாகிறது. ஆதலின் மனமே எல்லாம். ஒவ்வொன்றும் மனம். ஒருவனுடைய உற்ற நண்பனும், பிறவிப் பகைவனும் மனமேயாகும். சாதாரண மனமே விரோதி. பல்வகைப் பேறுகளுக்கும் அதுவே காரணம். இழிந்த விருப்பங்களால் நிரம்பிக் கிடக்கும் மனம் மேன்மையை அடைய வழிகாட்டாது. உயர்ந்த மனம் நல்வழிகாட்டும் ஞானகுரு. தூய மனத்தின் குரல் கடவுளின் குரல்.

ஒரு மனிதன் தன் மனத்தினாலேயே, மனோபாவத்தினாலேயே நாள்தோறும் தன்னை உயர்த்திக் கொள்ள வேண்டும். உயர்வுக்கு உற்ற உத்தியும் ஆகும். எனவே மனத்தைச் சக்தியற்றதாக்கிவிடக் கூடாது. தன்னை வென்றவனுக்கு மனம் நண்பனாகும். தன்னிடம் தோற்றவனுக்குப் பகைவனாகும். குடும்பம் என்னும் கடலைக் கடப்பதற்கு அடக்கம் என்னும் மரக்கலத்திற் சிறந்ததொன்றும் இவ்வுலகில் இல்லை.

'மன அடக்கம்' சிறந்த உறுதிப்பொருளாகும். அதனைப் போற்ற வேண்டும். மன அடக்கத்தைக் காட்டிலும் சிறந்த செல்வம் வேறு இல்லை.

மன அடக்கம் இப்பிறப்பில் மட்டுமின்றி இனிவரும் பிறவிகளிலும் நன்மையைத் தரும். மன அடக்கம் பணம் உடையவர்களுக்கு மற்றுமொரு உயர்ந்த செல்வமாக விளங்கும்.

ஒருவன் மன அடக்கத்தோடு வாழ்வானாயின் அவ்வடக்கம் அவனை விண்ணுலகத்தில் செலுத்தும். அடங்காமை கொடிய நரகத்தின் கண் தள்ளும். இவ்வாறு திருவள்ளுவர் கூறுகிறார்.

அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும். (குறள் 121)

ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப்பு உடைத்து (குறள் 126)

மனமே தூல உலகமாய்த் தோன்றுகிறது. அதுவே சூக்குமமானால் அறிவு. தூலமானால் உலகம். கண்ணில் காணலாகும் பொருள்கள் யாவும் மனமே. காணப்பெறும் வேற்றுமைகளும் மனத்தின் செயலே. இப்பரந்த உலகம் ஆத்ம சங்கல்பத்தினாலேயே பிரகாசிக்கின்றது. எவ்விடத்தில் மனம் இருக்கிறதோ அவ்விடம் இவ்வுலகமாகும். ஒருவன் ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கும்போது மனம் காணப்படுவதில்லை. ஆகையால் அப்பொழுது உலகமும் இல்லை. பொருள்களைப் பற்றிய எண்ணங்கள் வளர வளர உலகம் உண்மையாகவே இருக்கிறது என்ற எண்ணமும் உறுதிப்படும். அதாவது இந்திரிய விஷயங்களில் ஆசை பெருகும்போது உலகம் உண்மையாக இருக்கின்றது என்னும் மனோபாவமும் வளர்ந்து வரும்.

மனத்தில் மூவகைச் சக்திகள் இருக்கின்றன. அவைதாம் இச்சா சக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி என்பவை. மனத்தில் ஒரு விருப்பம் உண்டாகிறது. இதற்கு இச்சா சக்தி என்று பெயர். இந்த விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள மனம் முயல்கிறது. இதுதான் கிரியாசக்தி. விரும்பிய பொருளை அடைவதற்கான முறைகள் அல்லது உபாயங்களை மனம் கண்டுபிடிக்கிறது. இதுவே ஞானசக்தி.

'மனமானது தினந்தோறும் பிறக்கிறது' என்று சொல்வது பொருந்தாது. ஆனால் ஒவ்வொரு கணமும் பிறக்கிறது என்பதே சரியாகும். மனம் ஒரு குரங்குமட்டுமல்ல. நிறமாறும் பச்சோந்தியாகும். கணந்தோறும் பிறந்து, கணந்தோறும் உருமாறும். இங்குமங்கும் அலையும்.

சுற்றுப்புறத்திலுள்ள பொருள்களும் மனமும் ஒன்றுக்கொன்று தொடர்பு வைத்துக்கொள்வதின் விளைவுதான் மனசாட்சி என்பது. அது ஒருவனுடைய முடிவான சொந்தக் கருத்து. அது எப்போதும் மாறிக்கொண்டே போகும். ஒருவனுடைய மனசாட்சி இன்னொருவனைக் காட்டிலும் வேறுபடும். அதிக அனுபவம் உண்டாகும்போது, மனசாட்சியும் வேறாகிவிடும்.

மனமானது பல பிரிவுகளாகப் பிரிக்கப்படுகின்றது. அப்பிரிவுகள் மேலும் பிரிக்கப்படுகின்றன. இப்படி மனமானது பரமாணு அல்லது தன்மாத்திரை வரையிலும் பிரிக்கப்படுகிறது. இந்தப்பரமாணு அல்லது தன்மாத்திரையே இந்திரியங்களையும் உணர்ச்சிகளையும் உண்டாக்கும் மாபெரும் சக்தியாய் விளங்குகிறது.

மாறுதல், அசைவு (சேஷ்டை), அடங்குதல், தொழிலில் ஈடுபாடு, கொள்ளுதல், சக்தி, வாழ்க்கை, குணம், குறி, அறஉணர்வு போன்றவை மனத்தின் பண்புகளாகும். ஒருவன் மயக்க மருந்தினால் மயங்கியிருக்கும் போது மூளையிலுள்ள நுண்ணறைகளின் (செல்களின்) தொழில்கள் அம்மருந்தின் சக்தியால் தடைப்பட்டுக்கிடக்கின்றன. விழித்திருக்கும்போது மனத்தின் இடம் மூளையாகும். மயங்கியிருக்கும்போது மனம் தனது இருப்பிடத்தைத் தொண்டைக்கும், இருதயத்திற்கும் மத்தியில் அமைத்துக் கொள்கிறது. அப்போது ஒருவனுடைய கையையோ, காலையோ வெட்டினாலும் எந்த வேதனையும் ஏற்படுவதில்லை. மனமானது மூளையில் தங்கி உடம்பினிடம் சம்பந்தம் வைத்துக் கொண்டிருக்கும்போது மாத்திரம் மனிதன் வேதனையை உணருகிறான். ஒருவன் 'குளோரோபாரம்' போன்ற மயக்க மருந்தின் ஆதிக்கத்தில் இருக்கும்போது மனமானது பருவுடலிலிருந்து பிரிக்கப்பட்டுவிடுகிறது.

தண்ணீர் எந்தப் பாத்திரத்தில் ஊற்றி வைக்கப்படுகிறதோ அந்தப் பாத்திரத்தின் வடிவத்தை எடுத்துக்கொள்ளும். அவ்விதமே மனமும் பொருள்களின் உருவத்தை எடுத்துக்கொள்கிறது. பின்பு வேறொரு பொருளுக்குப் பாய்ந்து அப்பொருளின் வடிவத்தைப் பூணுகிறது. இப்படியே அம்மனம் போய்க்கொண்டேயிருக்கிறது.

இரயிலில் பயணம் செய்யும்போது சில சமயம் பாலத்தின்மீது செல்லும் பயணம் செய்பவன் "பாலம் இடிந்து விழுந்தால் நான் என் செய்வேன்? கண்டிப்பாய் நான் உடல் நசுங்கி இறந்துவிடுவேன்" என்று

அவன் மனம் எண்ணினால், உடனே அச்சத்தால் உடம்பு நடுங்குகிறது. இத்தகைய மனோராச்சியங்கள் ஆயிரக்கணக்காக இருக்கின்றன. ஆதலின் மனோ வியாபாரங்களில் கற்பனா சக்தியே மிகுந்து காணப்படுகிறது.

காலம் மனத்தின் மற்றுமொரு பிரகாரம். அதுதான் கலைசக்தி. பொருள்களைப் போல் அதுவும் ஒரு வெறுந்தோற்றமே. ஒருவனது மனம் ஆழ்ந்த சிந்தனையில் திளைத்திருக்கும்போது இரண்டு மணி நேரம்கூட இரண்டு நிமிடம் போல் தோன்றுகிறது. மனமானது பல எண்ணங்களால் அல்லல் பட்டுக்கொண்டு வருந்தும்போது இரண்டு நிமிடம்கூட இரண்டு மணி நேரமாக நீண்டு தோன்றுகின்றது. ஒவ்வொருவருக்கும் இந்த அனுபவம் இருக்கிறது. கனவில் பல ஆண்டுகளின் அனுபவங்கள் ஒரு சில நிமிடங்களில் முடிவடைந்து விடுகின்றன. மனத்தொழிலால் ஒரு கற்பம் கணப்பொழுதாகவும், ஒரு கணம் கற்பமாகவும் தோன்றுகிறது.

மனம் அடங்கினால் மனத்தின் செயல்கள் யாவும் நின்றுவிடும். காலமும் கருத்தும் மறைந்து ஒழியும். காலம் மனத்தின் படைப்பு. சிந்தையும் மொழியும் விளக்க முடியாத தெய்வீக ஆற்றல் அல்லது மாயையின் பரிணாமமே மனம். காலத்தையும் மனத்தையும் கடந்தால் மரணமிலாப் பெருவாழ்வு அடையலாம். 'மரணமற்ற நிலை' என்பது இனிமையான எய்துதற்கரிய இறை அனுபவமாகும்.

"காலமும் கணக்கும் நீத்த காரணன்" இறைவன் என்பார் கம்பர்.

எல்லா நிறங்களும் கண்ணில் அடக்கம். எல்லா ஊறும் அல்லது தொடுகையும் தோலில் அடக்கம். காதில் ஓசை ஒலியெலாம் அடக்கம். எல்லா மணங்களும் (வாசனைகளும்) மூக்கில் அடக்கம். மேற்படி எல்லா உடற்கருவிகளும் மனத்தில் அடக்கம். எல்லா மனங்களும் 'ஓம்' அல்லது 'ஆத்மா' அல்லது எல்லாவற்றிற்கும் அடிப்படையான ஒரு பரம்பொருளில் அடக்கம்.

மனோசக்தியே ஆத்ம சக்தியாக மாறும். தியானப் பயிற்சிகள் மனோ சக்தியை ஆத்மசக்தியாக மாற்றும். 'ஆத்ம சக்தி' என்பது சக்திக் களஞ்சியம் ஆகும். 'சக்திக் களஞ்சியம்' கையில் வைத்துக்கொண்டு உறுபொருளைக் கண்டு உணரவேண்டும். இல்லாவிட்டால் கையில் வெண்ணெய் இருக்க நெய்க்கு அலைந்தது போல் ஆகிவிடும்.

மனம் அதிக வேகத்துடன் இடையறாது சுழல்கின்ற சக்கரம் போன்றது. ஒவ்வொரு சுற்றிலிருந்தும் புதிய புதிய எண்ணங்களைப் பிறப்பிக்கின்றது. இந்தச் சக்கரமானது சூக்குமப் பிராணனின் செல்வாக்கினால் சுற்றிக்கொண்டே யிருக்கிறது. எண்ணங்கள் உயிர் ஆற்றல் உடையவை. எண்ண, எண்ண எண்ணங்கள் பலமடைகின்றன. ஒரு தீய எண்ணமோ நல்ல எண்ணமோ மனத்தில் ஒரு முறை தோன்றினால், இந்த இரு எண்ணங்களும் மீண்டும் மனத்தில் தோன்றுதல் இயற்கை. ஓரினப் பறவைகள் கூட்டமாகக் கூடி வானிற்பறப்பது போல் எண்ணங்களும் ஒன்றாய்க் கூடுகின்றன. ஒரு தீய எண்ணம் தோன்றுமானால் ஓராயிரம் தீய எண்ணங்கள் ஒன்றுகூடிக் .கீழே வீழ்த்தும்.

தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும். (குறள் 202)

தீய எண்ணங்கள் தீயினும் கொடியவை. தோன்றிய இடத்தைப் பொசுக்குவதோடு அக்கம்பக்கத்தில் உள்ள பொருள்களையும் நொடிப்பொழுதில் தீ அழித்து நாசம் ஆக்குவதுபோல், தீய எண்ணங்கள் எண்ணியவனை மட்டுமல்லாது அவனுடன் அறிந்தும் அறியாமலும் தொடர்பு கொள்கிறவர்களையும் பிறப்பால் உறவானவர்களையும் அழித்துவிடும். உள்மனத்தில் நல்ல எண்ணங்கள் உண்டாகுமானால் எல்லா நல்ல எண்ணங்களும் ஒன்றுசேர்ந்து மேன்மேல் உயர்த்தும்.

நல்ல எண்ணம் என்பது நேர்மையான தூய்மையான எண்ணம் ஆகும். மனத்தூய்மையினால் செய்வினைத் தூய்மை பெறும். மனத்தூய்மை உடையவர் செயல்கள் செல்வத்தைக் கொடுக்கும் நல்லிணக்கத்தாரின் சேர்க்கையைப் பெற்றுத்தரும். மனத்தூய்மையினால் நன்மக்கள் பேறு உண்டாகும். நல்ல எண்ணங்கொண்டோர் உறவு கொள்ள விழைவர். நல்லோர் உறவு உண்டானால் நிறைவேற்ற முடியாத செயலே இல்லை. சான்றோர் உறவு உண்டாகும். சான்றோர் உறவு மேலும் செயற்கரிய செயல்களைச் செய்யும். வலிமையைத் தரும். நல்ல பாதுகாப்பு உணர்வையும் ஏற்படுத்தும். ஒருவனுக்கு மனத்தூய்மையினால் மறுபிறவியிலும் இன்பம் உண்டாகும்.

மனநலத்தின் ஆகும் மறுமை மற்று அஃதும்
இனநலத்தின் ஏமாப்பு உடைத்து (குறள் 459)

தூய்மையான எண்ணங்கள், நல்ல எண்ணங்கள் எப்போதும் உறுதியானவைகளாக விளங்கும். 'கலங்காத்தன்மை' உடையவையாக இருக்கும். அதனால் எண்ணுபவரும் திண்ணியவராக இருப்பார். எண்ணியவாறே செய்து முடிக்கும் ஆற்றல் பெற்றவராக இருப்பார்.

எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின் (குறள் 666)

மனப்பண்பே செய்யுந் தொழிலை அறுதியிட்டுச் செயலாற்றி அதன் பலனை அடையும்படிச் செய்கிறது. ஒருவன் தாயை, உடன்பிறந்தானை, மனைவியைக் கட்டித் தழுவலாம். தழுவும்தொழில் ஒன்றாயினும் கருத்துக்கள் வெவ்வேறானவை. கருத்தையும் உணர்ச்சியையும் எப்போதும் விழிப்புடன் கவனித்து வரவேண்டும். மனத்தில் உருவாகும் கருத்துகளும் நாடோறும் நினைத்து வருகின்ற மனத்தோற்றங்களும் 'ஒருவன் யார்?' என்பதையும் 'ஒருவன் எவ்விதம் ஆக வேண்டும்?' என்பதையும் அறிவிக்கும். எனவே பெரியோர்கள் உயர்ந்த எண்ணத்தோடிருக்க வேண்டும் என்று காலந்தோறும் வலியுறுத்தி வருகின்றார். நல்ல எண்ணங்களும் நல்ல செய்கைகளும் அடிக்கடி மனத்தில் எழுந்தால் எழும்படிப் பழகியிருந்தால் அந்த எண்ணங்களும் செய்கைகளும் நிலைத்திருந்து நெடுநாட்களுக்குப் பயன்தந்துகொண்டிருக்கும்.

ஒரு கூடையில் நல்ல பழங்களும், கெட்ட பழங்களும் இருந்தால் நல்லவற்றை மட்டும் தெரிந்து எடுத்துக் கொள்கிறோம். கெட்ட பழங்களை ஒதுக்கி விடுகிறோம். மடியில் நல்ல பழங்களையே ஏந்திக்கொள்வதுபோல மனமும் நல்ல எண்ணங்களால் நிறைய வேண்டும். நல்ல எண்ணங்களால் முற்றிலும் நிரம்பிவிட்ட மனத்தில் தீய எண்ணங்கள் தங்க இடமில்லாமல் போய்விடும்.

கோட்டைச் சுவரில் கன்னம் வைத்து, கள்ள வாசல் வழியாகத் தலைநீட்டும் கள்வர்களையும் பகைவர்களையும், காவல் வீரன் வெட்டிச் சாய்ப்பது போல் மனத்தின் மேற்பரப்பில் நுழையும் தகாத எண்ணங்களை வெட்டித் தள்ளிவிடவேண்டும்.

எங்ஙனம் பழங்கள் விதையிலிருந்து உண்டாகின்றனவோ அவ்விதம் காரியங்கள் எண்ணங்களிலிருந்தே பிறக்கின்றன. நல்ல எண்ணங்களிலிருந்து நற்செய்கைகள் பிறக்கின்றன. கெட்ட

எண்ணங்களிலிருந்து கெட்ட செய்கைகளே உண்டாகின்றன. எண்ணங்கள் வேறு செயல்கள் வேறாக இருக்க முடியாது. 'விதை ஒன்று போட சுரை ஒன்று முளைக்காது' என்பது பழமொழி. விதைப்பதுதான் விளையும். விளைவதுதான் அறுவடையாகும். பருத்தி விதைத்தால் பஞ்சுவரும். மாம்பிஞ்சு வராது. எனவே மனமும் எண்ணமும் செயலும் நல்லனவாக இருக்க வேண்டும்.

## மனமும் உணவும்

நல்ல மனம் அமைவதற்கு நல்ல உணவும் காரணமாகிறது. உணவு எப்படியோ அப்படியே மனமும். உணவின் சாரத்திலிருந்தும் அதன் நுட்பமான பகுதிகளில் இருந்தும் மனம் உண்டாக்கப்படுகிறது. உணவிற்கு மனத்தின் மீது செல்வாக்கு அதிகம். தூய்மையான உணவே நல்ல உணவு. புலால் உணவு நல்ல உணவு ஆகாது. அது புல்லர் தம் உணவாகும். நல்லோர் உணவு ஆகாது.

இயற்கையில் விளையும் உணவே நல்ல உணவாகும். அதுவே தூய்மையான உண்டி ஆகும். தூய உண்டியால் மனத்தூய்மை உண்டாகும்.

மண்திணி ஞாலத்து வாழ்வோர்க்கு எல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே – மணிமேகலை

மணிமேகலை தன் அட்சய பாத்திரத்திலிருந்து அள்ளி அள்ளி இட்ட உண்டி தூய்மையான உணவாகும். அதனால்தான் சிறைச்சாலைகள் அறச்சாலைகளாக ஆயின. வன்னெஞ்சத்தை மென்னெஞ்சமாக்கும் மாயம் உடையது தூய உணவே. மரக்கறி உணவே முற்றிலும் தூய்மையானது. மரக்கறி உணவு என்பது செடிகொடிகளிலும் மரங்களிலும் பயிர் பச்சைகளிலிருந்தும் கிடைக்கும் உணவாகும். காய்கறிகள், கனிகள், கீரைகள், தானியங்கள், பருப்பு வகைகள் இவைகளே மரக்கறி உணவு எனப்படும். விலங்கின் ஊனிலிருந்து கறந்தாலும் பால் நல்ல உணவு என்றே பலரும் கருதுகிறார்கள். வேக வைக்காமல் உண்ணும் உணவு நெறியினர் பாலும் வேண்டாத உணவு என்று கூறுவர்.

தூய உண்டியால் மனத்தூய்மை உண்டாகும். இதனால் மனம், மொழி, ஆடை, அணிகலன்கள், வசிக்கும் அறைகள், சுற்றுப்புறம் ஆகியவைகளும் தூய்மையாக இருக்க வேண்டும். அமைதியான தூய்மையான மடங்களுக்கும், ஆசிரமங்களுக்கும் சென்று தங்கும்போது

மனம் தூய்மையாக மாறுவதை எல்லோரும் உணர்ந்திருப்பார்கள். எனவேதான் உணவு முதலானவை தூய்மையாக இருக்க வேண்டும் என்று வலியுறுத்திப் பேசப்படுகிறது.

ஆன்மீகப் பயிற்சியில் ஈடுபடுபவர்களுக்கும் சொற்பொழி வாளர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் நெடுந்தூரம் பயணம் செய்பவர்களுக்கும், தூக்கம் கெடுமாறு உழைக்க வேண்டியிருப்போருக்கும், வண்டி ஓட்டுநர்களுக்கும் இரவில் காவல் புரிபவர்களுக்கும் என எல்லோருக்கும் நல்ல உணவு சைவ உணவே.

உப்பு, புளி, காரம் போன்றவை நல்ல உணவில் இடம்பெறக்கூடாது. பெயரளவிற்கே இருக்க வேண்டும். உணவுப் பொருள்களில் விளையும்போதே சிறிதளவு உப்பும் இருக்கும். அந்த உப்பே உடம்புக்குப் போதுமானது. உப்பு அதிகமானால் இதயம், இரத்தக்குழாய்கள், சிறுநீரகம் போன்றவை தங்கள் இயல்பான பணிகளைச் செய்யவிடாமல் தடை ஏற்படும். பெருந்துயரம் உண்டாகும்.

தூய்மையான உணவு என்றால் எளிதாகச் செரிக்கக்கூடிய உணவாகும். உடலுக்கு வளம் தரும் உணவாகும். பாதுகாக்கும் உணவாகும். உடலும் மனமும் எப்போதும் புத்துணர்ச்சியோடிருக்க உதவும் உணவே தூய்மையான உணவாகும். தியானப் பயிற்சி போன்றவைகளில் ஈடுபடும்போது உடலை இனிமையாக்கும் உணவே நல்ல உணவு. நல்ல உணவே நல்ல உடல். நல்ல உடலிலேதான் நல்ல மனம் கொலுவிருக்கும் என்பதை ஒருபோதும் மறக்கக்கூடாது. 'A sound mind is a sound body' என்பது ஓர் ஆங்கிலப் பழமொழியாகும்.

## மனமாசு போக்கல்

உடலில் உள்ள உறுப்புக்கள் நரம்பு மண்டலத்தால் இயக்கப்படுகின்றன. நரம்பு மண்டலம் மனத்தால் ஆளப்படுகிறது என்பது உளவியலார் கருத்தாகும். உள்உறுப்புகள் உள்ளே நிலவும் அந்தராத்மாவினால் ஆளப்படுகின்றன என்று வேதம் படித்தவர்கள் கூறுகிறார்கள். இயற்கை அறிவியலார் மூளையில் தான் நரம்பு மண்டலத்தின் உதவியால் உறுப்புகள் யாவும் ஆளப்படுகின்றன என்று கூறுகின்றனர். அவரவர் கண்ணோட்டத்தில் அவரவர் கருத்து சரியாக இருக்கலாம். எல்லாம் நன்மைக்கே என்று எடுத்துக்கொள்வோம்.

மனம் தன்வசத்தில் இருக்குமானால் தெளிவாகவும் தூய்மையாகவும் இருக்கும். அதில் உள் ஒளியான ஆன்மா வீற்றிருப்பதை உணரமுடியும். மிக மிக உயர்ந்த மனமும் மனிதனைப் போலவே அச்சாக இருக்கும்.

சமையல் பாத்திரங்களில் பிசுபிசுப்பும் களிம்பும் உண்டாகிப் பளபளப்பைக் கெடுத்துவிடும். அதுபோல உலக விவகாரங்களில் போக்குவரவு செய்யும் மனத்திலும், பாத்திரத்தில் களிம்புபோல மாசுபடியும். பாத்திரங்களை நாள்தோறும் சுத்தம் செய்வது பளிச்சென்று வைத்திருப்பது போல மனமும் அழுக்கு நீங்கிக் காந்தியுடன் பளிச்சென்று இருக்க வேண்டும்.

மனம் மாசுபட்டுள்ளதா என்பதை மிக எளிதாக அறிந்துகொள்ள முடியும். காலையில் துயில் எழுந்ததிலிருந்து அன்றாடப் பணிகளை முடித்து உறங்கும் வரை நாம் எண்ணியது, பேசியது, செய்தது ஆகியவற்றை அகத்தாய்வு செய்ய வேண்டும். ஒரு வணிகர் அன்றாடம் வரவு செலவுக் கணக்கினை ஆய்வது போல் மிகவும் அக்கறையுடன் அகத்தாய்வு அதாவது நமது 'ஒருநாள் வாழ்க்கையை' மிகவும் கண்டிப்புடன் தணிக்கை செய்ய வேண்டும். நடுநிலை பிறழாமல் தணிக்கை செய்துவரும் பழக்கம் படிந்துவிட்டால் மனம் மாசுபட்டுள்ளதா என்பதை எளிதாக அறிந்துகொள்ளலாம்.

இவ்வாறு ஆய்வு செய்யும்போது ஒவ்வொரு கட்டத்திலும் 'நம்மிடம்' நேர்மையிருந்ததா?" என்ற வினாவை எழுப்ப வேண்டும். விடை காணவேண்டும். ஆகவே 'நேர்மை' என்பது என்ன. அதன் பொருள் யாது என்று அறிவது மிகவும் அவசியமாகிறது. இரண்டு புள்ளிகளை இணைக்கின்ற நேர்கோட்டைப் போல ஒருவருடைய நலம் இன்னொரு வருடைய நலத்தையும் இணைக்குமானால் அதற்கு நேர்மை என்று பெயர். எனக்கு நலமாக இருப்பதெல்லாம் இன்னொருவருக்கும் நலமாக இருக்க வேண்டும். எனக்கு மட்டும் நலமாக இருந்து அஃது இன்னொருவருக்கு நலமாக இல்லையென்றால் அது குறையுடைய நலம். நேர்மையல்ல; அறமன்று. ஆக "இரண்டு புள்ளிகளை இணைக்கின்ற நேர்கோட்டைப்போல உலகத்தில் எல்லா உயிர்களுக்கும் இருக்கின்ற நலனையும், என்னுடைய நலனையும் ஒத்ததாக அமைக்கின்ற ஓர் இணைப்பு, ஒரு சூழ்நிலை, ஒரு சிந்தனைப்போக்கு இருக்குமானால் அதற்கு நேர்மை என்று பெயர்."

இவ்வாறு குன்றக்குடி அடிகளார் விளக்கம் தருகிறார். அந்த நேர்மை நம்மிடம் வந்துவிட்டதா? நம் வாழ்க்கையில் காணப்படுகிறதா? என்று அன்றாடம் ஆய்வு செய்து தெரிந்து கொள்ளவேண்டும். தன்னெஞ்சறிந்து, உணர்ந்து ஆய்வு செய்ய வேண்டும். நாள்தோறும் இவ்வாறு தணிக்கை செய்துவர நாம் நேர்மையாக இல்லை என்று உணர்ந்தாலும் நாளடைவில் நேர்மையை நெருங்கி விடுவோம். நேர்மையாளர் ஆகிவிடுவோம். தூய்மையாளர் ஆகிவிடுவோம். மனம் பளிங்கு போல் பளபளக்கும். மனமாசு நீங்கிவிட்டால் "உள்ளம் பெருங்கோயில், ஊனுடம்பு ஆலயம்" ஆகிவிடும். மனம் முழுவதும் அன்பும், பண்பும் அறனும் ஆகிவிடும். அறம் குடியிருக்கும் இடத்தில் இறைவன், வள்ளல் பிரான் வந்து இருந்து அருள்புரிவார். இனி என்றும் ஆனந்தம், பேரானந்தம், நித்தியானந்தம்.

இவ்விதமாகச் சரீரத்தின் மூன்றாவது கோசமான மனோமயகோசம் தூய்மையாகி, அன்பால் நிரம்பி நித்தியானந்தத்தில் திளைத்திருக்கும் உன்னதபக்குவத்தை அடைய முயல்வதே இலக்காக வேண்டும்.

## மனப்பயிற்சி ஆத்மசாதனம்

பிரபஞ்ச வாழ்வில் யாண்டும் இன்பமும் துன்பமும் கலந்துள்ளன. சிற்றுயிர்கள் பேருயிர்களாகப் பரிணமிப்பதற்குத் துன்பம் தூண்டுகோல் ஆகிறது. சிற்றுயிர்கள் துன்பத்தை விரைவில் மறந்துவிடுகின்றன. ஆனால் மனிதன் போன்ற பேருயிர்கள் துன்பத்தை எளிதில் மறக்கமுடியாது. பட்ட துன்பத்தை எண்ணி எண்ணி மனம் கொதிக்கிறது. எவ்வளவுதான் சமாதானப்படுத்தினாலும், ஆறுதல் கூறினாலும் மனத்துக்குத் தேற்றம் உண்டாவதில்லை.

மனிதனின் மனமானது சஞ்சலத்தில் மூழ்கியதாக யாண்டும் பரிணமித்து மேல்நிலைக்கு வரும்பொழுது இன்பத்தை நன்கு அனுபவிப்பது போன்றே துன்பத்திலும் ஆழ்ந்து உழல்கிறது. மானுட நிலையை அடைந்தபிறகு பலருக்கு இன்பத்தை விடத் துன்பமே அதிகமாக வருகிறது. துடைக்க முடியாத துன்பத்தில் வருந்தும்போது மனிதனுக்கு ஆராயும் மனப்பான்மை வருகிறது. விசாரித்துப் பார்க்கிற மனிதர்களில் பெரும்பாலோர் ஆத்ம சாதகர்களாக மாறி அமைகின்றனர். ஆத்ம சாதனத்தில் ஈடுபடுவது ஒன்றே துன்பத்தைத் துடைப்பதற்கு உற்ற உபாயம் என்று தெளிவடைகின்றனர்.

ஆத்ம சாதனங்கள் யாவும் மனத்தைப் பண்படுத்துவதன் பொருட்டேயாம். மனத்தைப் பயன்படுத்த விரும்புபவர் அதன் கூறுகளை அறிந்து கொள்ளுதல் அவசியமாகிறது. மனத்தின் போக்கைச் சரியாக அறிந்து கொள்ளாமல் எத்தனை எத்தனையோ சாதனங்களைக் கையாளுகின்றவர்கள் இருக்கின்றனர். ஆத்ம சாதகர்கள் பலர் ஆயுட்காலம் வரை சாதனங்கள் புரிந்தும் எந்தவித முன்னேற்றமும் அடைவதில்லை. மனத்தை முறையாகப் பண்படுத்தத் தெரியாமையே அதற்குக் காரணம் ஆகும். முறையாகப் பண்படுத்தப்பட்ட மனது தெய்வீக இயல்பு படைத்ததாகத் திருந்தி அமைகிறது. நாள் ஏற ஏற அது அமைதியுற்றதாக மாறுகிறது. முன்னேற்றத்திற்கு ஏற்றவாறு அதன் விகாரங்கள் அழிந்து பட்டுப்போகின்றன. உலகப் பற்று தானா. அழிகிறது. மனமானது பண்பாடு அடைவதற்கு மாறாகச் சிற்றியல்பு படைத்ததாகவே நிறைந்திருக்குமாகில் ஆத்மசாதகன் சாதனத்தைச் சரியாகச் செய்யவில்லை என்பது வெளியாகிறது.

ஓர் எடுத்துக்காட்டின் மூலம் மனவிகாரங்களைத் தடுத்து நிறுத்தி ஒழுங்கு படுத்தும் முறையை அறிந்து கொள்ளலாம். சிவபெருமான் சொரூபத்தின் வாயிலாக விளங்குகிறார். மானை அவர் ஒரு கையில் ஏந்தியிருக்கிறார். அந்த மான் சிவபெருமான் முகத்தைப் பார்ப்பதையே இலட்சியமாகக் கொண்டு அவரைப் பார்த்த வண்ணமே இருக்கிறது. மனத்துக்குச் சின்னமாய் இருப்பது மான். ஏனென்றால் மான் போன்று மனதும் துள்ளிக் குதித்து நாலா பக்கமும் ஓடுகிற பாங்கு உடையது. அலைந்து திரிகிற மனத்தை ஓர் உயர்ந்த இலட்சியத்திற்கு ஒப்படைத்தல் வேண்டும். அந்த மனமானது தன்னுடைய முழு ஆற்றலையும் அந்த இலட்சியத்திற்கே பயன்படுத்த வேண்டும். அப்படிச் செய்தால் மனதும் பண்பாடு அடைகிறது. அது ஒடுங்குகிறது. இலட்சியமும் நிறைவேறுகிறது.

பிரபஞ்ச வாழ்வானது எத்தனை எத்தனையோ போக்குவரத்து உடையதாய் விளங்குகிறது. உலகில் பிறப்பின் வாயிலாக மக்கள் வந்துகொண்டே இருக்கின்றனர். மரணத்தின் வாயிலாகப் போய்க்கொண்டே இருக்கின்றனர். பற்பல நிகழ்ச்சிகள் கால ஓட்டத்தில் நடந்து கொண்டு வருகின்றன. வந்துகொண்டும் போய்க்கொண்டும் இருக்கிற மக்களையும் செயல்களையும் எப்போதும் கருத்தில் வாங்கிக்கொண்டு இருந்தால் அதனால் இன்ப துன்பங்கள் மாறி மாறி வந்து கொண்டேயிருக்கும்.

வேறு பயன் ஒன்றும் உண்டாகாது. ஆதலால் மனத்தை அத்தகைய விசாரத்தில் ஈடுபடுத்துவது பொருந்தாது. மனத்தைப் பண்படுத்த விருப்பங்கொண்டவர் எல்லாவற்றையும் சாட்சி போல் பார்க்க வேண்டும். நிகழ்ச்சிகளில் பங்கெடுக்கும் பாங்கு உதவாது. மனம் சாட்சியாய் இருந்து பழகினால் மனத்தில் சலனம் குறைகிறது. முடிவில் அது சலனமற்றதாகிறது. சலன மற்ற மனமே உயர்ந்த மனமாகும். ஆற்றல் வாய்ந்த மனமாகும். மனத்தின் வகையையும் அதன் விளைவையும் கூறும் பாரதிதாசனின் பாடல் வரிகள் உயர்ந்த மனோத்துவ விளக்கங்களாக அமைகின்றன. படித்து மகிழ்வோம்.

தன்பெண்டு தன்பிள்ளை சோறு வீடு
 சம்பாத்யம் இவையுண்டு தானுண்டெடன்போன்
சின்னதொரு கடுகுபோல் உள்ளங் கொண்டான்
 தெருவார்க்கும் பயனற்ற சிறிய வீணன்
கன்னலடா என்சிற்றூர் என்போ னுள்ளம்
 கடுகுக்கு நேர்மூத்த துவரையுள்ளம் !
தொன்னையுள்ளம் ஒன்றுண்டு தனது நாட்டுச்
 சுதந்தரத்தால் பிறநாட்டைத் துன்புறுத்தல் !
ஆயுதங்கள் பரிகரிப்பார் அமைதிகாப்பார்
 அவரவர்தம் வீடுநகர் நாடுகாக்க
வாயடியும் கையடியும் வளரச் செய்வார்
 மாம்பிஞ்சி யுள்ளத்தின் பயனும் கண்டோம். !
தூய உள்ளம் அன்புள்ளம் பெரிய உள்ளம்
 தொல்லுலக மக்களெல்லாம் 'ஒன்றே' என்னும்
தாயுள்ளம் தனிலன்றே இன்பம் ஆங்கே
 சண்டையில்லை தன்னலந்தான் தீர்ந்ததாலே
துன்பம் பிறர்க்கு நல் இன்பம்! தமக்கென்னும்
 துட்ட மனோபாவம்
அன்பினை மாய்க்கும் அறங்குலைக்கும் புவி
 ஆக்கந்தனைக் கெடுக்கும்
வன்புக் கெலாம் அது வேதுணையாய் விடும்
 வறுமை யெலாம் சேர்க்கும்
'இன்பம் எல்லார்க்கும்' என்றே சொல்லிப் பேரிகை
 எங்கும் முழங்கிடுவாய்

தாமும் தமர்களும் வாழ்வதற்கே இந்தத்
தாரணி என்ற எண்ணம்
தீமைக்கெல்லாம் துணையாகும். இயற்கையின்
செல்வத்தையும் ஒழிக்கும்
தேமலர்ச் சோலையும் பைம்புனல் ஓடையும்
சித்தத்திலே சேர்ப்போம்.
'சேமம் எல்லார்க்கும்' என்றே சொல்லிப் பேரிகை
செகம் முழக்கிடுவாய்
நல்லவர் பாட்டினை வல்லவர் தாழ்த்திடும்
நச்சு மனப்பான்மை
தொல்புவி மேல்விழும் பேரிடியாம் அது
தூய்மைதனைப் போக்கும்
சொல்லிடும் நெஞ்சில் எரிமலை பூகம்பம்
சூழத் தகாது கண்டாய்
'செல்வங்கள் யார்க்கும்' என்றே சொல்லிப் பேரிகை
திக்கில் முழக்கிடுவாய்.

# 6. அறிவு என்னும் தத்துவம்

ஒரு மனிதனின் உடனடியான தேவைகளை 'முதல் நிலை'த் தேவைகள் என்கிறோம். 'முதல்நிலை'த் தேவை என்பது உடலையும் அதனால் உயிரையும் பராமரிப்பது. வளமான உடம்பு அமைய நல்ல உணவு தேவை. வெப்பம், குளிர், தூசு தும்புகளிலிருந்து உடம்பினைப் பாதுகாப்பதற்குத் தட்ப வெப்ப நிலைக்கேற்ற உடை அவசியமாகிறது. அடுத்து உழைத்துக் களைத்த நிலையில் உறங்கி ஓய்வெடுக்க ஒரு வீடு தேவைப்படுகிறது. இது மனிதனின் முதல்நிலைத் தேவை.

அன்பு, ஆற்றல், அறிவு, இன்பம், கடவுள் உணர்வு போன்றவை 'இரண்டாம் நிலை'த் தேவையில் அடங்குபவை. இவைகளில் அறிவு, அன்பு போன்ற சில பண்புகள் மனிதனிடம் மட்டுமே காணப்படுபவை. 'தாயன்பு' என்பது விலங்கு, பறவை போன்றவைகளிடம் கொஞ்ச காலத்திற்கு மட்டுமே உள்ள வெளிப்பாடுகளாகும். 'தாய்-பிள்ளை' என்ற பாசம் அவைகளிடம் நின்று நிலவுவதில்லை. மனிதன் இரண்டு வகையான தேவைகளை உடையவனாய் வாழ்கிறான். நான், நாம் என்ற உணர்வை உண்டாக்கக்கூடிய 'மனம்' தான் அதற்குக் காரணமாகிறது. உடம்பு, மனம், புத்தி, பிராணன், ஆன்மா ஆகியவற்றின் கலப்பே 'நாம்' என்ற உணர்வு, உயிர், மனம், பிராணன் மனத்திற்கு ஆதாரமாயுள்ள புத்தி ஆகியவற்றின் தொகுப்பு ஆகும். மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகியவை ஆன்ம தத்துவத்தில் அடங்கும் அந்தக் கரணங்கள் என்று கூறுவர். புத்தியும் சித்தமும் அறிவின் பகுதிகளாகக் கொள்ளலாம்.

மனம், உடல் போல் வளர்வதில்லை. தேய்வதில்லை. மனம் சலிக்கும் தன்மையுடையது. கலங்கலும், தெளிதலும் மாசுபடுதலும், மாசு நீங்கி ஒளிர்வதும், மனத்தின் இயற்கையாகும். இத்தகைய மனம் அறிவால் நிரப்பப்பட்டிருக்கிறது. மனத்துள் அறிவு குடியிருக்கிறது. மனத்தின் தொடர்பு ஈடுபாடு இல்லாமல் எந்த அறிவையும் பெற இயலாது. உலகில் ஒரு மனிதன் பெற வேண்டிய அறிவு அனைத்தையும் 'எண்ணும் எழுத்தும்' என்று கூறுவர். ஈரடியில் உலகளந்த திருவள்ளுவர்,

எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்என்ப வாழும் உயிர்க்கு (குறள் 342)

என்கிறார். 'எழுத்து' என்பது பொது வகையான அறிவு. இது கற்றவர் கல்லாதவர் என யாவரிடமும் காணப்படும் அறிவு. கல்வியால், பொது வகையான கல்வியால் விரிவுபடுத்திக் கொள்ளக்கூடியது. 'எண்' என்பது வாழவைக்கும் தொழிற்கல்வி, தொழில்நுட்பக் கல்வி போன்றவை. நந்தமிழ் நாட்டுப்புலவர் பெருமக்கள் எண்கல்வி மற்றும் எழுத்துக்கல்வி ஆகிய இரண்டையும் 'கலை' என்று கூறுவார். 'கம்பநாடன்' 'ஆய கலைகள் அறுபத்து நான்கும்' என்று கூறுகிறார். 'ஆய கலைகள் அறுபத்து நான்கும்' அறிவு என்பதில் அடங்கி, மனதில் உறைகின்றனவாகும்.

மனித உடம்பின் நான்காவது கோசம் விஞ்ஞானமயகோசம் அல்லது அறிவுமயமான அடுக்கு. நாள்தோறும் மனிதனை முன்னோக்கிப் பயணம் செய்ய வைப்பது அறிவே. அறிவின் பாங்குகளில் ஒன்று முன்னேறுவது. முயன்று முயன்று முன்னேறிக் கொண்டேயிருப்பது. ஆயிரம் ஆயிரம் ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்த மனிதனும் நாமும் அதற்குக் கண்கண்ட சாட்சியாக நிற்கிறோம். மாந்தர் இனத்தை முன் எடுத்துச் செல்லும் அறிவைப் பற்றி இனி அறிவோம்.

நிலஉலகத்தில் ஆறறிவு படைத்த ஒரே ஒரு உயிரினம் மனிதன். பிரபஞ்ச உணர்வு உடையவன். பிரபஞ்சத்தில் மனிதனும் ஓர் அங்கம் எனினும் சாதாரண உணர்வில் மனிதன் 'நானும் - உலகமும்' என்று எண்ணிப்பார்க்கக் கூடியவன். 'அகக்காட்சி' உடையவன். மனிதனிடம் புறப்பார்வையும், அகப்பார்வையும் இருக்கின்றன. அகக்காட்சியும், புறக்காட்சியும் அடிப்படையாகின்றன. இந்த இரண்டில் எது அமையாவிட்டாலும் அறிவில் குறைபாடு ஏற்படும். அறிவு வளர்ச்சியில் தேக்கம் ஏற்படும்.

அறிவுக்கு இரண்டு கூறுகள் இருக்கின்றன. உணர்கூறு என்றும், செயற்கூறு என்றும் அவை இரண்டாகும். அறிவு 'தற்சுட்டு' உடையது அல்ல. 'தான்அறிவு' என்ற உணர்வு அறிவிற்கு இல்லை. அறிவு 'புறச்சுட்டு' உடையது. அறிவு தன்னில் வேறானது. பிறரால் மட்டும் அறியப்படக்கூடியது. இத்தகைய அறிவு மனதின் விளக்கம் என்பதை உளங்கொள்வது மிகவும் அவசியமாகும். மனமின்றி மார்க்கமில்லை என்பதும் மனமிருந்தால் மார்க்கமுண்டு என்பதும் பொருள் செறிந்த பழமொழிகளாகும்.

மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகியவை மனித உடலை அலங்கரிக்கும் ஐம்பொறிகளாகும். சுவை, ஒளி, ஊறு, ஓசை, மணம் (நாற்றம்) என்பவை பொறிகளுக்குரிய புலன்களாகும். ஐம்பொறிகளும், ஐம்புலன்களும் உடனாய் நின்று ஒருங்கிணைந்து புலக்காட்சியை உருவாக்குகின்றன. 'அறிவு' என்னும் பயிர் விளைவதற்கு நிலமாக இருப்பது புலக்காட்சி . 'மண்ணின் நல்ல வண்ணம்' என்பது அறிவாகும்.

புலக்காட்சியில் வரவு வைக்கப்படும் செய்திகள் புத்தி, சித்தம், அகங்காரம் என்ற உட்கரணங்களால் அலசப்படுகின்றன. செய்திகள், நம்பிக்கைகள், நிகழ்வுகள் போன்ற யாவும் புலக்காட்சியில் பதிவாகின்றன. கண்ணால் பார்க்கப்பட்டது காட்சி அறிவாகிறது. காதால் கேட்கப்பட்டது கேள்வியறிவாகிறது. முகரப்பட்டது மூக்கால் அறியும் அறிவாகிறது. உடம்பின் உறுத்துதலால் - தொடுதலால் அறியப்பட்டது மெய்யறிவாகிறது. இவை தனித்தனி அறிவாகும். அறிதலாகும். இவையாவும் ஒருங்கிணைந்து திரண்ட அறிவாக வெளிவரும்போதுதான் திடப்பட்ட அறிவாகும் (Consolidated knowledge). 'தனித்தனியே அறிதல்' அந்தக் கரணங்களின் அவையில் முன்னிலைப் படுத்தப்படுகின்றன. அங்கே பல்வேறு கோணங்களில் நோக்கப்படுகின்றன. முடிவு திரண்ட அறிவாக வெளிப்படுகிறது. வெளிப்பட்ட அறிவு மீண்டும் புறஉலகில் வைக்கப்படுகிறது. புறஉலகில் நடத்தப்படும் தேர்வில் வெற்றிபெற வேண்டும்.

நம்முடைய அறிவு உண்மையான அறிவா அல்லது பொய் அறிவா என்று வெளிஉலகினர் ஆராய்கின்றனர். நாமும் ஆராய்ச்சி செய்ய வேண்டும். பதினாறு இனங்களின் உண்மை அறியும் சோதனையின் மூலம் பொய் அறிவை அகற்றிவிடலாம். மெய்யறிவினால் வரும் இன்பத்தை அடையலாம். பதினாறு இனங்களாவன,

1. சரியான அறிவிற்கான வழிகள்
2. சரியான அறிவின் நோக்கம்
3. சந்தேகம்
4. குறிக்கோள்
5. எடுத்துக்காட்டுக்கள்
6. சிதானந்தம் (நிலையான தீர்வுக்கு வழிகாட்டும் உதாரணம்)
7. உறுப்பினர்கள் (பொறிகள் புலன்கள்)

8. தர்க்கம்
9. உறுதிப்படுத்தல்
10. வாதம் (பட்டிமன்றம்)
11. போராட்டம்
12. குற்றங்காணல்
13. தப்பெண்ணம் அல்லது கள்ள நியாயம்
14. சொற்புரட்டு
15. உதவாத் தன்மை
16. கடிந்து பேசுவதற்கான சமயம் பார்த்திருத்தல்

ஆகியவைகளாகும். வாதத்திற்குரிய விஷயம் பற்றிய ஐயம் முதன்முதலாக இடம்பெறுகிறது. அடுத்து, அதை வாதிப்பதற்கான நோக்கம் (உத்தேசம்) எழும்புகிறது. அடுத்து, சிதானந்தம் அல்லது நிலையான தீர்வுக்கு வழிகாட்டும் எடுத்துக்காட்டு அல்லது உதாரணம் தலை தூக்குகிறது. அடுத்து, பிரிக்கப்பட்ட தன் ஐந்து அங்கத்தினர்களுடன் நிராகரிப்பவன் முன் வருகிறான். அடுத்துத் தர்க்கம் தொடர்கிறது. அதன்பின் வழக்கின் உண்மை நிலையின் நிர்ணயம் (தீர்வு) காணப்படுகிறது. அதற்கு எதிர்வாதம் சவால் விடுகிறது. அது போராட்டத்திற்கு வழி காட்டுகிறது. ஒருவருக்கொருவர் குற்றங்கண்டு பிடிக்கின்றனர். அதன்பின் கள்ளநியாயம் (தப்பெண்ணம்) ஊடுருவப் பார்க்கிறது. தன்னை நிலைநாட்ட முயற்சி செய்கிறது. அதன் விளைவாகப் பேசுவதை நிறுத்தி அவர்கள் ஏசுகின்றனர். எதிர்க்கட்சிக்காரரின் வாதிப்பதற்கான திறமையின்மை வெளிவந்ததன் மூலம் எல்லாவகை வாதங்களுக்கும் கேள்விக் கணைகளுக்கும் முற்றுப்புள்ளி வைக்கப்படுகின்றது.

இவ்வாறு பலமுனைத் தாக்குதல்களுக்குத் தாக்குப்பிடிப்பதே உண்மையான அறிவாகும். உண்மையான தெளிவான அறிவே மேன்மையைத் தரும். அறிவில் தெளிவு ஒரு தவமாகும். இனி அறிவைப் பற்றித் தமிழ்நூல்கள் கூறும் கருத்துகளை அறிவோம். குன்றக்குடி அடிகளார், "அறிவு என்பது செய்திகளின் தொகுப்பு அல்ல, நூல்களில் காணப்படுவது அல்ல. கற்றதை எல்லாம் திரும்ப உரைக்கும் மொழி அல்ல. துன்ப நீக்கத்திற்குரிய மருந்து. நேற்றைய துன்பத்தை இன்றைய இன்பமாக மாற்ற உதவுவது" என்று தெளிவுபடுத்துகிறார். இதனையே திருவள்ளுவர்,

அறிவு அற்றம் காக்கும் கருவி செறுவார்க்கும்
உள்அழிக்க லாகா அரண் (குறள் 421)

என்று வலியுறுத்துகிறார்.

ஒருவனுக்குத் துன்பமும் அழிவும் வாராமல் காத்துக் கொள்ளும் கருவி அறிவாகும். பகைவர் உட்புகுந்து அழிக்க முடியாத கோட்டையும் அறிவேயாகும். அறிவு நேற்றைய துன்பத்தை இன்றைய இன்பமாக மாற்ற உதவுவது மட்டுமன்று. எதிர்வரும் துன்பத்தையும் தடுத்து நிறுத்தும் ஆற்றலுடையது.

எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு இல்லை
அதிர வருவதோர் நோய் (குறள் 429)

வரவிருக்கின்ற துன்பத்தினை முன்னதாக அறிந்து காத்துக்கொள்ளவல்ல அறிவுடையார்க்கு அவர் நெஞ்சு குலைந்து நடுங்கும்படியாக உண்டாகும் துன்பம் எதுவுமில்லை. அறிவு எவ்வாறு வளரும்? அறிவு கல்வியாலும், கேள்வியாலும் வளரும். இதனை,

எழுத்தறியத் தீரும் இழிதகைமை தீர்ந்தான்
மொழித் திறத்தின் முட்டறுப்பான் ஆகும்
மொழித் திறத்தின் முட்டறுத்த நல்லோன் முதல்நூல்
பொருள் உணர்ந்து கட்டறுத்து வீடுபெறும்

என்ற பழம் பாடலால் அறியலாம்.

ஒருவன் மணலின் கண் எவ்வளவு ஆழம் தோண்டுகின்றானோ அந்த அளவிற்கு நீர் ஊறும். அதுபோல ஒருவன் கற்கும் அளவிற்கு ஏற்ப அறிவு பெருகும். மேலும் மேலும் அறிவை அதிகரிக்க வேண்டும்.

தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு (குறள் 396)

நல்ல கல்வியாலும் கேள்வியாலும் நல்லறிவே வளரும். வளரவேண்டும். ஆயின் உலகில் சிலர் உயர்ந்த கல்வி கேள்வியுடையவராயிருந்தாலும் அறிவற்றவர் போல் வாழ்கின்றனரே ஏன்? இவ்வினாவிற்கு வள்ளுவர் ஊழ் (வினைப்பயன்) என்கிறார். நல்வினை, தீவினை, ஆகியவை செய்தவ்னையே சென்றடைந்து பயன் ஊட்டும், 'ஊழ்வினை உறுத்து வந்து ஊட்டும்' என்பது சிலம்பின் செய்தியாகும்.

(ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி என்பன ஒரே பொருள் தரும் சொற்களாகும்)

நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை அறிவே மிகும் (குறள் 373)

பேதைப்படுக்கும் ஊழ் உடையான் ஒருவன் நுண்ணிய பொருள்களை உணர்த்தும் நூல்கள் பற்பல கற்றான் ஆயினும், அவனுக்குப் பின்னும் தன் ஊழான் ஆகிய பேதைமை உணர்வே மேம்பட்டுத் தோன்றும்.

நல்ல அறிவினால் என்ன பயன் விளையும்? உயர்ந்தபொருள் இழிந்தார் வாயினும், இழிந்த பொருள் உயர்ந்தார் வாயினும், உறுதிப்பொருள் பகைவரிடமிருந்தும், கெடுபொருள் நண்பர்களிடமிருந்தும் சிலசமயங்களில் கேட்க நேரிடலாம். சொல்பவரது குணம், குற்றம் நோக்காமல் சொல்லியதில் காணப்படும் நன்மை தீமைகளை மனதில் கொண்டு ஏற்றுக்கொள்ள வேண்டும். நல்ல அறிவினால் இவ்வாறு செய்ய முடியும்.

மனம் அறிவால் நிரம்பியது என்று கூறுகிறோம். மனம் என்னும் குதிரைமேல் அறிவு பயணம் செய்யும் என்றும் கூறுகிறோம். மனம் முரட்டுக் குதிரைபோல் தடமில்லாத் தடத்தில் போகலாம். அவ்வாறு போக விடாமல் ஒழுங்கான வழியில் செல்லுமாறு செய்யவல்லவன் அறிவு எனும் குதிரைப்பாகன்.

சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ
நன்றின் பால்உய்ப்ப தறிவு (குறள் 422)

மனத்தை அது சென்ற வழியிலே செல்லவிடாது வழியின் நன்மை தீமைகளை அறிந்து நல்லதன் கண் செலுத்துவது அறிவு. நல்ல அறிவினையுடையவர் மிகவும் பெருமைக்கு உரியவராவார். ஒரு தாய் வயிற்றில் பல பிள்ளைகள் பிறந்தாலும், பெற்ற தாய் எல்லோரையும் சமமாகவே போற்றுவாள். பேணிப் பாதுகாப்பாள். ஆயினும், அப்படிப்பட்ட தாயும் தன் பிள்ளைகளில் எவன் உயர்ந்த அறிவு உடையவனாக இருக்கிறானோ அவன்பால் பெருமதிப்பு வைப்பாள். அவனை வெகுவாகப் பாராட்டுவாள்.

பிறப்பு ஓர்அன்ன உடன் வயிற்றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயும் மனந்திரியும் (புறம் 183)

கற்றோர் கூடும் அவையில் சான்றோர் அவையில், வயதில் மூத்தவர்களை அழைப்பது வழக்கமன்று. அறிவுடையோனையே அழைத்து, பெருமைப்படுத்துவர். அவர் பின்னே செல்வர். கீழ்நிலையில் உள்ள ஒருவன் கல்வி அறிவால் சிறந்தவனாக இருந்தால், மேல்குடியில் பிறந்தவன் என்ற இறுமாப்புக் கொண்டவனும், கீழ்க்குடியில் பிறந்தவனாகக் கருதப்படுபவனிடம் சொல்கேட்டு நிற்பான். அவன் வழி ஒழுக முற்படுவான்.

ஒருகுடிப் பிறந்த பல்லோருள்ளும்
மூத்தோன் வருக என்னாது அவருள்
அறிவுடையோன் ஆறு அரசு செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பால் உள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவன் அவன்கண் படுமே (புறம். 183)

நாட்டை ஆளும் மன்னனை விட மாசறக் கற்றோன் மிகுந்த சிறப்புக்குரியவன் ஆவான் என்பது இதனால் புலப்படுகின்றது.

அறவழியில் பொருள் ஈட்டுவதற்கும், பாதுகாப்பிற்கும் அதனால் பயன்பெறுவதற்கும் அறிவும் உழைப்பும் தேவை. அறிவுடையவரே நன்முறையில் செல்வத்தோடு வாழ்வது கண்கூடு. சிலசமயங்களில் அதற்கு மாறாகவும் நடக்கக் காண்கின்றோம். உலகம் ஊழின் காரணமாய் இரண்டு வகையான கூறுபாடுடைய இயற்கையாக நடக்கிறது. ஒரு பக்கம் செல்வமுடையவர்கள். அறிவில்லாதவராக இருக்கிறார்கள். ஒருபக்கம் அறிவுடையவர்கள் செல்வம் அற்றவராய், வறியவராய் இருக்கிறார்கள். இரண்டு வகையான ஊழ் செயல்படுகிறது.

இருவேறு உலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு (குறள் 374)

என்பார் திருவள்ளுவர். எனினும் அறிவுடையாரிடம் காணப்படும் வறுமை ஏளனத்துக்குரியதன்று. அவர் வறுமையுடையவர் என்பதால் யாரும் வெறுத்து ஒதுக்குவதில்லை. அஃது பெருமையுடைய வறுமையாம். செம்மையான வறுமை. கற்றவர் வறுமை போற்றப்படுவதைப் புறம் மிகவும் அழகாகப் பாடுகிறது.

நல்லறிவுடையோர் நல்குரவு
உள்ளதும் பெரும யாம் உவந்து நனி பெரிதே (புறம். 197)

கற்றவர் சிலரிடம் அறிவின்மையால் உளவாகும் பேதைமையும், புலன் உணர்ச்சியாலே வாழும் பழுத்த அறிவுடையார் சிலர் வறுமையில் வாடுவதும் ஊழின் செயலாகும் என்பார் திருவள்ளுவர். தீங்கு தராத அன்னாரது பேதைமையும் வறுமையும் பிறர் ஏளனம் செய்ய மாட்டார் என்பதும் தெளிவாகக் கூறப்படுகிறது.

இனி முழு அறிவு உடையாரிடம் உளவாகும் பண்பு நலன்களை அறிதல் நலம் பயக்கும். அறிவின் பயன் ஜீவ காருண்யம் - உயிர் இரக்கம் ஆகும். எந்த அறிவில் கொல்லாநலம் தெரிகிறதோ அந்த அறிவு முழு அறிவு ஆகும். அஃதே வாலறிவு ஆகும். முழு அறிவு வாலறிவு, மெய்யறிவு என்பன 'பலசொல் ஒரு பொருள்' என்ற இலக்கணப்படி இருக்கும் சொற்கள் ஆகும். மூன்று சொற்களுக்கும் அர்த்தம் ஒன்றே. மாசறு காட்சி உள்ளவரிடம் முழு அறிவு இருக்கும். முழு அறிவு உயிர் இரக்கத்தினை வெளிப்படுத்திக் கொண்டிருக்கும். உயிர் இரக்கம் (ஜீவகாருண்யம்) என்பது பிற உயிர்களுக்கு வரும் துன்பங்கண்டு மனங்கசிந்து அத்துன்பம் வருத்தாமல் பாதுகாத்தல் ஆகும். செந்நாப்புலவர்,

> அறிவினான் ஆகுவதுண்டோ பிறிதின் நோய்
> தந்நோய்போல் போற்றாக் கடை (குறள் 315)

என்று கேட்கிறார். 'ஜீவகாருண்ய ஒழுக்கம்' என்பது 'வாடிய பயிரைக் கண்டும் வாட்டமடைதல்' ஆகும். வடலூர் வள்ளலார் போற்றிய நெறியாகும். பிற உயிர்களின் துன்பம் துடைத்தலே எல்லாவிதமான அறிவிற்கும் சிகரமாக இருக்கிறது என்பதை நன்கு விளங்கிக் கொள்ள வேண்டும்.

## ஞானியின் அறிவு

பேத உணர்ச்சி கலந்துள்ளது அஞ்ஞானம். பேத உணர்ச்சி ஒரு சிறிதும் இல்லாது, அப்பேதத்தில் நிலைகொண்டிருப்பது ஞானம் அல்லது மெய்யறிவு. வாலறிவும் அதுவே. கடற்கரையில் நின்றுகொண்டு கடலைப் பார்க்கின்றபொழுது ஒன்றன் பின் ஒன்றாக எண்ணிறந்த அலைகள் காட்சி கொடுக்கின்றன. விமானத்தில் மேலே ஏற ஏற அலைகள் மறைந்து விடுகின்றன. வெறும் கடலே காட்சி தருகிறது. தரையில் நின்று கொண்டு நிலப்பரப்பைப் பார்க்கும்பொழுது மேடுபள்ளங்கள் தெரிகின்றன. மலை உச்சியில் நின்றுகொண்டு பார்க்கின்றவர்கட்கு மேடு பள்ளங்கள் தெரிவதில்லை. ஒரே சமவெளியாகக் காட்சி தருகிறது. சில வேளைகளில்

கடலில் அலைகள் வீசுவதில்லை. சாந்தமான ஒரே நீர்ப்பரப்பாகத் தென்படுகிறது. அலைகளாகக் காட்சி கொடுக்கும் அவை கடலுக்குப் புறம்பானவைகள் அல்ல. கடல் என்றும் அலை என்றும் கூறுவது வெறும் பெயரளவில்தான். உண்மையில் கடலும் அலைகளும் அபின்னம். அதாவது இரண்டும் ஒன்றே. அதே விதத்தில் எண்ணிறந்த உயிர்வகைகள் அகண்டமாகியுள்ள அறிவுப்பெருவெளியிலுள்ள வெறும் தோற்றங்களாம். ஆகவே பேதத்தைப் பார்ப்பது அறிவின்மை. பேதமற்ற தன்மையை உணர்வது மெய்யறிவு. பேதங்கள் யாவும் மனதால் உண்டுபண்ணப்படுபவை என்பதை உணர்வது ஞானவானுக்குரியது.

## அறிஞன் செயல்

உலக விஷய ஆசைகளும், கடவுளை அடைய வேண்டும் என்னும் ஆசையும் ஒன்றோடொன்று ஒவ்வா. உலகப் பொருள்களின் மேலுள்ள ஆசை மனிதனை மேலும் மேலும் இவ்வுலகிலுள்ள இன்ப துன்பங்களில் ஆழ்த்துகிறது. அத்தகைய ஆசை அதிகரிப்பதற்கேற்ப மனிதனுக்குச் சஞ்சலம் உண்டாகிறது. மன அமைதி கலைகிறது. நவீன உலக வாழ்க்கை என்பது இவ்வுலக ஆசைகளை மேலும் மேலும் வளர்த்தலேயாகும். அதன் விளைவாக மனிதனுக்குச் சஞ்சலமும் அமைதியின்மையும் அதிகரிக்கின்றன. மனிதனிடமுள்ள மேலான தெய்வீகப் பண்புகள் மறைந்து கிடக்கின்றன. நவீன வாழ்க்கையில் ஈடுபாடுள்ள மக்களுக்கு உலக விவகாரங்களே நாளுக்கு நாள் அதிகரித்து வருகின்றன.

உலகத்துப் பொருள்களின் மேலுள்ள நாட்டத்தை மட்டுப்படுத்தித் தெய்வ நாட்டத்தை வளர்க்க வேண்டும். தெய்வத்திடத்து அன்பை வளர்த்தும் பெருக்கியும் வந்தால் அது உலக ஆசைகளை ஒதுக்கித் தள்ளுகிறது. உலக ஆசைகள் நிலையற்றவைகள் என்றும் துன்பத்துக்கு ஏதுவானவைகள் என்றும் பக்தன் ஒருவன் அறிய வருகிறான். தெய்வீக நாட்டமும் உலகியல் நாட்டமும் வெளித்தோற்றத்துக்கு அவாவாகத் தென்படுகின்றன. ஆனால் அவை இரண்டுக்குமிடையே உள்ள வேற்றுமை விளையும் பயனைக் கொண்டு அறியலாகும். உலகியல் ஈடுபாடு மனிதனைக் கீழ்மையில் ஆழ்த்துகின்றது. தெய்வீக ஆசை மனிதனைப் படிப்படியாக உன்னதமான நிலைக்கு எடுத்துச் செல்லுகிறது. உலக ஆசைகளை நிறைவேற்றுவதன்மூலமாக உண்டாகின்ற இன்பம் துன்பமாக

வடிவெடுக்கிறது. கடவுள் நாட்டத்தை வளர்ப்பதால் வருகிற மனத்திட்பம் மனிதனை மேலோன் ஆக்குகிறது. ஆசை வடிவினனாக இருக்கும் மனிதன் உலக ஆசைகளை ஒதுக்கித் தள்ளிவிட்டுத் தெய்வீக ஈடுபாட்டை வளர்த்து வருவானாகில் அவன் எடுத்துள்ள மனிதப் பிறவி மேன்மை அடைகிறது.

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு (குறள் 350)

என்பது வள்ளுவர் வாக்கு. தெய்வப் பற்று வளர்கின்ற அளவு உலகப்பற்று குறைகின்றது. தெய்வச் சிந்தனையும் தெய்வ சம்பந்தமான பேச்சும் தெய்வப் பணியும் தெய்வப் பற்றை வளர்க்கின்றன. அறிஞன் ஒருவன் இவ்விரண்டு நிலைகளையும் சீர்தூக்கிப் பார்த்துவிட்டு உலக ஆசைகளை ஒதுக்கவும் பரநாட்டத்தை வளர்க்கவும் வேண்டும்.

# 7. ஆனந்தம் என்னும் தத்துவம்

உடல் அன்னமயகோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞான மய கோசம், ஆனந்தமயகோசம் ஆகிய ஐந்து கோசங்களை உடையது. இவ் ஐந்து கோசங்களையும் தூய்மைப்படுத்துதல் பஞ்ச சுத்தி ஆகிறது. நிலம், நீர், தீ, வளி, வான் ஆகிய ஐந்து பூதங்களால் (பொருள்களால்) கட்டுப்பட்டது இவ்வுடம்பு. இந்த ஐந்து பூதங்களை முறையாகக் கையாளுவது பஞ்ச சுத்தி ஆகிறது. மேலும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்(மணம்) என்ற ஐம்புலன்களைப் பண்படுத்துவதும் பஞ்ச சுத்தி எனப் பெயர் பெறுகிறது. நெறியான வாழ்க்கையின் மூலம் மனிதன் உடலைப் புனிதம் வாய்ந்ததாகப் பண்படுத்திக் கொள்ள முடியும். அப்பொழுது பஞ்சசுத்தி என்னும் சாதனம் நன்கு பூர்த்தியாகிறது.

பஞ்ச சுத்தி என்னும் சாதனம் நன்கு பூர்த்தியாவது என்பது ஆனந்தமய கோசத்தில் திளைப்பதற்கு வழிவிடுவது என்பதாகும். எலும்பும் சதையுமான உடலில் பிராணனும், பிராணனில் மனமும், மனத்தில் அறிவும், அறிவில் ஆனந்தமுமாக மனிதன் உருவெடுத்து இருக்கிறான். ஒன்றுள் ஒன்றாய் உறையும் இவ்வைந்து கோசங்களின் விரும்பப்படும் அடுக்கு ஆனந்தமய கோசம் அல்லது ஆனந்தமய அடுக்கு அல்லது ஆனந்தமய உறை. உள்ளில் உள்ளாய் இருப்பது ஆனந்தமய கோசம். கோயிலின் கருவறையில் கர்ப்பக்கிரகத்தில் கொலுவிருக்கும் ஆண்டவன் போல் இருப்பது ஆனந்தமயகோசம். எல்லோரும் விரும்புவது கடவுள் தரிசனம்.

உலகத்தில் வாழும் ஓரறிஉயிர், ஈரறிவுஉயிர், மூவறிவு உயிர், நான்கறிவு உயிர், ஐந்தறிவு உயிர், ஆறறிவு உயிர், ஆகிய உயிர்க்குலங்கள் அவாவுவது இன்பமே. இன்ப நாட்டம், இன்ப விருப்பம், இன்ப விழைவு எனப் பலவாறாகக் கூறப்படுவது எல்லோருக்கும் பொதுவானதாகும். சிற்றறிவு உயிர்கள் முதல் பேரறிவு உயிரான மனிதன் வரை நடத்தல், நிற்றல், இருத்தல், கிடத்தல், உண்டல், உறுதல், உயிர்தல் முதலான எல்லா முயற்சிகளும் இன்பம் அடைதலையே நோக்கமாகக் கொண்டுள்ளன.

தொடுஉணர்ச்சிக்கு மட்டுமே உடைய ஓரறிவு உயிர், அதனால் கிடைக்கும் இன்பத்தை நாடும். புல்லும் மரமும் தொடு உணர்ச்சியால் உண்டாவதை அறியும். நண்டு, நத்தை போன்றவை தொடுஉணர்ச்சி உண்ணுதல் ஆகிய இரண்டும் அறிவால் அறியும் இன்பம் பெறும். எறும்பு சிதல் போன்ற உயிரினங்கள் மெய்யால் தொட்டும், வாயால் உண்டும், மூக்கால் முகர்ந்தும் சிறிய அளவு இன்பம் அடையத்தக்கன. தும்பி, நண்டு, போன்றவை மெய்யால் உற்றும், வாயால் சுவைத்தும், மூக்கால் முகர்ந்தும், கண்களால் பார்த்தும் அறிந்து இன்பம் பெறும் நான்கு அறிவுடைய உயிரிகளாகும். நீரிலும் நிலத்திலும் விண்ணிலும் வாழும் முதலை, ஆடு, மாடு, பறவைகள் போன்றவை செவியால் கேட்கும் திறன் உடையவைகளாகும். இவை உடலால் பொருந்தியும் மருவியும், வாயால் சுவைத்தும் உண்டும் மூக்கால் முகர்ந்தும், கண்ணால் நோக்கியும் காதால் கேட்டும் ஐம்பொறி இன்பம், அதாவது ஐந்தறிவு இன்பம் அனுபவிப்பன ஆகும். இந்தப் படித்தரத்தில் உச்சியில் இருப்பது மனித உயிரினம். படைப்பின் சிகரமாக இருப்பவன் மனிதன். ஐம்பொறிகளோடு மனம் படைத்து, அதனால் ஆறறிவு உயிர் என்று அறியப்பட்டவன். 'சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்தின் வகை தெரிந்து வாழ உதவும் மனம் பெற்றவன் மனிதன். எனவே பிற உயிர்கள் அடையும் இன்பத்தை விட மேலான இன்பத்தை மனிதன் அடைகிறான்.

எல்லா உயிர் வகைகளும் துன்பம் விலக்கி இன்பம் அடைதலையே விரும்புகின்றன. ஆனால் உயிரினங்களின் முதல் அனுபவமே துன்பம் ஆகும். துன்பம் இன்பமாகிறது. பிறந்த உடனே பசித்துன்பம் ஏற்படுகிறது. பிறந்த கன்று சிறிதுநேரத்தில் தாய்மடியைத் தேடிப்பால் குடிக்கிறது. மனிதக் குழந்தையும் பிறந்த உடனே அழுகிறது. சர்க்கரை நீரோ, தேனோ வாயில் தடவுவது இன்றும் வழக்கமாக இருக்கிறது. 'தாய்மடி தேடுதல்' முதன்முதல் ஏற்படும் துன்பத்தால் - பசியால் நடைபெறுகிறது. ஆகவே உயிர்களுக்கு ஏற்படும் முதல் அனுபவம் துன்பமே.

பசிக்கு உணவு உண்டதும் பசி அடங்கி மகிழ்ச்சி உண்டாகிறது. உண்ட உணவு செரித்தால் அதனினும் மகிழ்ச்சி உண்டாகிறது. 'உணவினும் உண்டது அறல் இனிது' என்று வள்ளுவர் பெருமானும் எடுத்துரைக்கின்றார். 'அறல்' என்றால் செரித்தல் என்று அர்த்தம். செரித்து முடிந்தால் மீண்டும் பசித்துன்பம். இன்பம் துன்பத்தில் முடிதலும், துன்பம் இன்பமாக உருமாற்றம் அடைதலும் தொடர் நிகழ்ச்சிகளாகும்.

உணவின்பத்திற்கு அடுத்து எல்லா உயிர்களின் நாட்டமும் மருவிக் களித்தலில் முடிகிறது. ஆணும் பெண்ணுமாய்ப் பிறந்து வாழும் உயிரினங்கள் உரிய பருவத்தில், பருவச் செவ்வி அடைந்தும் ஒன்றை ஒன்று மருவியும், தழுவியும், பொருந்தியும் மகிழ்கின்றன. ஆண் உயிர் 'பெண்நலன்' உண்டு களிக்கிறது. பெண் உயிர் 'ஆண்நலன்' துய்த்து மகிழ்கிறது. பெண் உயிர் ஒன்றை ஏற்றுக் களிக்கிறது. ஆண் உயிர் ஒன்றை வழங்கிக் களிக்கிறது.

எந்தவகையான முயற்சி உடையாருக்கும் தொழில் புரிபவருக்கும் பசியும், காமமும் பொதுவானதாகும். மனிதனைத் தவிரப் பிற உயிரினங்களிடம் உறவு முறைகளோ, ஒழுக்க நெறிகளோ இல்லை. 'மனம்' என்னும் தலைமைப் புலன் இல்லை. ஆதலால் அவைகளின் வாழ்க்கை, 'உடல்ஊழ்' அளவினதாகும். மனம் படைத்த மனிதன் 'உடல் ஊழ் மற்றும் 'வினை ஊழ்' என்ற இருவகை வினையால் வாழ வேண்டிய கடப்பாடுடையவன். எனவே மனிதரில் சிலர் மேனிலை அடைகின்றனர். பலர் கீழ்நிலை எய்துகின்றனர்.

மனிதன் பாலுணர்ச்சியால் உந்தப்பட்டுக் கீழ்நிலை அடையாமல் மேல்நிலைக்கு உயரவே 'ஒருவன்ஒருத்தி' என்ற காமம் நுகர்தலுக்கு வேலி கோலப்பட்டது. வேலி தாண்டிய வெள்ளாடுகள் பாழாய்ப் போகின்றன. மனப்புலன் இல்லாததால் விலங்கினங்கட்கு 'ஒருவன் - ஒருத்தி' என்ற நியாயம் கற்பிக்கப்படவில்லை. மேலும், அவைகளுக்கு அறிவுப் பெருக்கமும் இல்லை. எனவே, எந்த ஒழுக்கமும் கற்பிக்க இயலாது. இந்த இரண்டுமே அவைகளுக்குத் தேவையுமில்லை.

அறிவு நூல் பயிற்சி உடையாருக்கும், வீடு துறந்து, காட்டில் வாழ்ந்து தவம் செய்பவர்களுக்கும் இன்ப நாட்டம் உரியதே. 'வீடுபேறு' எனும் இன்பத்தை அடைதல் அவர்கள் முயற்சியாகும். வீடுபேறு - மோட்சம் நிர்வாணம், ஐக்கியம் போன்றவை எல்லாம் பேரின்பம் என்று கூறப்படுகின்றன. அறிவு விளக்கத்தின் பயன் எல்லாம் இன்பப் பேறாகவே முடிகின்றன. எனவே அறிவைக் காட்டிலும் இன்பமே பெரியதாகவும் சிறந்ததாகவும் கருதப்படுகிறது. உயிரினங்கள் யாவும் இன்பவழிப்பட்டு வாழ்தலையே நாடுகின்றன.

விலங்கினங்களின் அறிவு பகுத்துணர்வோடு கூடாதது. உலகத்துப் பொருள்களை மட்டும் அறிவிக்கும் கருவிகளான மெய், வாய், கண்,

மூக்கு, செவி என்னும் ஐந்து பொறிகளோடு மட்டுமே இயைந்து நிகழ்தலின் சுவை, பசி, காம நுகர்ச்சி ஆகியவற்றிலேயே திருப்தியுற்றுக் காலம் கழித்துவிடுகின்றன. விலங்கினங்களின் அறிவு புறப்பொருள் பற்றிய புற அறிவு. ஆகவே அவற்றின் அறிவு மிகவும் குறுகிய அளவிலேயே சிறிதாகவே இருக்கும். அச்சிறிய அறிவினால் அவை பெறும் இன்பமும் மிகச் சிறியதாகவே இருக்கும்.

மக்களுக்குள்ள அறிவு புறத்தேயுள்ள உலகத்துப் பொருள்களை ஐந்து பொறிகளின் மூலமாக அறிவதுடன் அங்ஙனம் அறிந்தவற்றைத் தம் அகத்தே கொண்டுபோய் வைத்து 'இது நல்லது' 'இது தீயது' எனவும், 'இது இதனை ஒக்கும்' 'இது இதனை ஒவ்வாது' எனவும் பிரித்துணர அல்லது பகுத்துணர வல்லதாயும் இருக்கிறது. எனவே விலங்கினங்களின் அறிவை விட எத்தனையோ பெரிதான இந்த அகப்புற அறிவினால் வரும் இன்பமும் எத்தனையோ மடங்கு பெரிதாகத் திகழ்கிறது.

சிற்றறிவுடைய உயிர்கள் அவாவும் இன்பத்திற்கும், பேரறிவுடைய மக்களும் முனிவரும் அவாவும் இன்பத்திற்கும் வேறுபாடு இருக்கிறது. இன்பம் அறிவின் காரியமாகும். அஃதாவது இன்பம் அறிவினின்று விளைவதாகும். எனவே அறிவின் தரத்திற்கேற்பப் பெரியதாயும், சிறியதாயும் நிலையுளதாயும் நிலையிலாதாயும் பலதிறப்பட்டுத் தோன்றும். பொதுவாக உயிர்கள் உலகத்துப் பொருள்களின் சேர்க்கையாலும் தம்மையொத்த உயிர்களின் சேர்க்கையாலும் இன்பம் பெறுகின்றன. உயிரின் சிறுமைக்கு ஏற்ப, சிற்றின்பமும், உயிரின் பெருமைக்கு ஏற்ப, பேரின்பமும் அடைகின்றன.

விலங்கினங்களுக்கு "நாளை என்ன செய்வது? நாளைக்கு உணவுக்கு எங்கே போவது?" போன்ற கவலைகள் எவையும் இல்லை. மனிதர்கள் இன்பத்துக்கு உதவியாய் நிற்கும் மனைவி, மக்கள், பெற்றோர், உற்றார், நண்பர் போன்றோர்களுக்காகவும் பொருள் தேடுகிறார்கள். எதிர்காலம் பற்றிய அறிவும் உணர்வும் பொருளைத் தொகுக்கத் தூண்டுகின்றன. எனவே தொழில் செய்யும் முனைப்பு ஏற்படுகிறது. ஒரு மனிதன் ஒரு தொழிலை உண்டாக்குவதால் அவனும் இன்பம் அடைகிறான். பிறனும் இன்பமடைகிறான். இன்பம் பலமடங்கு பெருக்கமடைகிறது. "தான் இன்புறுவது உலகு இன்புறக் கண்டு காமுறுவர் கற்றறிந்தார்" என்கிறார் வள்ளுவப் பெருந்தகை. இதன் பொருள் : "கற்ற அறிஞர்களின் தாம்

இன்பம் அடைவதற்குக் காரணமான கல்வியால், தொழிலால் உலகினரும் இன்பம் அடைவதால் அக்கல்வியை விரும்புவர்" என்பதாகும். தீதற்ற வழியிலே பொருள் ஈட்டினால் அப்பொருள் அறத்தையும் கொடுக்கும் இன்பத்தையும் கொடுக்கும். அதனால்தான் 'செய்க பொருளை' என்றனர். கல்லார் இன்பமும் கற்றார் இன்பமும் அளவிலும் முயற்சியிலும் வேறுபடுகின்றன. எள்ளளவும் கல்வியில்லாத ஒருவன் பழமரத்தடியில் பசியுடன் நிற்கிறான். பசி கடுமையாக இருக்கிறது. 'பசி' 'பசி' என்று வருந்திக்கொண்டிருக்கின்றான். யாராவது உணவு தரமாட்டார்களா என்று சுற்றும் முற்றும் பார்க்கிறான். ஆயின் தலைக்கு மேலே தொங்கும் பழம் பசியாற்றுமே என்ற எண்ணம் எழவில்லை. வாங்கி உண்டே பழக்கப்பட்ட அவனுக்குப் பறித்துத் தின்று பசியாறலாமே என்று புலப்படவில்லை. பரமார்த்த குரு கதையில் வரும் சீடர் போன்று குதிரை முட்டையைத் தேடி அலையும் அறிவிலிகளால் இன்பம் அடைதல் அரிதாகும். இன்பம் என்று எண்ணிப் பெருந்துன்பத்திற்கே ஆளாவர். கொஞ்சம் அறிவுள்ளவன் அந்த மரத்தடியில் நின்றிருந்தால் கனியைப் பறித்துப் பசியாற்றிக் கொள்வான். அக்கம் பக்கத்தில் நிற்பவர்களுக்கும் கனிகளைப் பறித்துக் கொடுத்துப் பசியாற்றுவான். கற்றவர்களே சிறிதளவு முயற்சியிலே தாமும் இன்பமடைந்து பிறரையும் இன்பத்தில் ஆழ்த்துவர்.

அறிவினும் இன்பமே பெரியது. சிறந்தது. எனவே இன்ப வழிப்பட்டு நிற்கும் பக்தி நெறியே அறிவின் வழிப்பட்டு நிற்கும் ஞான நெறியினும் சிறந்ததாக விளங்குகிறது. மாங்கனியின் அருமையை அறிந்து நிற்கும் நிலையைப் போன்றது ஞானநெறி. மாங்கனியைப் பறித்துத் தின்று சுவைத்து அறிவது போன்றது பக்தி நெறி. சுவையும் இன்பமும் ஒரு சேரக் கிடைப்பதால் உலகில் பக்தி நெறியே எங்கும் பரவியிருக்கிறது.

ஒரு பொருளின் அருமையை உணர்ந்தவன், அறிந்தவன் அதை அனுபவிக்காமல் இருக்க மாட்டான். ஆதலால் ஞானநெறியில் நின்றவன் பக்தி நெறியில் செல்லாமல் இருக்கமாட்டான். எனவே அறிவின் வயப்பட்டதாய ஞானமார்க்கம், இன்ப வயத்ததாய பக்தி மார்க்கத்தினைப் பிறப்பிக்கும் தாய் போன்றது. ஞானமார்க்கத்தின் சேயாய் இருப்பது பக்தி மார்க்கம். பக்தி மார்க்கம் காரிய அனுபவமாய், ஞானத்தினும் சிறப்புடையதாக விளங்கும் என்பது வெளிப்படையானது. கற்றோரினும் மிகவும் மேம்பட்டவர் தவ ஒழுக்கத்தினர். "உலகத்துப் பொருள்களின்

நிலையாமையினையும் சிற்றுயிர்களின் சிறிய இயல்பினையும் இனிது உணர்ந்து அவற்றின்மேல் சிறிதும் பற்றின்றி நிற்பர். அவர் எல்லாப் பொருள்களிலும் பெரியதாய், உயிர்ப்பொருள் உயிரில் பொருள் என்னும் எல்லாவற்றினும் நுட்பமுடையதாய், எல்லா அறிவுகளினும் மேம்பட்டதாய், தூயதாய் விளங்கும் அறிவினை உடையதாய் இருப்பர். இவ்வாறு பேரறிவு உடையதாய் விளங்குவதால் அவ்வறிவோடு பேரின்பமும் உடன் நிகழப்பெறும். பேரின்ப நிலையுமாய் என்றும் நிலைபேறாயுள்ள அழியாத முழுமுதற்பொருளாய் விளங்குகின்ற, ஒப்புயர்வில்லாத ஒரு தனிப்பெருந்தலைமைப் பெருங்கடவுளையே அறியும் நிலை பெற்றிருப்பர். அப்பேரறிவு கொண்டு அப்பேரறிவோடு ஒருங்கே நிகழும் பேரின்பப் பாற்கடலில் திளைத்த பேரின்ப உருவாய் நிலைதிரியாது அமர்ந்திருப்பர்" என்று மறைமலை அடிகள் கூறுவார். இங்ஙனம் முனிவர் பெருமக்களால் அடையப்பெறும் இன்பம் எல்லா உயிர்களும் கடைசியாக எய்துதற்குரிய முடிந்த பதமாய் விளங்கும் கடவுள் இன்பமயமானவர், அன்புமயமானவர்.

மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழியடைத் தமுதே
ஊறிநின் றென்னுள் எழுபரஞ் சோதி
உள்ளவர் காணவந் தருளாய்
தேறலின் தெளிவே சிவபெருமானே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த
இன்பமே என்னுடை அன்பே (மணிவாசகர்)

சிவபெருமான் தேனினும் தெளிவானவன். அழிவற்ற பதவிகள் யாவற்றையும் கடந்து விளங்கும் இன்ப வடிவானவன் என்கிறார் மாணிக்கவாசகர்.

தினைத்தனை யுள்ளதோர் பூவினிற்றேன் உண்ணாதே
நினைத்தொறும் காண்டொறும் பேசுந்தொறும் எப்போதும்
அனைத்திலும் புண்ணெக ஆனந்தத் தேன் சொரியுங்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ (திருவாசகம்)

இதன் பொருள்:

"கோத்தும்பீ! தினையளவு தேனுள்ள பூக்களில் தேனை உண்டு நீ வருந்தாதே. நினைக்குந்தோறும், காணுந்தோறும், பேசுந்தோறும்

எப்போதும் எலும்புகள் அனைத்தும் உள்ளே நெக்குருக ஆனந்தமாகிய தேனைச் சொரிந்து கொண்டேயிருக்கும் கூத்தினையுடைய பெருமானிடம் சென்று ஊதுவாயாக" என்பதாகும். மனிதனின் மூல சொரூபம் - இயல்பான தன்மை ஆனந்தமயமானது. அது மனத்தின் செயல்களால் - மனோ விருத்திகளால் மறைக்கப்பட்டிருக்கிறது. மனிதனின் மூலசொரூபத்தை உணர்த்துவது தத்துவம். மூலசொரூபத்தை உணர்ந்து அந்த ஆனந்த நிலையை அடைய உதவுவது தியானப் பயிற்சிகள்.

## மனிதன் (இன்பம்)

மனிதன் இன்ப சொரூபமானவன். இதுவே அவனைப் பற்றிய உண்மை. ஆனந்தம் பிரம்மம். இது பிரம்மத்தைப் பற்றிய உண்மை. இனி, இன்பமும் ஆனந்தமும் ஒன்றேயாம். சொற்கள் இரண்டு. அவைகளின் பொருள் ஒன்று. மனிதன் இன்ப சொரூபம் என்பதற்கு அவனே அத்தாட்சி. அயர்ந்த உறக்கத்தில் அவன் தனது நிஜ சொரூபத்தில் இருக்கிறான். சும்மா இருத்தல் என்னும் நிலை ஆங்குத் தானாக அமைகிறது. மனத்தின் சூதுக்கு அங்கு இடமில்லை. மனிதன் தனது இயல்பான அதாவது யதார்த்த நிலையில் இருக்கிறான். இந்நிலை நனவிலும் நிலைநாட்டப்படும்பொழுது குறிக்கோளை எட்டியவனாகிறான்.

ஐம்பொறிகளின் வாயிலாக வருகிற இன்பங்கள் இடையிடையே தெவிட்டுவதுண்டு. ஆனால் அறிவின் மூலமாக வரும் இன்பம் தெவிட்டுவதில்லை. ஆதலால் கல்வியுடையார் கல்வியினால் வருகின்ற இன்பத்திலேயே கட்டுண்டு கிடக்கின்றனர். 'கல்வி என்னும் பல கடல் பிழைத்தும்' என்றார் மாணிக்க வாசகர். நூல் அறிவினின்று வருகின்ற இன்பம் வேறு. அருள்நிலையிலிருந்து வருகின்ற இன்பம் வேறு. இவ்விரண்டையும் வேறுபடுத்தி அறியப் பெருமுயற்சி வேண்டும். அது விளங்குகின்றபோது நிலையற்ற இன்பத்தைத் தருகின்ற உலகப்பொருள்களை எல்லாம் ஒதுக்கித் தள்ளுவது போன்று ஏட்டுக் கல்வியால் வருகின்ற இன்பத்தையும் ஒதுக்கித் தள்ள வேண்டியது அவசியமாகிறது. அறிவு ஆனந்தமானது. அறிவு அருளானந்தம் போலவே விளங்குவதால் அறிவானந்தத்தை ஒதுக்கித் தள்ளுவது இயலாததாகிவிடுகிறது. ஏட்டுக்கல்வி, ஏட்டுச்சுவை பரஞானத்தோடு சேர்ந்ததன்று. ஆத்ம சாதனத்தின் வழியேதான் பரஞானம் கிட்டும். தியானப்பயிற்சி நல்ல ஆத்ம சாதனமாகும்.

சர்க்கரை இனிக்கிறது என்று பலதடவை சொன்னாலோ எழுதினாலோ இனிப்புச் சுவையை அறிய முடியாது. சர்க்கரை நாவில் படும் போதுதான் இனிப்பை அனுபவிக்க முடியும். பரம்பொருளிடத்தில் இருந்து வருகின்ற பேரானந்தத்தின் நிழல்கள் போன்று ஏட்டுக்கல்வி ஆனந்தம் அமைந்துள்ளது. இவை அனைத்தையும் ஒதுக்கிவிட்டு இறைவனுடைய பேரருளுக்குப் பாத்திரமாகின்றவர்களே பேரானந்தத்தை அனுபவிக்கின்றனர். இனி,மனிதனின் ஐந்து அடுக்குகளால் சூழப்பெற்ற உருவம் பின்வருவதாக விளக்கப்படுகிறது.

(1) அன்னமயகோசம்

(2) பிராணமயகோசம்

(3) மனோமயகோசம்

(4) விஞ்ஞானமயகோசம்

(5) ஆனந்தமயகோசம்

- அன்னமயகோசம்

உணவினால் பராமரிக்கப்படும் பகுதி, பகிர் முக கருமம் (புறச்செயல்கள்) செய்யும் உடம்பு ஆத்ம சாதனத்திற்கும், பிறவற்றிற்கும் அடிப்படையானது (உபாயமானது).

- பிராணமய கோசம்

பிறந்தவுடனே மூச்சுக்காற்றோடு உடலுக்குள் நுழைந்து ஆற்றல் ஓட்ட மண்டலமாகப் பணிபுரிகிறது சக்கர தியானத்தின் மையம்.

- மனோமய கோசம்

மூச்சோடு பின்னிப் பிணைந்தது மனோவேகம், மூச்சுவேகம், மூச்சுவேகம் மனோவேகம், புத்தி, சித்தம், அகங்காரம், ஆசை, சங்கல்பம், விகல்பம் என்பனவற்றிற்குத் தளமாய் அமைந்து மனிதனை ஆட்டுவிப்பது.

- விஞ்ஞான மய கோசம்

மனத்தோடு பொருந்தியும் பொருந்தாமலும் இருவிதமாகச் செயல்படும் அடுக்கு. நல்லதன்பால் செல்லும். வாழ்க்கை வசதிகளைத் தேடும் முயற்சியை உடையது. வளர்ச்சிக்கு

உபயமானது. கல்வி வேள்விகளால் சிறப்படையும் அடுக்கு. (ஆத்ம சாதனத்திற்கு இது அவசியமானது).

ஆனந்தமயகோசம்

முதல் மூன்று கோசங்களும் (அடுக்குகளும்) தூய்மையடைந்த பின் அனுபவத்திற்கு வரும். மனிதனின் மூலநிலை, மூலசொரூபம் ஆனந்தமயமானது.

## II. தியானத்தின் அவசியம் / நோக்கம்

மனிதனின் மூலநிலை அதாவது மூலசொரூபம் ஆனந்தமயமானது. அது மனப்பேயின் செயல்களால் மறைக்கப்பட்டிருக்கிறது. மனிதனின் மூல சொரூபத்தை உணர்த்தி உய்ய வைக்கும் மார்க்கம் தியானப்பயிற்சி.

தொடக்க நிலையில் தியானம் உள்ளத்தையும் உடலையும் சீர்படுத்தும். அவசியம் ஏற்பட்டால் செப்பனிடும். மீண்டும் சீர்படுத்தும். இரண்டிலும் ஓர் அமைதியும் இனிமையும் உண்டாகும். பின்னர்ப் படிப்படியாக மனத்தின் கூத்துகள் குறையத் தொடங்கும். மனத்தின் வலிமை குன்றும். ஒரு நாள் மனம் முற்றிலும் செயலற்று ஒடுங்கிவிடும். (அடக்கப்படுதல் அன்று) மனம் தன்வழியிலேயே செயல் ஒழிந்து நிற்கும். இந்த நிலையே நிஷ்டை என்றும் சகஜ நிஷ்டை என்றும் கூறப்படுகிறது. இந்த நிலையில் காலம், இடம், நிகழ்ச்சிகள் யாவும் பொருளற்றவை ஆகிவிடும். எல்லாக் கருமங்களும் தற்செயலாய் நடக்கும். அடுத்து மனம் மேலும் மேலும் ஒடுங்கித் தன் சொரூபத்தை இழந்து உயிரில் உயிராய் நிற்கும். ஆன்மாவில் நிற்கும். ஆத்ம தரிசனம் நிகழும். இந்நிலையே துரியம், வீடுபேறு, முத்தி, பிரம்மானந்தம், பிரம்ம நிலை, நிர்விகல்பசமாதி எனப் பலவாறு கூறப்படுகிறது. பிரம்மானந்தம் அல்லது பேரின்பம் உள்ளிருந்து அனுபவிக்க வேண்டியது. புற அனுபவம் அன்று. தியானம் இதற்கு உதவும்.

# 8. செயல் தத்துவம்

## (கருமம்புரிதல்)

கல்வி பயில விரும்புகின்றவர்கள் யாவரும் பள்ளிக்கூடம், கல்லூரி போன்ற கல்விக்கூடங்களுக்குச் சென்று பயில வேண்டும். ஆனால் வாழ்நாள் முழுவதும் கல்விக்கூடங்களிலேயே இருக்க முடியாது. கற்க வேண்டியவைகளைக் கற்றான பிறகு வெளியேற வேண்டும். கல்வி பூர்த்தியாகும் முன்பு வெளியேறுவது நல்லதல்ல. உலகவாழ்க்கை என்பதும் பள்ளிக்கூடம் போன்றுதான். பிறந்தவர்கள் அனைவரும் வாழ்ந்து ஆயுளைக் கழிக்க வேண்டிய கடமை இருக்கிறது.

பழம் முற்றும் பழுக்குமிடத்து அது சித்தியாகிவிட்டது என்று கூறுவர். அதற்கு முன்பு அரும்பி, காய்த்து, முதிர்ந்து, கனிகிற செயல்கள் எல்லாம் அதன் கர்மம் ஆகின்றன. மனிதனுடைய வாழ்க்கை இத்தகையது. ஓயாது காய் முதிர்வது போன்று கர்மம் புரிவதின்மூலம் ஞான முதிர்ச்சி அடைகிறான். தக்க தருணமன்றிக் கருமத்தைக் கைவிடுதல் நலம் பயக்காது.

பிரபஞ்சத்திற்கு வந்துள்ள உயிர்களுக்குக் கருமம் இயற்கையானது. உண்பது, உறங்குவது, மூச்சுவிடுவது ஆகிய எல்லாம் கர்மம் என்றே கூறப்படும். இயற்கையில் எதுவும் இயங்காதிருக்க முடியாது. அணுமுதல் அண்டம் வரையில் எல்லாம் தொழில் புரிகின்றன. அதாவது அசைகின்றன. மனிதன் கர்மம் செய்யாமல் இருக்க முடியாது. கர்மம் செய்துதான் ஞானம் பெறமுடியும்.

உண்பது, உடுப்பது, நீராடுவது போன்றவை அன்றடாக் கருமங்கள் ஆகும். உயிர் வாழ்வதற்கு இவை முற்றிலும் அவசியமாகிறது. செய்யாவிட்டால் தீங்கு உண்டாகும். தீங்கு பாவம் என்றும் நன்மை புண்ணியம் என்று கூறப்படுவது வழக்கம். நாள்தோறும் செய்ய வேண்டிய அவசியமான கருமங்களைச் செய்யாவிட்டால் பாவம் உண்டாகும். உணவு அருந்துவது அவசியமான கருமம் ஆகும். உண்ணாவிட்டால் உடல்

நலியும். உடல் நலிதல் தீமையாகும். பாவமாகும். குறித்த இடத்துக்குப் போக வேண்டும் என்றால், வாகனம் வேண்டும். அதுபோல வாழ்க்கையின் குறிக்கோளை, இலட்சியத்தை அடைவதற்கு உடல் வாழ்க்கை முற்றிலும் இன்றியமையாததாகிறது. உடலைக் காப்பாற்றி வைப்பதே பெரும்பயணம் போவதற்கு ஒப்பாகும். கருமத்தால் அன்றி இது நிறைவேறாது.

மேம்பட வாழ விரும்புபவர் ஓயாது கருமம் அதாவது செயல் செய்தே ஆக வேண்டும். நித்திய கர்மம் மட்டும் போதுமானதல்ல. ஒருவன் தான் அடைந்திருக்கின்றதைக் காப்பாற்றி வைப்பதற்கு மட்டும் நித்திய கருமம் பயன்படும். மேலே போக, மேம்பட அது மட்டுமே போதாது.

குழந்தையாயிருக்கும்போது தவழ்தல் நல்ல கருமமாகும். அதோடு நின்றுவிட்டால் வாழ்க்கையில் முன்னேற்றம் ஏற்படாது. நிற்கவும் நடக்கவும் ஓடவும் ஆகிய புதியனவற்றில் குழந்தை பயில வேண்டும். அதுபோல மனிதன் வாழ்க்கையில் முன்னேறுவதற்குப் புதிய புதிய கர்மங்களைச் செய்கிறான். அதனால் கருமத்தில் கட்டுண்டவன் ஆகிறான். கருமபந்தம் மனிதனுக்கு உகந்தது அல்ல. கர்மம் செய்து கொண்டே கருமபந்தத்தில் கட்டுப்படாமல் இருக்கும் வித்தையைக் கற்றுக்கொள்ள வேண்டும்.

கர்மத்தில் மூன்று நிலைகள் அல்லது மூன்று இயல்புகள் இருக்கின்றன. அவை பறித்து வாழ்தல் (வென்று வாழ்தல்), வகுத்து வாழ்தல், பங்கிட்டு வாழ்தல் (படைத்து வாழ்தல்) என்பனவாம். கடைநிலையில் உள்ள உயிர்கள் பறித்துப் புசித்து உயிர் வாழ்கின்றன. இந்நிலையில் வாழ்க்கை என்பது ஓர் ஓயாத போராட்டம். வலிமை உடையது முன்னணிக்கு வருகிறது. வலிவற்றது பின்னணியில் வருந்தி வாழ்கிறது. அல்லது அறவே அழிக்கப்படுகிறது.

வென்று வாழ்வதை (பறித்து வாழ்தலை)க் கோட்பாடாகக் கொண்டு பிழைத்தல் கடைத்தரமானது. பறித்து வாழ்பவர் தங்களுக்குத் தருகிற மதிப்பை மற்ற உயிர்களுக்குத் தரமாட்டார்கள். பிறரை அடக்கி ஒடுக்குதலிலேயே அதிக நாட்டம் கொண்டிருப்பவர் தன்னலம் மிகுந்து, தன்னடக்க மில்லாமல் சச்சரவுகளில் ஈடுபடுவர். போராட்டதில் குறியாய் இருப்பார். பிறர் துன்பப்படுதலைக் கண்டு, வருத்தப்படமாட்டார். அவர்களும் துன்பத்தில் ஆழ்வர். ஆயினும் அதை உணரும் பக்குவம் இல்லாதிருப்பர். உலகில் இதுநாள்வரையிலும் நடைபெற்ற போர்கள் எல்லாம்

விலங்குத்தன்மையினால் விளைந்தவை. "தன்னை வியந்தான் விரைந்து கெடுவான்" என்பது முன்னோர் மறைமொழி.

இடைத்தர உயிர்கள் பறித்தல் இன்றி வாழ்கின்றன. பங்கிட்டு வாழும் பண்பு அதிகரித்துக் காணப்படுகிறது. வென்று வாழ்தலை விடப் பன்மடங்கு மேலானது வகுத்து வாழும் பண்பு. இப்படித் தரத்தில் ஓர் உயிர் மற்றோர் உயிருக்குத் துணைபுரிந்து வாழ்கிறது. மானுட சமூக அமைப்பு இதை, இப்பண்பினை, இப்பாங்கினை அடிப்படையாகக் கொண்டது. இப்படி வாழ்வதே சமுதாய வாழ்வாகும். இவ்வாழ்வில் பொதுநலத்திற்குத் தன்னலம் இடம் கொடுத்தாக வேண்டும். தன்னலத்திலிருந்து பொது நலம் பூக்கும் வாய்ப்புடைய வாழ்க்கை, சமுதாயத்தின் சட்ட திட்டங்களை வரையறைகளை மீறுபவர் மீது கட்டுப்பாடுகள் விதிக்கப்படுகின்றன. தக்க நடவடிக்கை எடுக்கப்படுகிறது. முறையான கட்டமைப்பின் மூலம் நன்மை நிலைநாட்டப்படுகிறது. நாகரிகம் மிகுந்த சமுதாயங்களில் நல்ல ஒழுக்கம் பேணப்படுகிறது. அன்புடனும் ஆதரவுடனும் மக்களின் சமுதாய வாழ்வு இனிதே நடைபெறுகிறது. சமுதாய வாழ்வுதான் மனிதன் மேலும் மேலும் உயர்ந்து செல்ல உதவும் ஏணியாகும். இப்பூவுலக வாழ்வு சுவர்க்க வாழ்வாகப் பரிணமிப்பது சமுதாயத்தில்தான் 'வையத்து வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்' என்பது வள்ளுவர் மறை.

தலையாய வாழ்க்கை இதனினும் மேலானது. இதனினும் இனிமையானது. இன்பம் நிறைந்தது. அது வழங்குதலை, பிறருக்குப் படைத்து வாழ்தலை மையமாகக் கொண்டது. ஒரு வகையான வேள்வி. தனக்கென்று தேடாது. தன்னிடத்திருப்பதைப் பிறருக்கென்றே பண்புடன் கொடுத்தும், படைத்தும் வழங்கியும் வாழ்வது. வகையறிந்து அன்பு மேலீட்டால் கொடுப்பதால் கொடுப்பவனுக்கும் கொண்டவனுக்கும் ஒருசேர இன்பம் உண்டாகிறது. கொடுப்பதாலோ கொள்வதாலோ குறை ஒன்றும் வருவதில்லை. இறைக்க, இறைக்கக் கேணி நீர் ஊறுவது போன்று, எடுத்து முறையாக வழங்க வழங்க ஆற்றலும் ஆக்கமும் உயிரின் கண் உயர்கின்றன. தலை சிறந்த இச்செயலுக்கு வேள்வி என்பது பெயர். இது வாழ்க்கையின் மேலான கொள்கையும் கடைப்பிடித்தலும் ஆகும். கல்வியை மற்றவர்களுக்குப் புகட்டுகிற அளவு ஒருவன்தானே கல்விமான் ஆகிறான்.

ஞானத்தை வழங்குபவனுக்கு ஞானம் வளர்கிறது. செல்வத்தை அப்படியே பொது நன்மைக்கு வாரி வழங்கும்போது அது மேன்மேலும் வளர்கிறது. பொது நன்மையில் தனி நன்மை எப்போதும் உள்ளிருப்பாக விளங்கும்.

வாழ்க்கையையே வழங்குதலாகக் கொண்ட ஒரு குடும்பச் சித்திரம் ஒன்று புறப்பாடலில் சொல்லோவியமாக்கப்பட்டுள்ளது. படித்தும் உணர்ந்தும் இன்புறத் தக்கது. பெருஞ்சித்திரனார் என்னும் புலவர் குமண வள்ளலிடம் பெரும்பொருளைப் பரிசிலாகப் பெற்று வந்து தன் மனையாளிடம் கூறியது:

நின் நயந்து உறைநர்க்கும் நீ நயந்து உறைநர்க்கும்
பன்மாண் கற்பின் நின் கிளை முதலோர்க்கும்
கடும்பின் கடும்பசி தீர யாழ நின்
நெடுங்குறி எதிர்ப்பை நல்கியோர்க்கும்
இன்னோர்க்கும் என்னாது என்னோடும் சூழாது
வல்லாங்கு வாழ்தும் என்னாது நீயும்
எல்லோர்க்கும் கொடுமதி மனை கிழவோயே
பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்
திருந்துவேல் குமணன் நல்கிய வளனே (புறம். 163)

"என் மனைக்கு உரியவளே! உன்னை விரும்பும் பெண்டிருக்கும், நீ விரும்பும் பெண்டிருக்கும், உன் உறவினரில் கற்புடைய மூத்த பெண்டிருக்கும், நம் குடும்பத்தில் பசி நீங்க நெடுநாளும் கடன் தந்து உதவியவர்களுக்கும் மற்றும் இன்னார், இனியர் என்று கருதாமலும், என்னிடம் கேட்க வேண்டுமே என்று கவலைப்படாமலும், பல மாதங்களுக்கு வளமாக வாழலாம் என்று நினைக்காமலும் முதிர மலைக்குத் தலைவனான குமணவள்ளல் நல்கிய இப்பெருஞ்செல்வத்தை நீ வழங்குவாயாக" என்பது இதன் பொருள்.

யாசித்து வாழும் புலவரிடம் காணப்பட்ட நேசித்து வாழும் பாங்கு எண்ணி எண்ணிப் போற்றத் தகுந்ததாகும். வாழ்வதை விட வாழ்வித்தலில் கொண்ட நாட்டம் பின்பற்றத் தக்கது. இந்த உலகம் எந்தக் காரணத்தால் இன்றுவரை வாழ்ந்து வருகிறது? ஈராயிரம் ஆண்டுகட்கு முன் தொடுக்கப்பட்ட வினா. கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி என்ற மன்னன் இவ்வினாவிற்கு விடை தருகிறான்.

உண்டால் அம்ம இவ்வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவதாயினும் இனிது எனத்
தமியர் உண்டலும் இலரே முனிவிலர்
துஞ்சலும் இலர் பிறர் அஞ்சுவது அஞ்சிப்
புகழ் எனின் உயிருங்கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர் அயர்விலர்
அன்னமாட்சி அனையராகித்
தமக்கென முயலா நோன்தாள்
பிறர்க்கென முயலுநர் உண்மையானே (புறம். 182)

"இந்திரனின் அமிழ்தமே கிடைப்பதாயினும் அது தன் உயிரை வளர்க்கும் என்று கருதித் தாமே தனித்து உண்ணமாட்டார்; சினங்கொள்ளார்; பிறர் அஞ்சுவது தாமும் அஞ்சுவர்; வேலையின்றிச் சோம்பியிருக்க மாட்டார்; புகழ் எனின் உயிரையும் தியாகம் செய்வர்; அயர்வு அறியாதவர்; பழிவரும் எனின் உலகம் முழுவதும் பரிசாகக் கிடைத்தாலும் ஏற்றுக்கொள்ளமாட்டார். அத்தகைய மாட்சிமைப் பட்டவராக வாழ்பவர் உயர்ந்தவர். அவர் தமக்கு என எதுவும் செய்து கொள்ளாமல் பிறருக்கு என உழைக்கும் உண்மையான இயல்பும் உடையவராதலே அவர் தகுதிக்குக் காரணமாகும். இத்தகைய உயர்ந்த பெருமக்கள் காரணமாக இந்த உலகம் வாழ்ந்து வருகிறது" என்பது இப்பாடலின் கருத்து.

வழங்கி வாழும் பண்பு, வாழ்வித்து உயரும் பாங்கு மனிதனிடத்து மட்டுமல்லாது மற்ற உயிர்களிடத்தும் விளங்குவதை அறிவது நலம் பயக்கும். தாவர உலகில் வாழையும் தென்னையும், தாம் ஏற்பதை விட அதிகமாகத் தந்து பயன்படுகின்றன. எந்த மரமும் தனக்கென்று எதையும் விளைவிப்பதில்லை. மாங்கனியை மனித குலம்தான் உண்கிறது. மாமரம் உண்பதில்லை. நெல்லும் கரும்பும் மனிதனை வளமாக்குபவை அல்லவா? ஆகையால் அவற்றின் வாழ்வு வேள்வியாகிறது. பசுதான் உண்பதையெல்லாம் மக்களுக்குப் பயன்படும் பொருள்களாக மாற்றித் தருகிறது. அதன் வாழ்வு வேள்விமயமானது. எனவே பசு தெய்வமாகக் கொண்டாடப்படுகிறது.

மக்களுக்குள் உயர்ந்தோர் மேலோர். அவர்கள் மண்ணுயிர் நலனுக்கு என்றே வாழ்கின்றனர். வடலூர் வள்ளல், புத்தர் பிரான், இயேசுநாதர், நபிகள் நாயகம் போன்றவர்கள் மண்ணுலகில் வாழ்ந்த

மேலோர். மண்ணுலகத்தை மாண்புறுத்தியவர்கள், அவர்கள் அனைவரும் மக்கள் சேவையை மகேசன் சேவையாக உணர்ந்து வினையாற்றியவர்கள். கருமம் புரிந்து வாழ்ந்தவர்கள். நரர்களைப் பேணுவதே நாராயண வழிபாடாகிறது. சீவன்களை உய்விப்பதே சிவபூசையாகிறது. தமக்கென வாழாது பிறர்க்கென வாழ்பவர்களே வேள்வி மூர்த்திகளாகின்றனர். அவர்களின் எண்ணிக்கை உயரும் அளவிற்கு உலகம் நலன் காண்கின்றது.

வேள்வி என்னும் கருமம் பலப்பல வடிவெடுத்திருக்கிறது. மனிதனது உடல் வாழ்க்கையை உறுதிப்படுத்துவதற்கு ஒரு வழியைக் காண்பித்தால் அது வேள்வியாகிறது. அதாவது நற்செயலாகிறது. நேர்மையான வழியில் மனிதனை நல்ல உழைப்பாளியாக்கினால் அது வேள்வியாகிறது. நல்வழியில் ஈட்டிய செல்வத்தை நல்லார் எல்லார்க்கும் பயன்படுத்தினால் அச்செயல் வேள்வியாகிறது. உணவு சமைத்துத் தெய்வத்தின் பெயரால் அதனைப் பலரோடு பங்கிட்டுக் கொள்ளும்போது அது வேள்வியாகிறது. கல்வியையும் நல்லறிவையும் ஞானத்தையும் பொதுவுடமையாக்கும்போது அது வேள்வியாகிறது. தெய்வ வழிபாட்டில் மக்களை ஈடுபடுத்தும் நிகழ்ச்சி எதுவும் வேள்வியாகிறது. வாழ்வாங்கு வாழ்தல் வாயிலாக மனிதன் தன்னைத் தெய்வத்துக்கு ஒப்படைப்பானாகில் அவன் புரிகின்ற வேள்வி முற்றுப்பெறுகிறது.

விறகு தன்னைத் தீயிடம் கொடுத்து விடுவதால் தானே தீயாகிறது. அங்ஙனம் வாழ்க்கை முழுவதையும் வேள்வியாக்கி, தன்னைத் தெய்வம் நீங்காது நின்று அருள் பொழியும். வழங்கி வாழ்தல் இவ்வாறு தெய்வீகமாகிறது. வேள்வியாகக் கருதிச் செய்யும் கருமங்கள் மனிதனைப் பந்தப்படுத்த மாட்டா. வேள்விச் செயல்களை, யாக கருமங்களை வேண்டிய அளவு விரிக்கலாம். அதனால் எப்போதும் எங்கும் சிறப்பே உண்டாகிறது.

உலகில் பிறப்பதும் பிறந்து உயிர்வாழ்வதும் துன்பம் என்று சிலர் கருதுகின்றனர். இன்னும் சிலர் அதை இன்பமாக எண்ணி இறுதியில் ஏமாற்றமடைந்து வருந்தித் துன்பமடைகின்றனர். போட்டி போடுதலையே வாழ்க்கைத் திட்டமாகக் கொண்டவர்கள் ஏமாற்றமடைவது தவிர்க்க முடியாதது. ஒரே ஒரு வழியில்தான் அதற்கு விலக்கு உண்டு. வாழ்க்கையில் அமைந்த செயல்கள் அனைத்தையும் வேள்வியாகச் செய்கிறவர்களுக்குத் துவக்கத்திலும் துன்பமில்லை, இடையிலும் துன்பமில்லை. இறுதியிலும் துன்பமில்லை. 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை'என்றார் அப்பர் பெருமான். இவர் படைப்பின் உட்கருத்தை அறியும் பேறு பெற்றவர்.

தங்களுக்கென்று தேடுபவர்க்குச் செல்வம் சேர்ந்து பிறகு தங்களை விட்டுச் சென்று விடுகிறது. ஒன்றையும் எதிர்பாராது கொடுத்துக்கொண்டே இருப்பவர்க்குக் கொடைக்கு வேண்டிய செல்வம் தானே வந்தமைகிறது. அந்த மனப்பக்குவமே மணிமேகலையிடம் இருந்த அட்சயபாத்திரம் கொடுப்பதால் துன்பம் இல்லை. இதுதான் படைப்பின் மேலான திட்டம் என்பதை அனுஷ்டித்துப் பார்ப்பவர் அறியலாம்.

பொதுநலத்தையே வாழ்வாகக் கொண்டவர்களுக்கு எல்லாம் தாமே வந்தடையும். தடையின்றிப்பொருள் வந்து கொண்டேயிருக்கும். அவர்களுடைய மனதும் விரிவடைகிறது. மனது விரிவடைவது ஒப்பற்ற பேறாகும். மேலோர் என்பவர் தன்னலமற்றவராயிருப்பர். அவர்களது நல்ல முயற்சிகளில் துணையாய் நிற்பது யாகமாகிறது. கைம்மாறு கருதாது சான்றோர்களுக்குத் துணைபுரிகின்ற அளவு சான்றோர் அவர்களுக்கு உதவி புரிவர். சமூகத் தொண்டிலேயே மூழ்கி இருப்பவர்களுக்குத் தேவையானவற்றை எல்லாம் சமூகத்தார் வாரி வழங்குவதைக் கண்கூடாகக் காணலாம். ஒரு மனிதன் உலக நன்மைக்காகவே உயிர்வாழும் போது, உலகம் முழுவதும் அவனது நன்மையில் ஆர்வம் காட்டுகிறது. தனது பொறுப்பு என உணருகிறது. தெய்வத்தை மனிதன் எப்போதும் முழுமனதோடு வழிபட்டால், அத்தெய்வத்தின் அருளுக்குப் பாத்திரமாகும் பேறு கிட்டுகிறது. பிறர்க்கு மனிதன் எதை எடுத்து வழங்குகின்றானோ அதையே இயற்கையானது பலமடங்கு ஆக்கித் திருப்பித் தருகிறது. இப்படி ஒருவரையொருவர் பேணுதல் என்ற வேள்வியால் எப்போதும் பெரிய நன்மையே உண்டாகிறது.

உலகில் பிறந்தது முதல் மண்ணில் மறையும் வரை ஒருவன் அனுபவிக்கும் நன்மைகள் யாவும் பிறர் செய்த நற்செயல்களின் பயனாகும். குழந்தை பேணி வளர்க்கப்படுகிறது. அது பெற்றவர் செய்த வேள்வியின் பயன். இளைஞன் கல்வி பெறுகிறான். கல்விக்கூடத்தை நிறுவியவரின் யாக பலன் அது. உண்ணும் உணவும் உடுத்தும் உடையும் இன்னும் விதவிதமான இன்ப நுகர்ச்சிகளுக்குண்டான பொருள்களும் மனிதனுக்குக் கிடைக்கின்றன. இவையாவும் மற்றவர் உழைப்பின் பயனாகும்.

ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய கருமங்களும் கருமங்களால் இயற்றப்பட்ட வாழ்க்கையும் உலகுக்கு எப்படிப் பயன்படுகின்றன என்று எண்ணிப்பார்க்க வேண்டும். ஒரு மனிதனால் உலகம் எத்துணை அளவு

நன்மை அடைந்திருக்கிறதோ அவ்வளவு அரும்பெரும் செயல்கள் அவனிடத்திருந்து பிறந்தவைகளாகின்றன; உருப்பெற்றவைகளாகின்றன. தான் ஆற்றுகின்ற பணியைப் பிறருக்குப் பயன்படும்படி மேம்படுத்தும் அளவிற்கு அது வேள்வியாகப் பரிணமிக்கிறது. மனிதன் தான் இந்த உலகிடமிருந்து பெற்று அனுபவிப்பதை விட அதிகமாக உலகுக்கு எடுத்து வழங்கவேண்டும். பெற்று அனுபவிப்பது அதிகமாக இருந்து வழங்குவது குறைவாக இருந்துவிட்டால் உலகத்துக்கு அவன் கடன் பட்டவன் ஆகிறான். உலகுக்கு ஒன்றையும் கொடுக்காமல் உலகத்திலிருந்து எல்லாம் தனக்காகவென்று ஏற்றுக்கொள்ளுவதிலேயே கண்ணுங்கருத்துமாக இருப்பவன் திருடன் போன்றவனாகிறான். இத்தகைய இழிநிலை அறிவுடையவர்களுக்குப் பொருந்தாது.

கருமமோ வினையோ தன்னளவில் புண்ணியமும் அல்ல; பாபமும் அல்ல. மனப்பாங்கிற்கு ஏற்ப, எண்ணத்திற்கு ஏற்ப அது புண்ணியம் அல்லது பாவம் ஆகிறது. தீயாரைத் தகர்த்து நல்லாரைப் பேணுதற்கென்று புரியும் கொடிய போரும் புண்ணியச் செயலாகும். தேவாராதனை எனினும் தன்னலத்திற்கு மட்டுமே எனின் பாவமாகும். எந்த வினையில் ஈடுபட்டாலும் அதன் வாயிலாக உலக நன்மையும் இறைவனது பெருமையும் வெளிப்பட வேண்டும். இவ்விரண்டும் முன்னணியில் நிற்க வேண்டும். தான் தனது என்னும் செருக்கு பின்னணிக்குப் போகும் அளவு செய்யப்படும் செயல் புண்ணியத்தின் பலனை அடையும்.

சமைத்த உணவை மற்றவர்களுக்கு முதலில் வழங்கிய பின் எஞ்சியதை உண்பவன் உயர்ந்த மனிதனாவான். தன்னிடத்து வந்த விருந்தினரை வீட்டின் புறத்தே இருக்கச் செய்து விட்டுத் தான் மட்டும் தனித்து உண்ணுதல் அமிழ்தமாக இருந்தாலும் விரும்பத்தக்கதன்று என்று வள்ளுவர் கூறுகிறார்.

விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற்று அன்று (குறள் 82)

பிறருக்கு உணவிட்ட பின் எஞ்சியதை உண்பவன் நிலம் விதையில்லாமலே விளையும் என்பார் வள்ளுவர்.

வித்தும் இடல் வேண்டும் கொல்லோ? விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம் (குறள் 85)

பிறர் பசியாற்றுதல் தலைசிறந்த அறச்செயலாகும். பெரிய வேள்வியாகும். புண்ணியம் தரும் செயலாகும். மற்றவர்களோடு பங்கிட்டு உண்ண வேண்டும் என்ற எண்ணமில்லாமல் தன் வயிற்றை அடைத்துக் கொள்வதற்கு மட்டுமே உணவு சமைப்பவன் பாவ மூட்டையைச் சுமப்பவனாகிறான். பெற்ற செல்வத்தைப் பலருக்கும் பங்கிட்டுக் கொடுத்துப் பலரையும் பேணி வளர்க்காமல், தான் மட்டும் வாழ்ந்தால் போதும் என்பவன் கொலை செய்தவன் ஆவான். இதை உணர்த்தவே வள்ளுவர் கொல்லாமை என்னும் அதிகாரத்தில் பகுத்துண்டு வாழும் நெறியை வைத்தார். "பசித்தவர்களுக்குப் பகுத்துக் கொடுத்துத் தானும் உண்டு பல உயிர்களையும் காப்பாற்றுதல் நூல் வல்லார் சொல்லி வைத்த அறங்கள் பலவற்றுள்ளும் முதன்மையான அறமாகும் என்பார் வள்ளுவர். பகுத்துண்டு வாழாதவன் கொலை புரிந்தவனுக்குண்டான தண்டனைக்குரியவன்.

முறைப்படி செய்யும் வினை, செயல் போன்றவை யக்ஞமாகின்றன. அந்த யக்ஞத்தில் செயலுக்குண்டான பலன் சூக்கும வடிவெடுக்கின்றன. வைதீக மொழியில் சூக்கும வடிவம் 'அபூர்வம்' ஆகும். இரண்டொரு உதாரணங்களால் இதை அறிந்து கொள்ளலாம். கடலில் உள்ள நீர் ஆவியாகிறது. அந்த ஆவி கண்ணுக்குத் தெரிவதில்லை. பிறகு மழையாக மாறிப் பொழிகின்றது. குப்பை, செத்தைகளை வைத்துக் கொளுத்தினால் அவை எரிந்து கார்பன்-டை- ஆக்சைடு வெளியேறுகிறது. அவ்வாயு கண்களுக்குப் புலனாகாது. அந்நிலையில் அது அபூர்வம். செடி, கொடிகள் அவ்வாயுவை இலைகள் மூலமாக உண்டு வளர்கின்றன. அதே பாங்கில் யாகம் மந்திர சக்தி அல்லது மனோ தத்துவத்தோடு கூடியிருக்கும் போது அது அபூர்வமாகிறது. உச்சரிக்கிற சொல் சக்தி படைத்த மந்திரமாகாது. அந்த வார்த்தைக்கு அடிப்படையாயிருக்கும் உணர்ச்சி மந்திர சக்தியாகிறது. அறச்செயல் புரிந்து வருபவர் ஆன்றோரும் சான்றோரும் ஆவர். அவரே நல்லாரும் ஆவர். அவர்களே மாசில்லாத மனம் படைத்தவர்கள். மழை வேண்டுமென்று அவர்கள் விரும்பினால் மழை பெய்யும். வேள்வியினால் மழை வருகிறது என்னும் கருத்தும் இவ்வாறே. அறத்துப்பாலுக்கு முகப்பில் வான்சிறப்பை வள்ளுவர் வைத்ததன் உட்கருத்து இதுவே. முறையாக மழை பெய்யும்போது அதன் காரணமாக உணவு விளைகிறது. உணவிலிருந்து உயிர்கள் தோன்றுவதும் வாழ்வதும் வெளிப்படை.

தோன்றியுள்ள அனைத்தும் இயற்கையின் அம்சங்களே; கூறுபாடுகளே ஆகும். எனவே இயற்கை அன்னையை எங்கும் நிறைபொருள் எனலாம். இயற்கை வித்யாசாகரம் அல்லது அறிவுக் கடல். உலகத்தின் மிகப்பெரிய குரு அல்லது ஆசிரியர் இயற்கையே என்பார் ஆங்கிலக் கவிஞர் வோர்ட்ஸ்வொர்த். அனைத்தையும் அது விளக்கம் செய்வதால், எங்கும் நிறைபொருள் என்று கூறப்படுகிறது. இயற்கையை வேதம் என்று கூறுவர். பிரபஞ்சம் முழுவதும் கர்மமயமாக இருப்பதால் கர்மம் இயற்கையின் சேய் என்று கூறலாம். இனி, இந்தக் கருமத்தைச் சிறந்த முறையில் செய்யும்போது இது வேள்வி என்று போற்றப்படுகிறது. வாழ்க்கை என்ற கர்மத்தைப் பண்புடன் முறையாகச் செய்தால் அது வேள்வியாகிறது. நாட்டிலுள்ள மக்கள் அனைவரும் சட்டத்திற்குட்பட்டு நடந்தால் ஆட்சிமுறை சிறப்படைகிறது. அங்ஙனம் உயிர்கள் எல்லாம் நற்செயல்களாகிய யக்ஞம் செய்தால் தொகைவினை சொரூபமாகவுள்ள இயற்கை சிறப்புற்று விளங்குகிறது. உயிர்கள் பலன் கருதிச் செய்யும் கருமத்தால், வினையால், வேள்வியால் வாழ்க்கையில் முன்னேற்றம் காணுகின்றனர். வளம் பெறுகின்றனர். பலனில் கருத்தூன்றாமல் பலனை எதிர்பாராமல் செய்தால் வளமான வாழ்க்கையோடு பெரும்பேறு ஆகிய முக்தியையும் அடைகின்றனர். பலன் எதிர்பார்த்தோ, பலன் கருதாமலோ கருமம் என்னும் யக்ஞம் செய்கின்ற அளவு இயற்கை தெய்வ சொரூபமாக மிளிரத் தொடங்குகிறது. நல்வினையை நல்லெண்ணத்துடன் ஆற்றுங்கால் இந்தப் பூலோகம் சொர்க்கலோகமாக மாறிவிடுகிறது. இயற்கையின் பெருந்திட்டமும் இதுவே. அவ்வை மூதாட்டி,

எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே!

என்று கூறியுள்ளதும் கருதத்தக்கதாகும். (ஆடவர் - குடிமக்கள்)

மதிப்புக் குறைந்த பண்டங்களை, பொருள்களைப் பண்படுத்தி மதிப்புள்ள பொருள்களாக மாற்றித் தருவது தொழிற்சாலையின் பணி மற்றும் நோக்கம் ஆகும். அங்ஙனமே தோற்றத்திற்கு வந்துள்ள உயிர்களை ஓம்பி மேம்படுத்துவதற்கு உறுதுணையாய் இருப்பது இயற்கைச் சக்கரம். பாடம் படித்து முன்னேற்றம் அடையாவிட்டால் மாணவன் ஒருவன் பள்ளிக்கூடம் சென்று வந்திருந்தாலும் பள்ளிக்கூடத்துக்குப் போகாதவன் ஆகிறான். பள்ளியில் தூங்கியவன் கல்வி இழந்தான். ஓர் ஊருக்கு ஒரு

வேலையின் நிமித்தமாகப் போனவர் அந்த வேலையைக் கவனிக்காமல், செய்யாமல் திரும்பினால் ஊருக்குப் போயும் போகாதவராகிறார். இப்பிரபஞ்சத்தில் மக்கள் தோன்றி வாழ்வது ஐம்புல இன்பங்களில் ஊறித் திளைப்பதற்கு மட்டுமன்று. ஐம்புலவேடர்களால் துரத்தப்பட்டு வாழ்வது வாழ்வு ஆகாது. பிரபஞ்சச் சுழற்சியில் கலந்துகொண்டு, நற்கருமங்களைச் செய்து வேள்வியாக்கி இயற்கை நடைமுறையை இனிமையாக்கித் தம் வாழ்க்கையைப் பண்படுத்துவதற்கென்றே மக்கள் இங்குப் பிறப்பெடுத்துள்ளனர். அப்பெருநோக்கத்தைப் புறக்கணித்துவிட்டு, சிற்றறிவு உயிர்கள் போன்று சிற்றின்ப வாழ்க்கையில் உழல்பவர் பிறந்தும் பிறவாதவரே.

"பிறந்தவர் நற்கருமங்கள் புரிந்து வையகத்தை மேம்படுத்தி, புகழ் உண்டாகுமாறு வாழ வேண்டும். அங்ஙனம் வாழ்ந்து புகழ் பெற முயலாதவர் மக்களாகப் பிறப்பதினும் பிறாவதிருத்தலே நல்லது" என்பார் வள்ளுவப் பெருந்தகை.

> தோன்றின் புகழோடு தோன்றுக அஃதிலார்
> தோன்றலின் தோன்றாமை நன்று (குறள் 236)

மனத்தில் ஓயாது கருமம் நடந்து கொண்டிருக்கிறது. மனம் உலகப் பொருள்களை ஐம்பொறிப் புலன்கள் வாயிலாகப் பற்றுகிறது. அதனால் மனத்தின் கர்மம் அதிகரிக்கிறது. ஐம்பொறிகளுக்கும் சாட்சியாக விளங்கும் ஆத்மாவைப் பற்றுங்கால் அதற்கு நிலைத்த இன்பமும் திருப்தியும் உண்டாகின்றன. நதியானது கடலை அடையும் வரை ஓடுதல் என்ற செயல் - கருமம் நதிக்கு இருக்கிறது. கடலில் கலந்த பிறகு அதற்கு எவ்விதக் கருமமும் இல்லை. ஆத்மாவைச் சார்ந்து ஆத்மாவில் கரைவது ஒப்பற்ற கருமமாகிறது. எல்லா உயிர்களும் அறிந்தோ அறியாமலோ இதையே குறிக்கோளாகக் கொண்டுள்ளன. ஆத்மாவில் ஒடுங்கிவிடும் மனம் செயல்படுவதில்லை.

ஆன்மாவில் இன்புற்று, ஆன்மாவில் திருப்தி அடைந்து, ஆத்மாவில் மகிழ்ந்திருப்பவனுக்கு வினையாற்றும் கடமை இல்லை. ஆனால் இந்த நிலையை அடைவது எளிதல்ல. ஒழுங்கான பயிற்சியின் மூலமே அடையமுடியும். ஓயாது இருதயம் அடித்துக்கொண்டிருப்பதால் உடல் வாழ்க்கை நன்கு நடைபெறுகிறது. ஆனால் இருதயம் அடிப்பதில் மனிதன் கருத்துச் செலுத்துவதில்லை. அதுபோல ஒருவன் தன்

செயல்களைப் பற்றற்றுச் செய்ய வேண்டும். பற்றுதலும் எதிர்பார்ப்பும் குறையும்போது வேலைகளுக்கிடையே ஒருவித மனஅமைதி உண்டாவதை உணராலம். 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்றார் ஒரு சிவனடியார். கடமையை - தனக்குரிய கர்மத்தை ஆற்றாமல் மன அமைதி கிட்டாது. சலனமற்ற அமைதியான மனம் புனிதமாகிறது. ஆத்ம சொரூபத்தை அறிதலும் அத்தகைய மனதுக்கு எளிதாகிறது.

ஞானியரும் கர்மம் செய்ய வேண்டிய அவசியம் இருக்கிறது. முற்றிலும் துறந்துவிட்டேன் என்று சொல்பவரும் ஏதேனும் ஒரு வகையில் கர்மம் செய்தாக வேண்டும். அவர்கள் கருமம் செய்தலும் உலகத்தவர் கர்மம் செய்தலும் பண்பில் வேறானவை. பயன் தருவதில் வேறானவை. ஞானியர் வினையாற்றுதலில் இன்னொரு சிறப்புண்டு. ஞானக் கண்ணுடையவர்கள் கர்மத்தைத் தவறுதலின்றிச் செய்யவல்லவர் ஆவர். கர்மம் செய்தே முன்னேற்றம் அடைய வேண்டிய உலக மக்களை நல்வழியில் அழைத்துச் செல்ல அவர்களால் முடியும். எனவே அவர்களும் கர்மம் செய்வது தேவையாகிறது.

நல்லொழுக்க நெறியில் நின்று தன் கர்மங்களைச் செவ்வனே ஆற்றுபவன் மேலான மனிதனாகப் போற்றப்படுகிறான். மக்கள் அவனை மாதிரி மனிதனாக, அவன் செய்வதை முன் மாதிரியாக ஏற்றுக்கொள்கின்றனர். அவன் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் அவன் பொறுப்பு அதிகமாகிவிடுகிறது. உடலை விட்டு உறுப்பு ஒன்றை எப்படிப் பிரிக்க முடியாதோ அப்படியே சமூகத்தை விட்டு மனிதன் பிரியமுடியாது. மனிதன் ஒரு சமுதாய விலங்கு. மனிதன் சமுதாயத்தின் இன்றியமையாத உறுப்பானவன். அவனுடைய எண்ணங்களும் செயல்களும் நேரடியாகவோ மறைமுகமாகவோ சமூகத்தைப் பாதிக்க வல்லவைகளாகும். ஆதலால்தான் ஒவ்வொரு மனிதனுடைய செயலும் நல்லதாக இருக்க வேண்டும். பிறருக்கு எடுத்துக்காட்டாக அமையவேண்டும். நற்செயல் புரிவதை ஆண்டவன் கட்டளையாகக் கருத வேண்டும்.

நன்மைகளையே செய்தல், ஓயாது உழைத்தல் முதலிய நல்வழிகளில் பெரியவர்களைப் பின்பற்றி நடக்க வேண்டும். அப்படி நடப்பவர்கள் உலகில் மிகவும் குறைவாக இருக்கின்றனர். 'நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை' என்றார் ஒரு மூதாட்டி. ஒருசிலராவது நன்முயற்சி உடையவர்களாக இருப்பதால்தான்

உலகம் நடைபெறுகிறது. முயற்சியின்றி இருத்தல் சோம்பித்திரிதல் முதலிய பண்புகள் மனிதனை மற்றவர்கட்குச் சுமையாக்கிவிடும். சோம்பித் திரிபவன் 'மண்ணுக்குப் பாரம்' என்றார் முன்னோர் ஒருவர்.

கல், சுவர் போன்றவை எத்தொழிலும் செய்வதில்லை. அவை உயிரற்றவை. தொழிலில் ஈடுபடாமல் இருப்பது உயிர் வாழாதிருப்பதற்கு ஒப்பாகிறது. செயல் புரிபவர்களுக்கும், செத்தவர்களுக்கும் இடையில் உள்ள வித்தியாசம் மிகவும் குறைவு. செத்தவர்களுடைய உடலைப் பிணமென்று சடங்கு செய்து புதைத்தோ எரித்தோ விடுவதால் உடல் மறைந்துவிடுகிறது. சோம்பித் திரிபவனின் உடல் கண்ணுக்குத் தென்படுகிறது. அவன் ஊன்பொதி. உடலை ஓம்புவது கீழோர் மேலோர் என யாவர்க்கும் பொதுவானது. உடல் வளர்ச்சியை வைத்துத் தக்கார், தகவிலர், நல்லவர், தீயவர் என எந்த வேற்றுமையையும் காண இயலாது. வினையாற்றும்போதுதான் அவரவர் தரம் வெளிப்படும். விதைகள் விதைகளாயிருக்கும்போது அவற்றிற்கிடையே உள்ள தரவேறுபாடு எளிதில் யாருக்கும் புலப்படுவதில்லை. 'முளைத்து வளர்தல்' என்னும் வினை நடக்கும்போது அவற்றின் வலிவும் பொலிவும் தெரியவரும். வினைபுரியாதவன் வாழ்வு இன்றும் மேன்மை மறைகிறது. ஆகவே தோற்றத்திற்கு வந்த உயிர்கள் ஏதேனும் ஒரு தொழில் புரிந்து மேல் நிலையை அடைய வேண்டியது கடமையாகிறது. உயிர்களுக்கு விதிக்கப்பட்ட கடமையாகிறது.

வினை விழைவதால் அல்லது வினைப்பயனை உணர்ந்ததால் சாதாரண மக்கள் கர்மத்தில் ஈடுபடுகின்றனர். ஞானம் அடைந்தவர், ஆசை அறுத்தவர் ஆயினும் இந்த உலகிற்கு நல்வழிகாட்டும் கடமையை மேற்கொண்டிருப்பதால், அவர்களும் வினை புரிய வேண்டியிருக்கிறது. சான்றோரையும், அருளாளர்களையும் ஞானியரையும் பின்பற்றி உலக மக்கள் நற்கதி அடைவர். இதுவே ஞானியர் கர்மத்தால் விளையும் பயனாகும்.

வினை எச்சத்தால் உடலை முகந்து கொண்ட ஒருவன் எந்தவிதமான கர்மத்திலும் ஈடுபடாது வீணில் வாழ்வதைவிட, பற்றுடன் ஒரு வினையைப் புரிவது ஒரு விதத்தில் நன்மை பயக்கும். பயன் கருதாது வினையாற்றுதல் என்பது எல்லோருக்கும் பொருந்தாது. பெரும்பாலான மக்கள் ஏதேனும் ஒரு ஆதாயம் இருத்தலால்தான் தொழில் செய்கின்றனர்.

மேலும் மேலும் தொழிலிலே ஈடுபடுவதில் ஆர்வம் காட்டுகின்றனர். எந்தவிதப்பற்றும் இல்லாதவர் இம்மை மறுமை இன்பங்களை அடைவார்கள் என்பது நம்பிக்கை. மறுமையின்பம், பரமார்த்திகப் பெருவாழ்வு என்பதை எல்லோருக்கும் புகட்ட முடியாது. எல்லோரும் அதற்கு அருகதை உடையவர்களாக இருக்க இயலாது. இவ்வுலகில் வாழ்வதற்கு வேண்டியவைகளைப் பெற்று இன்பம் துய்க்க வேண்டியாவது அவர்கள் கர்மம் புரிய வேண்டும். இந்த உலகத்தைப் பலமாக்க வேண்டும். 'ஞானியர் புரியும் கர்மம்' கலங்கரை விளக்கமாக நின்று ஒளிகாட்டி அழைத்து 'மக்கள் வாழ்வு' என்னும் கப்பல் கரையை அடைய உதவுகிறது.

செடிகொடிகள் தம்தம் இயல்புக்கு ஏற்றவாறு ஓங்கி வளர்கின்றன. படர்கின்றன. அவைகள் இனிப்பதும் கசப்பதும் புளிப்பதும் துவர்ப்பதும் போன்றவை அவகைளின் வழி வழி வந்த இயல்புகளின்படியே. அவைகளின் இயல்பைத் தடுப்பது பெரும்பாலும் இயலாது. அப்படித் தடுத்தால் அவைகளின் வளர்ச்சியைத் தடுப்பதாகும். இயல்புக்கு ஒப்ப ஓங்கி வளரும்படி உதவுவதே சாலச்சிறந்ததாகும். மனிதர்களுக்கிடையேயும் வெவ்வேறு இயல்புகள் இருக்கின்றன. இயல்புக்கு ஏற்றவாறு கர்மங்களும் மாறும். முயற்சிகளும் வேறுபடும். அவர்கள் இயல்பைத் தடுப்பதும் வளர்ச்சியை வீணாக்காமல் அவரவர் மனப்போக்கின் படியே வினையாற்றி முன்னேற்றமடைவதும் சிறந்ததாகும்.

ஒரு மனிதன் இந்தப் பிறவியினால் மட்டுமே ஒரு குறிப்பிட்ட இயல்பைப் பெற்றுவிடமுடியாது. ஒரு மனிதனின் அப்பன், அவனுடைய அப்பன், அவனுடைய அப்பன் என்று எண்ணிப்பார்த்தால் ஒரு மனிதனுடைய குணவேறுபாடுகளோ இயல்புகளோ அவனுக்கு மட்டுமே உரியன அல்ல. அவன் முன்னோரின் காரணமாகவும் அமைகின்றன. தற்போது பட்டினத்தடிகள் பாடல் ஒன்றை நினைவுகூர்வது மிகவும் பொருத்தமாக இருக்கும்.

அன்னை எத்தனை எத்தனை அன்னையோ
அப்பன் எத்தனை எத்தனை அப்பனோ
பின்னை எத்தனை எத்தனை பெண்டிரோ
பிள்ளை எத்தனை எத்தனை பிள்ளையோ
முன்னம் எத்தனை எத்தனை சென்மமோ
மூடனாய் அடியேனும் அறிந்திலேன்
இன்னும் எத்தனை எத்தனை சென்மமோ
என்செய்வேன் கச்சி யேகம்ப நாதனே.

ஒரு மனிதன் தனது ஐம்பொறிப் புலன்கள் விஷயங்களில் ஈடுபாடு கொள்ளுவதற்கிடையில் உண்டாகும் விருப்பு வெறுப்புகளின் தராதரத்தால் மனிதர்களின் இயல்புகள் கணக்கற்ற விதத்தில் பிரிகின்றன. மல்லிகைப்பூவின் மணம் பொதுவாக விரும்பத்தக்கதே. எனினும் மல்லிகை மணத்தை வெறுப்பவரும் உண்டு. மல்லிகை மணம் ஒருவருக்குத் தலைவலியை உண்டாக்கலாம். பாலியல் உணர்வைத் தூண்டி அமைதியிழக்கச் செய்யலாம். இவ்வாறு பற்பல காரணங்கள். நறுமணத்தை வெறுப்பவரும் இருக்கின்றனர். கடவுள் வழிபாட்டிற்குரியது என்று கருதுவோர் மல்லிகையின் பெருமித நறுமணத்தைப் போற்றுவர். இப்படியே பஞ்சேந்திரியங்கள் வாயிலாக எல்லாப் பொருள்களிடத்தும் வெவ்வேறு படித்தரங்களில் விருப்பு வெறுப்புகள் தோன்றுகின்றன. வளர்கின்றன. இவ்விருப்பு வெறுப்புகளின்தொகை வகையே மனிதர்களின் இயல்பாகப் பரிணாமம் பெறுகிறது. பல தலைமுறைகளின் வாயிலாக மனித இயல்புகள் படிந்து படிந்து பரிணமித்துப் பரிணமித்து வருவதால் இவற்றை ஒரு நொடியில் மாற்றி அமைத்து விடமுடியாது.

பன்னீராண்டுக்காலம் தொடர்ந்து மழை பெய்யாது போனாலும் பரம்பரைக் குடியானவன் நிலத்தில் சாகுபடி செய்யாமல் இருக்கமாட்டான். ஆனால் வாணிபன் ஒருவன் உழவுத் தொழிலில் ஈடுபட்டால் ஓராண்டு மழை இல்லாவிட்டாலும், சோர்வடைந்து சாகுபடி செய்வதை நிறுத்திவிடுவான். எனவே ஒருவனது இயல்பை அவ்வளவு எளிதில் மாற்றவோ திருத்தவோ இயலாது. படித்தரங்கள் காலப்போக்கில் தான் நிகழும். ஒவ்வொரு மனிதனும் தத்தம் மனப்பாங்கிற்கு ஏற்ப வினைபுரிவர். அதாவது வினையாற்றல், செயல்புரிதல், கர்மம் செய்தல், ஆகிய மூன்றும் ஒன்றே. வினையாற்றல் உயிர் இயற்கை. 'வினையே ஆடவார்க்கு உயிரே' என்று குறுந்தொகை கூறுகிறது. அது ஆக்கம்தரும் செயல். சமய உலகில் பெரும்பாலோர் எதிர்விளைவைப் பற்றி மட்டுமே கூறிவருகிறார்கள். அது ஒரு சார்புடையதாகும். வினையின் விளைவு மக்களுக்குப் பொருளாக்கம்; மக்களுக்கு வாழ்வு. சமய உலகத்தவரும் வினை செய்தலை ஒருபோதும் வேண்டாம் என்று வலியுறுத்திப் பேசவில்லை; கூறவும் இயலாது. சமயங்கள் இறைவனே ஐந்தொழில் புரிகின்றான் என்று கூறுகின்றன. சமய உலகமும் தொண்டு செய்யுமாறு பணிக்கிறது. திருத்தொண்டு செய்யுமாறு உணர்த்துகிறது. எண்ணம், சொல், தொண்டு எல்லாமே வினைதான். கர்மம் தான் சொற்களால் வரும் செயலாக்கங்களை

விடச் சிந்தனையால் வரும் செயலாக்கம் கூடுதல் என்பதே உண்மை. மாணிக்கவாசகரும் செயல் புரிந்தவர்தானே. எனவே வினையாற்றல் இயற்கை.

வினைபுரியும்போது, கொள்ளும் மனப்பாங்குதான் முக்கியம். ஒரு வினையை, தொழிலைச் செய்யும்பொழுது எத்தகைய மனநிலையில் செய்கிறோம் என்பதே கேள்வி. செய்யும் தொழிலைவிட மனப்பாங்கே விளைவுகளுக்கும் எதிர்விளைவுகளுக்கும் காரணமாக அமைகின்றது. சிலவேலைகளில் விளைவுகளே இல்லாமலும் போகின்றன. வினைகளின் செயற்பாடுகள் மனம், மொழி, மெய், ஆகியவற்றால் நிறைவேறுகின்றன. மனம் விரும்பியும் விரும்பாமலும் செய்யும் செயல்களுக்கும் பயன் உண்டு. மனம் ஒன்றிச் செய்கின்ற செயல்கள் இன்பந்துய்ப்பதற்குக் காரணமாகின்றன. மனம் பொருந்தாமல் செய்யும் செயல்கள், கர்மங்கள், எதிர்விளைவுகளைத் தரும். மனம் வெறுத்து, நொந்து செய்யும் செயல்களும் உண்டு. இத்தகைய வினைகளின் பயன் துன்பமேயாகும். ஆதலால் வினை அல்லது கர்மம் தானே இன்பமோ துன்பமோ விளைவிப்பதில்லை. வினைகளில் ஈடுபட்டிருக்கும்பொழுது மனம் நிற்கும் நிலையினை அதாவது மனப்பாங்கினைப் பொறுத்தே இன்பமும், துன்பமும் விளையும். வினையாற்றியவர் பயனை அனுபவித்தே தீரவேண்டும். இது இயற்கையின் நியதி.

கையால் நெருப்பை அள்ளிக் கொட்டினால் கைகள் சூட்டினால் வெந்து புண்ணாகும். பெருந்துன்பம் வரும். நெருப்பை அள்ளிய கைகள் புண்ணாவதிலிருந்து ஒருக்காலும் தப்பமுடியாது. இதுபோலத் தேனை வழித்தவன் விரல் சூப்பாமல் இருக்க முடியாது. ஆகையால் செய்த வினைக்கு ஏற்பப் பயன் விளையும்.

சேக்கிழார் எழுதிய பெரியபுராணத்தில் சாக்கிய நாயனார் சிவபெருமானின் மீது கல்லெறிந்து வழிபட்டார் என்று கூறப்படுகிறது. கண்ணப்ப நாயனார் சிவன் கண்ணில் செருப்புக்காலைப் பதித்தவர் என்று கூறப்படுகிறது. செயல்கள் இரண்டினையும் மேலோட்டமாகப் பார்க்கும் சிவனடியார்களுக்கு வருத்தந்தரும். அவர்கள் எந்த மனநிலையில் இத்தகைய செயல்களைச் செய்தனர் என்று புரிந்துகொண்டால் பேரின்பமே தரும். வினையாற்றும்போதும் நிலவும் மனநிலையே வினையின் பயனை மாட்சிமையுடையதாகும். இதனைப் புறநானூற்றில் கூறப்படும் ஒரு வரலாற்று

நிகழ்ச்சியால் அறிந்து இன்புறலாம். பழனி மலையை ஆண்டவன் வையாவிக்கோப் பெரும்பேகன் என்னும் மன்னன். அவன் பெரும் வள்ளல். அவனைப் புலவர் கபிலர்,

வடாஅ போரா ஆகுதல் அறிந்தும்
படா அம் மஞ்ஞைக்கு ஈத்த எம்கோ
கடாஅ யானைக் கலிமான் பேகன்
எத்துணை ஆயினும் ஈத்தல் நன்றென
மறுமை நோக்கின்றோ அன்றே பிறர்
வறுமை நோக்கின்று அவன் கைவண்மையே" (புறம். 141)

என்று போற்றுகிறார். கானகத்தில் மயில் ஆடித் திரிந்து வாழும் வழக்கமுடையது. அது போர்த்துக் கொள்ளாது. எதையும் உடுத்திக் கொள்ளாது என்று மன்னன் பேகன் நன்கு அறிவான். எனினும் மழையில் நனைந்து ஆடிக்கொண்டிருந்த மயில் குளிரால் நலியும் என்று எண்ணி வருந்தி மனமிரங்கித் தன் மீதிருந்த விலை உயர்ந்த போர்வையை அதன் மீது போர்த்தி மகிழ்ந்தான். துயர் நீக்கும் மனநிலை, கொடைமடம் பட்ட மனத்தின் செயல், மாட்சிமையுடைதன்றோ?

பறம்பு நாட்டை ஆண்டுவந்த பாரியும் 'கொடைமடம்' பட்ட மனத்தவன். ஒருநாள் முல்லை நிலத்து வழியே தேரில் சென்றுகொண்டிருந்தபோது முல்லைக்கொடியொன்று தரையில் படர்ந்து, போவோர் வருவோரால் மிதிபட்டுச் சிதைந்திருப்பதைப் பார்த்து மனம் வருந்தினான். "அந்தோ! இந்தக்கொடி படர்வதற்குரிய கொழுகொம்பின்றி இங்ஙனம் சீரழிகிறதே" என்று மனங்கனிந்தான். உடனே தான் ஊர்ந்து வந்த மிக அழகான தேரினை அங்கே நிறுத்தி, கொடிகளை அள்ளியெடுத்துத் தேர்மீது படரவிட்டான். இனி அது யார் காலிலும் மிதிபடாது என்ற மனநிம்மதியுடன் தேரின்றி நடந்தான். இது மனப்பாங்கினால் விளைந்த செயல். பேகனும், பாரியும் செய்த செயல்கள் அறிவுடையனவா? எனின் அறிவுடைய செயல் அன்று. 'கொடைமடம்' பட்டதால் விளைந்தது. 'வருந்துகிறதே' என்ற உணர்வு முன்னின்றது. உடனே தன் வயமிழந்து கொடுத்தல் நிகழ்ந்தது. பேகன் போர்வையைத் துறந்தான். பாரி தேரினைத் துறந்தான். உயர்ந்த மனப்பான்மையின் விளைவு.

மண்ணில் பிறந்த யாவரும் கடைசி மூச்சு உள்ளவரை உடலாலும் மனத்தாலும் ஒவ்வொரு வகையில் செயல்புரிய வேண்டிய கடமை உள்ளது.

எனவே அவரவர் பக்குவத்திற்கு ஏற்ப, தான் வாழவும், சமுதாயம் மேம்படவும் நற்செயல்களைச் செய்து பலன் பெறவேண்டும். மனித குலம் மேன்மையடைய, மாண்புபெற வினையாற்றி, நல்ல விதைபோல் மண்ணில் மறையவேண்டும்.

ஆத்மசாதனத்தில் ஞானமார்க்கத்தினை நெருப்போடும் பக்தி மார்க்கத்தினை நீரோடும் சீர்தூக்கிச் சொல்வது உண்டு. ஞான நெருப்பு கர்மம் என்னும் விறகுக் கட்டையைப் பொசுக்கிச் சாம்பலாக்குகிறது. பக்தி என்னும் சுகவாரி உயிர் வாழ்க்கையின்மேல் கொண்டுள்ள நாட்டத்தைக் கரைக்கிறது. தன்மயமாக்குகிறது. பரம்பொருளைச் சுகவாரி அல்லது ஆனந்தக் கடல் எனலாம். பக்தியில் திளைத்துள்ள ஜீவாத்மன் பரம்பொருள் என்னும் ஆனந்தக் கடலிலே மூழ்கி விளையாடும் சர்க்கரைப் பொம்மைக்கு ஒப்பாகிறான். சர்க்கரைப் பொம்மை நீரில் தன் வடிவத்தை இழக்கிறது. அதுபோலப் பக்தனும் சுகவாரியின் தன் ஆத்ம போதத்தைக் கரைத்துவிடுகிறான். கண்ணீரில் இரண்டு தரமுண்டு. ஒன்று துன்பக்கண்ணீர், மற்றொன்று இன்பக்கண்ணீர். துன்பக்கண்ணீர் பிறவியைப் பெருக்குகிறது. பரமனிடம் பக்தி பூண்டு சிந்துகின்ற இன்பக் கண்ணீர் பாபங்களைத் துடைத்துத் தள்ளுகிறது. கரும மூட்டை எவ்வளவு பெரியதாக இருந்தாலும் பக்தியினால் பெருக்கெடுக்கின்ற ஆனந்தக் கண்ணீர் ஆறாகப் பெருகிக் கரும மூட்டைகளை எல்லாம் தூக்கிக்கொண்டு போகிறது. கருமம் நீங்கப் பெறுகிற அளவு ஆத்ம சாதகன் புண்ணியன் ஆகிறான். பரம்பொருள் கருமத்திற்கு அப்பாற்பட்டது. கர்மத்தையெல்லாம் பக்தியினால் ஒதுக்கித் தள்ளிய ஆத்மசாதகனும் கர்மத்திற்கு அப்பால் வந்துவிடுகிறான். பின்பு அவன் பரத்தில் ஒன்றுபடுகிறான். ஆதலால் பரத்தில் ஒன்றுபட்டு முக்தனாவதற்கு இன்பக்கண்ணீர் மயமாய் இருக்கிற தீவிர பக்தியானது சிறந்தவழியாகும்.

# 9. வினைப்பயன் தத்துவம்

## (கன்மம்)

மனிதன் பிறந்தது முதல் இறக்கும் வரையிலும் தொடர்ந்து வினையாற்றிக் கொண்டேயிருக்கும் பெற்றி உடையவன். வினை எனினும் தொழில் எனினும் ஒன்றே. தத்துவ உலகில் இது கன்மம் அல்லது கருமம் எனப்படும். நாம் செய்யும் செயல்கள் யாவும் கன்மங்களே ஆகும். கன்மம் என்பது ஒரு செயலின் நோக்கம், பலன், அப்பலனை அனுபவித்தல் ஆகிய மூன்றையும் குறிக்கும். அனுபவிப்பதும் ஒரு செயலாகும். செயல் மட்டுமின்றி எண்ணம், சொல் ஆகியவை கன்மத்தில் அடங்கும்.

எல்லாச் செயல்கட்கும் பலன் உண்டு. அப்பலன்கள் யாவும் செய்தவனையே சென்று அடையும். சில செயல்களின் பயன்கள் உடனேயே சேரும். சில செயல்களின் பலன்கள் சிலகாலம் சென்று சேரும். இந்த உண்மைகளைப் பொதுவாக எல்லோரும் ஒத்துக்கொள்வர்.

எல்லா உயிர்களும் இன்பத்தையே விரும்புகின்றன. எனினும் அவை துன்பத்தையும் நுகர நேரிடுகின்றன. சிலருக்குத் தாம் தொடங்கும் செயல் எதுவாயினும் அஃது இனிதே முற்றுப்பெறுவதற்குரிய சூழ்நிலைகளே தொடர்ச்சியாக அமைந்துவிடுகின்றன. எனினும் வேறுசிலருக்குத் தொடங்கும் செயல்கள் அனைத்திலும் அவை தடைபடுவதற்குரிய சூழ்நிலைகளே அமைகின்றன. அன்றியும் ஒருவருக்கே சிலகாலம் தொடர்ச்சியாக நல்ல சூழ்நிலைகளே அமைவதையும், பின்பு சிலகாலம் தீமையான சூழ்நிலைகள் அமைவதையும் காண்கின்றோம். இவற்றால் இன்ப துன்பங்களுக்குச் சூழ்நிலைதான் காரணமாயினும் அச்சூழ்நிலைகளின் அமைப்பிற்குக் காரணம் வேறொன்று உள்ளது என்பதை உய்த்துணரவேண்டும். அந்தக் காரணம்தான் 'வினை' அல்லது 'கன்மம்' என்று மெய்விளக்க அறிஞர்களால் குறிப்பிடப்படுகிறது.

முயற்சி உடையவர் செல்வத்தையும். முயற்சி இல்லாவதர் வறுமையையும் அடைவர் என்பது ஒரு பொதுவிதி. வள்ளுவர் பெருமானும்

முயற்சி திருவினை யாக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும். (குறள் 616)

என்று கூறியுள்ளார். ஆயினும் இப்போது உண்மை சில இடங்களில் மாறுபடுவதையும் காண்கின்றோம். இரவு பகலாக உழைப்பவர்கள் வறுமையால் வாடுவதையும் சிறிதும் உழைக்காதவர்கள் செல்வச் செழிப்புடன் இன்புற்றுத் திகழ்வதையும் நாம் காணாமல் இல்லை. ஆகவே முயற்சியும் அது இல்லாததும் மட்டும் செல்வத்திற்கும் நல்குரவிற்கும் காரணங்கள் அல்ல என்பது புலப்படுகிறது.

ஒரு சிலர்க்குப் பிறப்பிலேயே முன்னோர் ஈட்டி வைத்த செல்வம் கிடைத்துவிடுகின்றது. இங்கு முன்னோரின் முயற்சி இவர்கட்குப் பலனைத் தருகின்றது. இஃது உண்மையேயாயினும் ஒருவர் செல்வக்குடும்பத்தில் பிறந்து முயற்சியின்றியே செல்வராய் விளங்க மற்றொருவருக்கு அந்த வாய்ப்பில்லாமல் போவதையும் காண்கின்றோம். இதனால் ஒருவர் செல்வர் வீட்டு மகவாய்ப் பிறத்தலும் காரணம் இல்லாத நிகழ்ச்சியன்று என்பதை உணர வேண்டும். செல்வமும் ஒருவரிடம் என்றும் நிலைத்திருப்பதில்லை. நீங்கவும் காண்கின்றோம்.

அகடுற யார் மாட்டும் நில்லாது செல்வம்
சகடக் கால் போல வரும்

என்று நாலடியார் கூறுகிறது (அகடு என்பது நடுநிலை என்றும், சகடக்கால் என்பது சக்கரம் என்றும் பொருள்படும்). 'நல்வினை' உள்ளவரை ஒருவரிடம் செல்வம் தங்கும். அது நீங்கிய உடன் செல்வமும் நீங்கிவிடும். ஆகவே உயிர்கள் அடையும் செல்வத்திற்கும் வறுமைக்கும் இன்பத்திற்கும் துன்பத்திற்கும் அவை முன் செய்த வினையே காரணமாகும்.

இவ்விடத்தில் ஓர் ஐயம் உண்டாகலாம். இன்ப துன்பங்களுக்கு முன் செய்த வினையே காரணமாயின் அவை முயற்சியின்றியே வருதல் வேண்டும். அவ்வாறின்றி முயற்சிக்குத் தக்கபடியே அவை உண்டாவது ஏன்? என்று வினவலாம். ஒரு காரியத்திற்குக் காரணம் ஒன்றே என்று கருதவேண்டா. பல காரணங்களும் இருக்கலாம். அவை அனைத்தும் உள்ளபோதே காரியம் நிகழும். ஓர் எடுத்துக்காட்டு இதனை விளக்கும். ஒரு செடி வளர்வதற்கு வித்து ஒன்று மட்டுமே காரணம் அன்று. நிலம், நீர், காற்று, கதிரவனது வெப்பம் முதலிய பலவும் காரணங்களாக

அமைகின்றன. இவை அனைத்தும் ஒன்றுகூடும் போதுதான் செடி முளைத்து வளர்ந்து பயன்தரும்.

ஒரு காரியத்திற்குப் பல காரணங்கள் இருப்பினும் அவற்றுள் ஒன்றே முதன்மை உடையதாயிருக்கும். மற்றவை அக்காரியம் முற்றுப்பெறுவதற்குத் துணையாக அமையும். மேற்குறிப்பிட்ட செடியின் தோற்றத்திற்கு வித்து முதற்காரணம். முதன்மை வாய்ந்தது. மற்றவை யாவையும் முளைத்துப் பயன் தருவதற்குத் துணையாய் அமைவனவே. இங்ஙனமே உயிர்களின் இன்ப துன்பங்களுக்கு வினை ஊழ்வினை முதற்காரணம். முயற்சி துணைக்காரணம். இரண்டிற்கும் இடையே வேறுபாடு என்ன? ஒன்று இன்றிப் பிற காரணங்கள் யாவும் உள்ள வழியும் காரியம் தோன்றாததும், அஃது உள்ளபோது காரியம் தோன்றுதலும் நிகழுமாயின், அந்த ஒன்று எதுவோ அதுவே முதற்காரணம். ஏனைய பலவும் துணைக்காரணங்கள். நிலத்தைப் பண்பட உழுது நீர் பாய்ச்சி எருவிட்டாலும் நிலத்தில் விதை இல்லையேல் பயிர் முளைக்காது. விதை இருந்தால் பயிர் தோன்றும். அதனால் விதை முதற்காரணம். ஏனையவை துணைக்காரணங்கள். உழுதல் முதலிய முயற்சிகள் யாவும் விதையாகிய முதற்காரணம் செடியைத் தோற்றுவிப்பதற்குத் துணையாய் அமையும். இதுபோலவே இன்பத்தை எய்தற் பொருட்டு எவ்வளவு முயற்சி செய்தாலும் இன்பத்தைத் தருகின்ற வினை இல்லாத பொழுது இன்பத்தை அடைய முடியாது. அஃதிருப்பின் அம்முயற்சியால் இன்பம் கிடைக்கும். அதனால் வினை முதற்காரணம். முயற்சி துணைக்காரணம் என்பதை உணர்ந்து கொள்ள வேண்டும்.

இன்னும் ஓர் உண்மையையும் அறிதல் வேண்டும். சில சமயம் முதற்காரணம் உள்ள பொழுது துணைக்காரணங்களில் சில குறையினும் காரியம் நடைபெறும். முதற்காரணம் இல்லாதபொழுது துணைக்காரணங்கள் எவ்வளவு அதிகமாக இருந்தாலும் காரியம் நிகழாது. சில வயல்களில் உழுதல் முதலியன இன்றியும் விதை பயிரைத் தோற்றுவித்தும் பயன் தருதலைப் பார்க்கின்றோம். இதற்குக் காரணம் என்ன? முன்பு செய்த உழவு, இட்ட எரு, பாய்ச்சிய நீர், இவற்றில் எஞ்சியிருந்த சிறு பகுதிகளே துணைக்காரணங்களாய் அமைந்துவிடுகின்றன. விதை இல்லையேல் எவ்வளவு எருவிட்டு நீர்பாய்ச்சினும் என்ன பயன் விளையும்? இதுபோலவே நன்மையைத் தரும் வினை இருப்பின் சிறு முயற்சியே பெரிய பயனைத்

தந்துவிடும் என்பது அறியத்தக்கது. எனவே வினையின் பயனைத் தோற்றுவித்தற்கு முயற்சி ஒரு முன்னிலையாய் அமைகின்றதேயன்றி விளையும் பயன் அனைத்திற்கும் முயற்சியே முக்கியக் காரணம் அன்று என்பதை உளங்கொள்ள வேண்டும். 'முயற்சி திருவினையாக்கும்' என்ற வள்ளுவரின் வாக்கு வினை பயன்தரும் முறையைக் கூறியதேயன்றி 'வினை உண்டு' என்னும் கொள்கையை மறுத்தற்கன்று எனத் தெரிந்து கொள்ளுதல் நல்லது.

இன்னும் வள்ளுவர் பெருமான் 'முயற்சி திருவினையாக்கும் முயற்றின்மை இன்மை புகுத்திவிடும்' என்று சொல்லிய தோடன்றி,

> தெய்வத்தால் ஆகா தெனினும் முயற்சிதன்
> மெய்வருத்தக் கூலி தரும் (குறள் 619)

> ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
> தாழாது உஞற்று பவர் (குறள் 620)

என்று வினையை மறுத்துக் கூறியுள்ளாரே என்று வினவ நேரிடலாம். இதற்கு விளக்கம் தெரிந்து கொள்ள வேண்டும். 'பயன்தரும் வினை உள்ள போழ்து கருதிய பயன் கருதியவாறே கிடைக்கும். அஃது இல்லையாயின் முயற்சிக்கு ஒரு பயன் கிடைக்கும். அதனால் எப்பொழுதும் முயற்சியை மேற்கொள்ளுதல் நலம்' என்று பொருள் கொள்ள வேண்டும். இதனால் வினை உண்டு என்பதை வள்ளுவர் மறுக்கவில்லை. இரண்டாவது குறளில் வினை என்பது முன்பல பிறப்புகளில் செய்த முயற்சியின் மாற்று வடிவந்தானே? அதனால் 'இதனை இந்த ஒரு பிறப்பில் அளவிடற்கரிய பெருமுயற்சி கொண்டு எதிர்த்தால் புறங்காணுதல் கூடும்' என்று கூறியுள்ளதையும் காண்க. அது 'வினை உண்டு' என்னும் கொள்கைக்கு மாறாதல் இல்லையல்லவா? இங்ஙனம் இப்பிறப்பில் செய்யும் பெரு முயற்சியால் முற்பிறப்பில் செய்த வினையை வெல்லுதல் எங்கோ அத்தி பூத்தாற் போல் ஒன்று இரண்டு இடங்களில் அறிதல் கூடுவதன்றி எங்கும் எளிதில் பெரும்பான்மையாய் நிகழ்வதன்று. பெரும்பான்மையாக நிகழ்வது வினையின் முன் முயற்சி தோல்வியடைவதுதான். இதுபற்றியே அப்பெருமான்,

> ஊழிற் பெருவலி யாவுள? மற்றொன்று
> சூழினும் தான்முந் துறும் (குறள் 380)

என்ற குறளில் ஊழின் வலிமையை வற்புறுத்திக் கூறினார். மேற்குறிப்பிட்ட இரண்டு குறள்களிலும் தெய்வம், ஊழ் என்பனவற்றால் "வினை உண்மை" கூறியிருத்தலையும் கண்டு கொள்ளலாம். வினை இல்லை என்னும் கருத்து இவற்றில் எல்லாவற்றானும் பெற வைக்கவில்லை என்பதை அறியலாம்.

'இன்ப துன்பங்களுக்கு வினையே முதற்காரணம்' என்று கூறியதோடன்றி, வள்ளுவர் பெருமான் அவற்றிற்குத் துணைக் காரணங்களாகிய முயற்சி, அறிவு என்பனவற்றையும் வினையே தருவனவாகக் கூறியுள்ளதையும் எடுத்துக்காட்டலாம்.

ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்
போகூழால் தோன்றும் மடி (குறள் 371)

பேதைப் படுக்கும் இழவூழ் அறிவகற்றும்
ஆகலூழ் உற்றக் கடை (குறள் 372)

என்ற குறட்பாக்களில் இக்கருத்து விளங்கக் கூறியுள்ளதைக் காணலாம்.

இயற்கையில் சுறுசுறுப்புடையவராக இருக்கும் ஒருவர் ஒரு குறிப்பிட்ட சமயத்தில் சுறுசுறுப்பின்றிச் சோம்பல் கொண்டு இருந்து அச்சோம்பலின் விளைவாகப் பெரியதோர் இழப்பினை அடைதல் உண்டு என்பதற்கு வாழ்க்கையைக் கூர்ந்து நோக்குவோர் நன்கு அறிவர். அவரைச் சோம்பல் கொள்ளச் செய்தது அவரது தீவினையேயாகும். இயற்கையில் நுண்ணறிவும் பெருங்கல்வியும் உலக அனுபவமும் உடையவராகிய ஒருவர் குறிப்பிட்ட ஒரு செயலில் அறிவு மயங்கித் தவறான வழியில் சென்று கேடுறுவதற்கும் அவர் தீவினைதான் காரணம் என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும். இயற்கையில் சோம்பலுடையவரும், மந்தமதியுடையவரும் கல்வியும் பட்டறிவும் இல்லாதவரும் 'பெருநலம்' பெறுவதற்கும் அவரது நல்வினையே காரணமாகும். எனவே உலகில் ஒவ்வொருவருக்கும் அவ்வப்பொழுது வரும் நன்மை தீமைகட்கு எல்லாம் அவரவர்கள் முயற்சி செய்வதும் செய்யாமையும் அல்ல என்பது தெளிவாகின்றது. இதனால் 'வினை அல்லது கன்மம்' உண்டென்பது நன்கு புலனாகிறது.

நாலடியாரில் பழவினை என்ற ஓர் அதிகாரமும், திருக்குறளில் ஊழ் என்ற ஓர் அதிகாரமும் இருக்கின்றன. அந்த இரண்டையும் படிப்பவர் கன்மமலம் பற்றி அறிந்து கொள்ளலாம். 'ஊழ்' என்ற சொல்லுக்கு

'இருவினைப்பயனும் செய்தவனையே சென்றடைவதற்கு ஏதுவான நியதி' எனப் பொருளுரைப்பர் பரிமேலழகர். மேலும் அவர் ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி ஆகிய யாவும் ஒரே பொருளுடைய சொற்கள் என்றும் தெரிவிப்பர். தொல்காப்பியர் ஊழைப் 'பாலறிதெய்வம்' என்று குறிப்பிடுவார். நாலடியாரில் சமண முனிவர்,

பல்லாவுள் உய்த்து விடினும் குழக்கன்று
வல்லதாந் தாய் நாடிக் கோடலைத் தொல்லைப்
பழவினையும் அன்னதகைத்தே தற்செய்த
கிழவனை நாடிக் கொளற்கு (நாலடியார் 110)

என்று வினையின் வலிமையை விளக்குவார். ஊழை நினைத்தால் சிலப்பதிகாரம் நினைவிற்கு வராமல் போகாது. ஊழின் வலிமையை வற்புறுத்துவதற்கு என்றே எழுந்த காவியம். 'ஊழ்வினை உறுத்து வந்தூட்டும்' என்பதைக் கோவலனின் வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சிகள் தெளிவாகக் காட்டுகின்றன. கோவலன் இப்பிறப்பிலே யாதொரு தீங்கும் செய்யவில்லை. என்பது அடைக்கலக்காதையில் புலப்படுத்தப்படுகிறது.

இம்மைச் செய்தது யானறி நல்வினை
உம்மைப் பயன்கொல் ஒரு தனி உழந்து இத்
திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது?

என மாங்காட்டு மறையோன் கோவலனைப் பரிவுடன் வினவுகின்றான். இப்பிறப்பிலே தீங்கு செய்யாத கோவலன் கொல்லப்படுகின்றான். முற்பிறப்பில் களவு செய்யாத ஒருவனைக் கள்வன் எனக்கூறிக் கொல்வித்தான். அத்தீவினையின் பயனையே இப்பிறப்பில் அனுபவிக்கின்றான். வழக்குரை காதையில் கண்ணகி பாண்டிய மன்னன் அவையிலே,

ஊழ்வினை துரப்பச்
சூழ்கழல் மன்னா நின்னகர்ப்புகுந்து
என்காற்சிலம்பு பகர்தல் வேண்டி நின்பால்
கொலைக்களப்பட்ட கோவலன் மனைவி
கண்ணகி என்பது என் பெயரே

என்று தான் யாரென்று கூறுவதில் "ஊழ்வினை துரத்த வந்தேன்" என்று குறிப்பிடுகின்றாள். பாண்டியன் ஏன் ஆராயாது கோவலனுக்கு மரண

தண்டனை வழங்கினான்? பாண்டியனுக்கும் வினைப்பயன் அதுவாகவே இருந்தது.

வினை விளை காலம் ஆதலின் யாவதும்
சினை அலர் வேம்பன் தேரான் ஆகி
ஊர் காப்பாளரைக் கூவி ஈங்கு என்
தாழ்பூங்கோதை தன்காற் சிலம்பு
கன்றிய கள்வன் கையதாகில்
கொன்று அச்சிலம்பு கொணர்க ஈங்கு

என அவசரமாக ஆணையிட்டான். அதன் பயனாகத் தானும் உயிர்விட நேர்ந்தது. "வினை விளை காலம்" கோவலனையும் பாண்டியனையும் கொன்றுவிட்டது. ஒவ்வொருவரது வாழ்விலும் நடைபெறும் இன்ப துன்ப அனுபவங்களாகிய நிகழ்ச்சிகள் யாவும் ஒரு விழாவில் முன்னரே அமைக்கப்பெற்ற நிகழ்ச்சி நிரலின்படி நிகழ்வது போல நிகழ்ந்து வருகின்றனவா? எண்ணிப் பார்க்க வேண்டிய வினா.

கைகேயியின் கூடாத செயலால் இலக்குவன் மனங்கொதித்து வெகுண்டெழுகிறான். இதற்குக் காரணமானவர் அனைவரையும் வெட்டி வீழ்த்துவேன்; யாரும் என்முன் வந்து தடுக்க இயலாது என்று வீறு கொண்டெழுகிறான். கலங்கா நிலையுடைய இராமன் இலக்குவன் தோள்மீது கைவைத்து,

நதியின் பிழை அன்று; நறும்புனல் இன்மை அற்றே;
பதியின் பிழை அன்று; பயந்து நமைப் புரந்தான் ;
மதியின் பிழை அன்று; மகன் பிழை அன்று; மைந்தா!
விதியின் பிழை! நீ இதற்கென்னை வெகுண்டதென்றான்

இலக்குவன் மனம் அடங்கினான். அருணந்தி சிவாச்சாரியார் அவர்களும்,

பேறிழ வின்பமோடு
பிணிமூப்புச் சாக்கா டென்னும்
ஆறும்முன் கருவுட்பட்டது;
அவ்விதி அனுபவத்தால் ஏறிடும்

என்று கன்மத்தை விளக்குவார். கன்மம் எனப்படுகின்ற வினையின் வழியே வாழ்க்கைப் போக்கு அமைகிறது என்பதைப் புறநானூற்றுப் பாடல் மிகவும் அழகாக விளக்குகிறது.

யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர் தர வாரா
நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன
சாதலும் புதுவது அன்றே; வாழ்தல்
இனிது என மகிழ்ந்தன்றும் இலமே; முனிவின்
இன்னாது என்றலுமிலமே; மின்னொடு
வானம் தண்துளி தலைஇ ஆனாது
கல்பொருது இரங்கும் மல்லல் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியில் தெளிந்தனம் ஆகலின் மாட்சியின்
பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே (புறம். 192)

பொருள்: எவ்வூராயினும் எம் ஊரே! யாவராயினும் அவர் எம் உறவினரே; தீதும் நன்றும், நோதலும் தணிதலும், பிறரால் வருவதல்ல; நம்மாலேயே விளைவதாம். சாதலோ இவ்வுலகில் புதிய செய்தியன்று. வாழ்தலே இனிது என மகிழ்வதும், வெறுத்து அதனை இன்னாதென ஒதுக்குதலும் இல்லோம். பேரியாற்று நீரிலே செல்லும் மிதவை போல எம் அரிய உயிரானது முறையாகச் சென்று கரைசேரும் என்பதனைத் திறனுடையோர் நூல்களால் தெரிந்து கொண்டோம். எல்லாம் ஊழ்வினைப் பயனே என்று தெரிந்து கொண்டதால் செல்வத்தாற் பெரியவரைப் போற்றுதலும் செய்யோம். சிறியோரை இகழ்தலும் செய்யோம். அவரவர் நல்லுள்ளப்பான்மை ஒன்றே யாம் கருதுவோம்.

தமிழ் நெஞ்சத்தின் உலகந்தழுவிய உயர்ந்த பாங்கும், வாழ்க்கையை அமைந்தவாறே ஏற்றுக்கொள்ளும் பக்குவமும் போற்றத்தக்கன!

# 10. பாலியல் தத்துவம்

## (ஐந்திணைத் தத்துவம்)

மொழியியல் அறிஞர்கள் அவரவர் மொழிக்கு மொழி இலக்கணம் மட்டுமே எழுதுவர். பொதுவாக எல்லா மொழியிலும் எழுத்து, சொல், யாப்பு என்பன பற்றியே இலக்கண நூல் விவரிக்கும். வரையறை செய்து இலக்கணம் கூறும். நந்தமிழ் மொழியில் மட்டுமே 'பொருள் இலக்கணம்' உரைக்கப்பட்டது. 'பொருள் இலக்கணம்' என்பது மொழி இலக்கணம் மட்டுமன்று; வாழும் முறையைப் பாடிய வாழ்வியல் இலக்கணமும் ஆகும். தமிழைப் போல் தொன்மையான எந்த ஒரு மொழியிலும் மனித இனத்தின் வாழ்க்கையில் நடைபெறுகின்றவற்றை இலக்கணமாக வகுத்தும் பகுத்தும் தொகுத்தும் பாடியதில்லை. தமிழுக்குப் பிந்தைய மொழிகளிலும் இந்த வழக்காறு இல்லை.

மனித இனத்தின் வாழ்க்கையைப் 'பொருள்' பொதிந்ததாகக் கருதியவன் தமிழன். வையத்தில் வாழ்வாங்கு வாழ்தலே உயர்ந்த வாழ்க்கை என்று தெளிவு பெற்றவன். எனவே வாழ்க்கையை, தன்னை மேம்படுத்த உதவும் நல்ல பயிற்சியாக, பயிற்சிக்களமாக ஆக்குவதில் தேர்ச்சியும் புலமையும் பெற்றிருந்தவன் தமிழன்.

தெளிவும், புலமையும் வாழ்க்கை அனுபவங்களும் வாழ்க்கையை இருகூறாகப் பார்த்தன. ஒரு பகுதி அகவாழ்க்கை என்றும் இன்னொரு பகுதி புறவாழ்க்கை என்றும் போற்றப்பட்டன. அகமும் புறமும் வாழ்க்கை என்னும் நாணயத்தின் இருபக்கங்களாகும். அகம் புறத்திற்கு ஆதரவாகவும் புறம் அகத்திற்கு ஆதரவாகவும் விளங்கக் காணலாம். ஒரு பக்கம் இல்லாத நாணயம் செல்லாதது போலப் 'புறம்' மட்டுமே உள்ள வாழ்க்கை செல்லாது. 'அகம்' மட்டுமே உள்ள வாழ்க்கை செல்லாது. அதாவது முழுமையான திருந்தியமைந்த வாழ்க்கையாகாது.

அகவாழ்க்கை 'ஐந்திணை ஒழுக்கம்' என்று போற்றிப் பாடப்படும் மரபுடையது. அன்பின் ஐந்திணை என்றும் கூறுவர். அன்பொடு புணர்ந்த

ஐந்திணை என்றும் அழகாகக் கூறப்படும் 'காதல் ஒழுக்கமே' ஐந்திணை ஒழுக்கம் எனப்படும். தூய்மையான காதல் உயர்ந்த ஒழுக்கமாகும். விழுப்பம் தரும் ஒழுக்கமாகும்.

பண்டைத் தமிழர் தாம் வாழும் இடங்களை ஐந்து விதமாக இனம் கண்டனர். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று பெயரிட்டனர். மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி நிலம் என்றும், அந்நிலத்து மக்களிடையே கனியும் காதல் ஒழுக்கம் 'குறிஞ்சித் திணை' என்றும் கூறப்பட்டது. காடும் காடு சார்ந்த வாழுமிடம் முல்லை நிலமாகும். இந்நிலத்தில் வாழும் மக்கள் காதல் ஒழுக்கம் 'முல்லைத் திணை' என்று சொல்லப்பெறும். நீர் வளம் மிகுந்த வயலும் வயலை ஒட்டிய ஊர்களும் மருதநிலப்பகுதியாயின. மருதநில மக்களின் காதல் ஒழுக்கம் 'மருதத் திணை' ஆயிற்று. கடலும் கடல் ஒட்டிய மணற்பரப்பும் நெய்தல் நிலப்பகுதியாகும். இங்கு வாழும் மீனவர் காதல் ஒழுக்கம் 'நெய்தல் திணை' என்று அழைக்கப்படும். பாலை நிலம் மற்ற நிலங்கள் போல் தனித்தன்மை உடைய நிலப்பகுதி அல்ல. 'குறிஞ்சியும் முல்லையும் முறைமையில் திரிந்து, நல்லியல் பிழந்து நடுங்கு துயர் தரும் பாலை என்பதோர் படிவம் கொள்ளும்' என இலக்கியங்கள் கூறுகின்றன. பாங்கற்ற நிலத்தில் வாழும் மக்களிடையேயும் காதல் அரும்பும். பாலை நிலத்துக் காதல் ஒழுக்கம் 'பாலைத் திணை' என்று கூறப்படும்.

'காதல்' என்ற சொல் பலவிதமானவரின் நெஞ்சிலே பலவிதமான கருத்தோவியங்களை எழுதி விடும் பாங்குடையது. பன்முகமுடையது. 'காதல் அடைதல் உயிரியற்கை' என்றார் பாவேந்தர் பாரதிதாசன். இதைவிட அழகாக, இனிமையாக, சுருக்கமாகக் காதலின் இயற்கையையும் தேவையையும் யாரும் கூறிவிட இயலாது. காதலும் காதற்செயற்பாடுகளும் உயிரின் இயற்கையான வெளிப்பாடான செயல்களாகும். பாவேந்தரின் ஊனிலும் உயிரிலும் கலந்து நின்ற பாரதியார் வேதாந்தமாக விரித்துப் பாடிய குயில் பாட்டில்

காதல் காதல் காதல்
காதல் போயிற் காதல் போயிற்
சாதல் சாதல் சாதல்

என்று குயில் பாடுகிறது. காதல் எப்போது, யாரிடையே, எங்ஙனம் தோன்றும்? காதல் திட்டமிட்டு வரும் உணர்வன்று. தற்செயலாகத் தோன்றித்

தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும் மர்மம் நிறைந்தது. 'குறுந்தொகை' தமிழில் தோன்றியுள்ள அழகான நூலாகும். காதல் பாடும் நல்ல குறுந்தொகை என்பர். அதில் காதல் தோன்றும் விதம் அழகாகக் கவினுறக் காட்டப்பட்டுள்ளது.

யாயும் ஞாயும் யாராகியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறை கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயல் நீர் போல
அன்புடை நெஞ்சந்தாம் கலந்தனவே.

செம்புலப் பெயல் நீர் போல அன்புடை நெஞ்சங்கள் கலந்து விட்டன. செம்மண் வயலில் சட்டென மழை விழுந்தால் செம்மண் கரைந்து சேறாகிவிடுமல்லவா? சட்டென்று மழை வீழ்ந்து சேறானது போல் காதல் தோன்றி இருபாலர் மனமும் உயிரும் கலந்துவிடும். பாடலின் பொருள் இன்புறத் தக்கது.

"என்னுடைய தாயும், தந்தையரும், உன்னுடைய தாயும், தந்தையரும் எந்த வகையிலும் உறவினர் அல்லர். முன்பின் அறிமுகமானவரும் அல்லர். நானும் உன்னை இதற்கு முன் எங்கும் கண்டதில்லை. நீயும் என்னை ஒருபோதும் பார்த்ததில்லை. இப்படி எந்த முன்பழக்கமுமின்றி முதன்முதலாகப் பார்த்த உடனே நம் உள்ளங்கள் நீரும் செம்மண்ணும் போல் கலந்து விட்டனவே" என்று தலைமகன் வியக்கின்றான்.

இப்படி வருவதுதான் தூய்மையான காதல். உருவும், திருவும் உயர்ந்த ஒழுக்கமும் உடைய பருவம் வாய்ந்த ஆண், பெண் ஆகிய இருபாலரிடையே தூய்மையான காதல் இப்படித்தான் தோன்றும். 'காதல் அடைதல் உயிரியற்கை' என்பதன் பொருளும் இதுதான். உயிரியற்கையாகக் காதல் முகிழ்க்கும். பால்வரைத் தெய்வத்தின் நியதிப்படியே காதல் கனியும் என்பது ஒரு அனுபவம். காதல் வயப்பட்டவன் ஓரிரு நாள் பிரிய நேர்ந்தால்,

... இருபது பேய் கொண்டவன்போல்
கண்ணுமுகமுங் களியேறிக் காமனார்
அம்பு நுனிகள் அகத்தே அமிழ்ந்திருக்க
கொம்புக் குயிலுருவம் கோடிபல கோடியாய்

ஒன்றே யதுவாய் உலகமெலாந் தோற்றமுற
சென்றே மனைபோந்து சித்தந் தனதின்றி
நாளொன்று போவதற்கு நான்பட்ட பாடனைத்தும்
தாளம் படுமோ? தறிபடுமோ? யார்படுவார்?

என்று நிலை குலைந்து நிற்பதைப் படம் பிடித்துக் காட்டுகிறார் பாரதியார். பருவச்செவ்வி வாய்ந்த இருபாலரிடையே அரும்பி வளர்ந்து கனியாகும் காதல் மிகவும் மென்மையானது. மலரினும் மெல்லியது காதல். காதல் வயப்பட்டு முடிதுறந்தவர் பலர். காதல் வயப்பட்டுப் போரில் மாண்டவர்கள் பலர். காதல் வயப்பட்டு உடைமையைத் துச்சமெனத் தூக்கி யெறிந்தவர் பலர். அன்பினடியாக, இன்றி அமையாத உழுவலன்பின் அடியாகப் பிறந்த காதல் தடம் மாறாது. தடுமாறாது. "இம்மை மாறி மறுமையாகினும் நீ ஆகியர் என் கணவனை, யானாகியர் நின் நெஞ்சு நேர்பவளே" என்று காதல் வயப்பட்ட தலைவி உறுதி கூறுவாள். யாது நேரினும் கலங்கா நிலை உடையவராய் இருப்பர்.

'போர்க்களத்து வந்து காணாத பகைவரும் வந்தவரிடத்துக் கேட்டு அஞ்சுதற்குக் காரணமான என்வலிமையும் வீரமும் இப்பெண்ணின் அழகிய நெற்றி ஒன்றினைக் கண்டதும், அழிந்து விட்டதே என்று' புலம்புகின்றான் வீரன் ஒருவன்.

ஒண்ணுதற் கோஓ உடைந்தே ஞாட்பினுள்
நண்ணாரும் உட்குமென் பீடு (குறள் 1088)

அன்புமாறாத காதல், வீரனையும் வீழ்த்தும்; விவேகியையும் வீழ்த்தும். காதலில் வீழ்த்தி வாழ்க்கையில் உயர்த்தும். அதனால்தான் வள்ளுவர் பெருமான் காமத்துப்பால், வாயிலாகக் காதலின் நுட்பங்களையெல்லாம் கவினோடு காட்டியுள்ளார். காமத்துப்பாலில், காதலை வெளிப்படுத்தி மகிழும் சந்தர்ப்பங்களையெல்லாம் கூறினார். காதல் போற்றிய வள்ளுவர் இல்லறவியலில் வாழ்க்கைத்துணை என மகளிரை மாண்புறச் செய்தார். இல்லறமே எல்லோர்க்கும் நல்லறமாதலை எடுத்துக் கூறினார். காதல் மணமாயினும், களவியல் நிகழாத கற்பியல் மணமாயினும் இல்லறம் என்னும் வேள்வியில் முழுமையடைதல் வேண்டும். காதல் அடைந்த உயிர் நற்கதி பெறவேண்டும்.

காதல் களத்தில், இல்லற வேள்வியில் மன ஒற்றுமை, உயிர் ஒன்றாதல் மட்டுமே நிறைவு தராது. காதலை முழுமையாக்குவது கலவி

இன்பமே. காதல் இருவர் கருத்தொருமித்து உடலால் பொருந்துதல், காதல் பயிரை நன்கு வளர்க்கும். வள்ளுவர் காதல் வயப்பட்டவரைத் தலைவன் தலைவி என்று கூறுவார். இல்லறம் பூண்டவரை ஒருவருக்கொருவர் வாழ்க்கைத் துணை என்று தெளிவுபடுத்துவார். இல்லற ஒழுக்கத்தில் ஆணும் பெண்ணும் சரிநிகர். ஒருவருக்கொருவர் வாழ்க்கைத் துணையாய் அமைந்து இருவரும் தம்முள் மனமொத்துக் கலவி இன்பம் நுகர்தல் ஒரு தவமாகும். ஒரு வேள்வியாகும்.

வாழ்க்கைத் துணையை அணையும் தோறும் வாடிய உயிர் தளிர்க்கும்படியாகத் தீண்டுதலால் தலைவியின் தோள்கள் அமிழ்தால் செய்யப்பட்டதாகத் தலைவன் உணர்ந்தின்புறுகிறான்.

உறுதோறும் உயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்கு
அமிழ்தின் இயன்றன தோள். (குறள் 1106)

கண்ணால் பார்த்தும், காதால் கேட்டும், நாவினால் உண்டும், மூக்கால் மோந்தும், உடம்பால் தீண்டியும் துய்க்கப்பெறும் ஐம்புல இன்பம் - கலவியின்பம். ஒளியுள்ள வளையல் அணிந்த இவளிடத்தே இன்பம் உள்ளன என்று தலைவன் மெய்யுறு புணர்ச்சியின் கூறுபாடுகளை எண்ணி எண்ணி மகிழ்கிறான்.

கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள.

காதல் ஓர் அறம். காதல் ஒரு நோயும் ஆகும். அறமே நோயாதல் காதலில் மட்டுமே நடக்கும். நோயே மருந்தாதலும் காதல் களத்தில்தான்.

பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்நோய்க்குத் தானே மருந்து (குறள் 1102)

நோயுற்றான் அந்நோயைப் போக்கப் பயன்படுவது வேறொரு பொருளாகும். சிறந்த அணிகளையுடைய இத்தலைவியால் வந்த என் காதல்நோய்க்கு இவளே மருந்தாகிறாள்.

கலவியின்பமே, மெய்யுறு புணர்ச்சியே. அஃதாவது பாலியல் உறவே மனமொத்த கருத்தொருமித்த காதல் நோய்க்கு மருந்தாகும். ஐம்புல இன்பம் அனுபவித்தலால் விடுதல் அறியாவிருப்பம் மேலிடுகிறது. விடுதலறியா விருப்பமே காமம் என்று கூறப்படுகிறது. காமம் அல்லது

காமநோய் ஓர் விநோதமான தீ ஆகும். சாதாரணத் தீ தொட்டால் சுடும். காமநோய் என்னும் தீ தொடாவிட்டால் சுடும். என்ன முரண்!

தொடிற் சுடின் அல்லது காமநோய் போல
விடிற்சுடல் ஆற்றுமோ தீ? (குறள் 1159)

காமத் தீ மெய்தொட்டுப் பயின்றால்தான், நெருங்கித் தீண்டினால்தான் சுடாது. எட்டி நின்றால் சுடும். தொட்டு உவந்தால் சுடாது. "தம்மால் விரும்பப்படும் மகளிரது மெல்லிய தோள்களின் மீது படுத்துறங்கும் இன்பம் போலத் திருமாலினது வீட்டுலகம் இன்பம் தருவதாகுமோ?" என்று தலைவன் கேட்கிறான். ஐம்புல இன்பமும் ஒருங்கே நுகர்தல் பாலியல் உறவிலே மட்டும்.

தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு? (குறள் 1103)

இவ்வாறு உடல் தழைக்கும் இன்பம், உயிர் வளர்க்கும் இன்பம் சிறுமை உடைய இன்பம் ஆகாது என்பது வள்ளுவர் போன்ற நிறைமொழி மாந்தர் கருத்து. இல்லறத்தேருக்குச் சக்கரமாக உதவும் நல்லின்பமாகும். இல்லற இன்பமாகும். ஒருவனும், ஒருத்தியுமாயிருந்து மெய்தழுவி இன்பம் துய்த்து வாழ்தல் இறைவன் மகிமையை வெளிப்படுத்துவதாகும் என்று தைத்ரீய உபநிடதம் கூறுகிறது. உடலின்பம் சிற்றின்பம் ஆகாது. இயற்கையின் ஏற்பாட்டுக்கு உதவிபுரிந்து அதை மேம்படுத்தும் வேள்வியாகும்.

இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்
காமக்கூட்டம் காணுங்காலை

என்று ஒல்காப் பெரும்புகழ் தொல்காப்பியரும் அன்புடன் கூடிய காமக்கூட்டம் அறம் என்பார். ஐந்திணை ஒழுக்கம் என்பார்.

போக்கெல்லாம் பாலை, புணர்தல் நறுங்குறிஞ்சி,
ஆக்கிய அணிஊடல், மருதம், இல்லிருத்தல் முல்லை
இருந்தேங்கல் நெய்தல்

என்று அழகாகக் காதலின் படித்தரங்களைக் கூறும் இப்பாடல் மெய்யுறு புணர்ச்சியைக் குறிஞ்சித் திணை என்று சுட்டிக்காட்டுகின்றது.

உடற்புணர்ச்சி நிகழாவிட்டால் உயிர்க்குலம் தோன்ற வழிவகையில்லை. உயிர்க்குலங்கள் தோன்ற வழிவகுக்கும் பாலியியல் உறவு படைப்புக் கடவுளுக்கு உதவிபுரியும் பெரிய செயலாகும். புண்ணியச் செயலாகும். எனவே சிறுமை உடையதாகாது. பாலியல் உறவு என்பது உடல் அளவான இன்பம் மட்டுமன்று. ஆன்மீக உலகில் சிலர் அவ்வுறவினைச் சிற்றின்பம் என்று கருதினாலும் மனித வாழ்க்கை இவ்வுலகில் தொடர்ந்து நடைபெறுவதற்கும், ஒவ்வொரு உயிர் வகைகளுக்கிடையேயும் அன்பு பரிமாறிக் கொள்ளப்படுவதற்கும் அதுவே வாயிலாக அமைகிறது. ஒருதளமாக அமைகிறது.

"தூய்மையான பாலியல் உணர்வு, பாலியல் உறவு யாரையும் கீழ்மை அடையவிடாது. ஆன்மீக முன்னேற்றத்திற்குத் தடைக்கல்லாய் நிற்காது. எந்த உணர்வால், உயிர்கள் வாழ்வு பெறுகின்றனவோ எந்த உணர்வால் காதல் முழுமையாக அர்ப்பணிக்கப்படுகிறதோ, எந்த உணர்வால் மனித இனமும் பிறவும் தொடர்கின்றனவோ அந்த உணர்வு, அந்த உறவு வெட்கப்படவேண்டிய உணர்வு அன்று, பாவமான உணர்வுமன்று; உறவுமன்று" என்று தத்துவ அறிஞர் டாக்டர் இராதாகிருட்டிணன் மிகவும் தெளிவாகக் கூறுகிறார்.

வயது முதிர முதிரக் கலவியில் ஈடுபாடு குறைந்துவரும். இறை நாட்டம் மிகுந்து வரலாம். கலவியின்பத்தில் நிறைவடைந்து நீங்கலாம். காலம் கனியக் கனியத் தானாகவே காமம் மட்டுப்படும். முடைமாற்றம் உண்டாகும். மக்கள் வளர வளரப் பேரன் பேத்திகள் போன்றோர் வளர வளர அவர்பால் மனம் கனியும். அவர் வளர்ச்சியில் நாட்டமும் ஈடுபாடும் ஏற்படும். இளம் வயதினருக்கு எடுத்துக்காட்டாக வாழவேண்டிய பக்குவம் ஏற்படும். வாழ்ந்த நிம்மதி ஏற்படும். அதுவே வாழ்வின் பயனாகும் என்று தொல்காப்பியர் கூறுகிறார்.

**காமஞ் சான்ற கடைக்கோட் காலை**
**ஏமம் சான்ற மக்களோடு துவன்றி**
**அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்**
**சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே** **(தொல் - கற்பியல்)**

**(கிழவனும் கிழத்தியும் = தாயும் தந்தையும் போன்றவர்**
**பாட்டனும் பாட்டியும் போன்றவர்)**

'காதல் அடைதல் உயிரியற்கை' என்பதை எல்லோரும் உணர்ந்ததால்தான் பக்தி இலக்கியங்களிலும் நாயகன் நாயகி பாவனை தழுவப்பட்டது. தான் வழிபடும் இறைவனைக் காதல் புரியும் தலைவனாகவும் தன்னைக் காதல்வயப்பட்ட தலைவியாகவும் பாவித்துக்கொண்டு மெய்யடியார்கள் பாடும் மரபு தொன்றுதொட்டு வழக்கத்தில் இருந்து வருகிறது. ஆண்டாள் வரலாறும் பக்த மீரா வரலாறும் நல்ல எடுத்துக்காட்டுகளாகும். எனவே, பாலியல் தத்துவம் அல்லது ஐந்திணை ஒழுக்கம் ஓர் உன்னதமான வாழ்வியல் தத்துவமாகும் என்பது தெளிவாகிறது.

## பாலியல் கல்வி

சராசரி மனித வாழ்க்கை எல்லா மன எழுச்சிகளையும் ஆசைகளையும் அனுபவித்துக் கொஞ்சம் கொஞ்சமாகப் பண்படுவதுதான். பருவவேட்கைகளில் முறைப்படி ஈடுபடுவது இயற்கையானதுதான். எனவே வளர்ந்து வரும் இளம்பருவத்தினருக்கு, கல்லூரியில் பயிலும் மாணவ மாணவியருக்குப் பாலியல்கோட்பாடு, அல்லது தமிழில் மிக அழகாகப் போற்றப்படும் ஐந்திணை ஒழுக்கம் பற்றிக் கற்பிக்க வேண்டும்.

பருவம் அடைந்த இருபாலருக்கும் பாலியல் ஒழுக்கம் பற்றி, தகுதிவாய்ந்த ஆசிரியர்கள், மருத்துவர்கள், உடற்கூறு அறிஞர்கள், ஆன்மீக உலகினர் ஆகியோர் துணையுடன் எடுத்துக்கூறுதல் வேண்டும். பிற அறிவியல், தொழில்நுட்பம், கலை, வரலாறு இன்னும் பிற பாடங்களை மாணவர் முன்னேற்றம் கருதிக் கல்லூரிகள் கற்பிப்பது போலவே பாலியல் ஒழுக்கம் பற்றியும் அவசியம் கற்பிக்க வேண்டும்.

செய்தி ஊடகங்களும் சிற்றினக்கூட்டமும் இளம்பருவத்தினரின் உடல் எழுச்சியைத் தவறான வழியில் திருப்பிவிடும் வாய்ப்புகள் மிக அதிகமாக இருக்கின்றன. எல்லாவற்றையும் கட்டுப்படுத்த இயலாது. எனவே, முறைப்படிக் கல்வி நிலையங்கள் தக்கவர் மூலம் பாலியல் ஒழுக்கம் பற்றி மாணவருக்குக் கற்பிப்பதில் எந்தவிதத் தவறும் இல்லை.

மனித உடலோடும் உயிரோடும் பின்னிப்பிணைந்துள்ள இயற்கை உந்துதலை உயர்நிலை நோக்கித் திருப்பிவிடவேண்டும். இளைஞர் நலத்தைக் கருத்தில்கொண்டு கல்வி நிலையங்கள் பாலியல் ஒழுக்கம் பற்றிக் கற்பிப்பதில் கருத்தொற்றுமை ஏற்படுத்த அரசும் முன்வந்து உதவ வேண்டும்.

வளரும் பருவத்தில் உள்ளவர்கள் உடலாற்றலும், அறிவாற்றலும் மன ஆற்றலும் உடையவர்களாக வளர்க்க இது அவசியமாகும். 'பாலியல் ஒழுக்கம்' ஒரு மர்ம தேசமாக இருக்கக்கூடாது. பசி, தாகம் போன்று பாலியல் வேட்கையும் உடலின் இயற்கையான கூறுகளில் ஒன்று என்று உணர்த்தப்படவேண்டும். பசி எடுத்தால் நல்ல உணவு அவசியமாகிறது. பசி எடுத்தால் சாக்கடையில் யாரும் உணவு தேடுவதில்லை. அதுபோல் பாலியல் உணர்வினை உரிய தருணத்தில் நல்ல திருமண உறவின் மூலம் தணித்துக்கொள்ளுதலே ஆண் பெண் இருபாலருக்கும் உடல் அளவிலும் உள்ளத்தளவிலும் பெரிய நன்மை தரும் என்று எடுத்துக்கூற வேண்டும். பாலியல் ஒழுக்கம் இல்லறம் ஏற்க இருப்பவர்கட்கு மிகவும் அவசியமாகும். இல்லறம் என்னும் மாளிகையின் இனிமையான இயற்கையான அடித்தளம் அமைவதற்குப் பாலியல் ஒழுக்கம் இன்றியமையாததாகும் என்பதை மீண்டும் மீண்டும் அறிவுறுத்துவதில் தவறில்லை. மனித வளம் காக்க இளைஞர் வளம் பேணப் பாலியல் கல்வி மிகவும் அவசியமாகும்.

# 11. மாயை என்னும் தத்துவம்

ஆன்மீக உலகில் அடிக்கடிப் பேசப்படும் சொல் மாயை. "வாழ்வாவது மாயம் மண்ணாவது திண்ணம்" என்பார் திருஞானசம்பந்தர். ஒரு வினாடிக்கு முன்பு இருந்தது போன்று பின்பு இல்லாதது யாவும் மாயை என்று கூறப்படுகிறது. கணந்தோறும் கணந்தோறும் மாறிக்கொண்டிருக்கும் தன்மையுடையது.

தோன்றா நிலையிலிருந்து காரணப் பிரபஞ்சம், காரியமாகித் தோன்றிய பிரபஞ்சம் ஆனது. இது மாயை ஆகும். அது ஓயாது தன் வடிவத்தை மாற்றிக்கொண்டே இருக்கிறது. நிலைபேறு ஒன்றையும் பிரபஞ்சத்திடம் காணமுடியாது. இவ்வுலகம் மாயை. இதில் நாம் பிறப்பது, வளர்வது, வாழ்ந்திருப்பது, தேய்வது, மாய்வது ஆகிய எல்லாம் மாயை.

மாயை இயற்கையான செயல். தொடர்ந்து நடைபெற்றுக்கொண்டே இருக்கும். இது பரிணாம மாயை. இயற்கையின் நடைமுறையை இதில் காணலாம். மீண்டும் மீண்டும் தொடங்கியதில் முடிவும் முடிந்ததில் தொடக்கம் எனச் சுழன்று கொண்டே இருக்கும். நல்லதொரு விதையைப் பண்படுத்திய நிலத்தில் தக்க பருவத்தில் விதைத்தால், அது முளைத்துச் செடியாகிப் பூத்துக் காய்த்துப் பழமாகி நல்லுணவாகிறது. அது மட்டுமின்றிப் பழையபடியும் நல்ல விதையாகவும் வடிவெடுத்துத் தனது அரிய வேலையை மீண்டும் செய்ய ஆயத்தமாகிறது. ஒழிவில் ஒடுக்கமும், ஓய்வில்லாத தோற்றமும்(Involutions and evolution) வட்டப்பாதையில் ஓடுவது போன்று நிகழ்ந்து கொண்டேயிருக்கின்றன. இதுதான் மாயையின் சுழற்சி.

மாயை, மனிதவாழ்வில் முக்தி அடையும் வரை நிகழும். அதற்கு அப்பால் இல்லை. முக்தி அடையும் வரை மாயையின் ஆட்சி நடைபெறும். மனிதன் மாயை மயமானவன் என்று கூற வேண்டும். அவனிடம் எளிதில் கடக்க முடியாத கருமமாக இருப்பது மாயை. மனிதனிடத்து மனதாய் மிளிர்வது மாயை. மனதைப் பொறுத்து உலகம். எனவே உலகமே மாயம். வாழ்வே மாயம். மாறிக்கொண்டேயிருப்பது மாயம்.

மாயையின் தோற்றங்கள் யாவும் இம்மை உலகம் அதாவது இகம் என்று பெயர் பெறுகின்றன. இதற்கு அப்பால் இருக்கும், இருப்பதாகக் கூறப்படும் பெருநிலைக்குப் பரம் என்று பெயர். இகத்தில் உள்ள இகப்பொருள் மனிதன். பரத்தில் உள்ள தனிப்பொருள் பரம்பொருள். இகம் பரம் இரண்டு பரத்துவத்தில் இடம்பெற்றிருக்கின்றன. திரையில் படம் தென்படுவது போல், கண்ணாடியில் பிம்பம் தோன்றுவதுபோல், பரத்துவத்தின் பிரபஞ்சம் என்னும் மாயை தென்பட்டுக் கொண்டேயிருக்கிறது. இந்தப் பிரபஞ்ச மாயையில் கட்டுண்டு கிடப்பதற்கு மனிதன் பிறக்கவில்லை. அவன் வாழ்க்கையின் குறிக்கோள் மாயையில் உழல்வது அன்று. பரமனைச் சார்ந்திருந்து, தன்சொரூபம் உணர்ந்து மாயையைக் கடந்து அப்பால் போவது குறிக்கோள் என்று சமயங்கள் வெவ்வேறு விதங்களில் விளக்கியிருக்கின்றன.

மாயை கடக்கும் வழிகள் பலவாறு விளக்கப்படுகின்றன. விளக்கங்களில் உள்ள வேறுபாடுகள் முக்கியமானவை அல்ல. மாயைக்கு அதீதத்தில், அப்பால் இருக்கும் பரமனை அடைவதே முக்கியமானது. புத்தமதம், லோகாயத மதம், சார்வாக்கியமதம் போன்றவை மாயைக்கு அப்பால் ஒன்றுமில்லை என்று கூறுகின்றன. மாயைக்கு அப்பால் சூனியம் மட்டுமே இருக்கிறது என்று கூறுகின்றன. இவ்வாறு கூறுவதால் இவை மாயாவாத மதங்கள் என்று அழைக்கப்படுகின்றன.

மாயைக்கு அப்பால் பரம்பொருள் ஒன்று உண்டு என்று நம்புகின்ற மதங்கள் எல்லாம் பிரம்ம வாதத்தை - கடவுள் உண்மை வாதத்தை அடிப்படையாகக் கொண்டவை. வைதீக மதங்கள் ஆறும் பிரம்ம வாதத்திற்கு உரியவை. புத்தமதமும் நாத்திக மதங்களும் மாயா வாதத்தோடு நின்று விடுகின்றன.

இகம், பரம் எனப் பொருட்களின் காட்சியானது இருதரப்படுகிறது. ஐம்பொறிகளைக் கொண்டும் அந்தக் காரணங்களைக் கொண்டும் நுகர்வது இகம். பின்பு ஞானக் கண் கொண்டு நுகர்வது பரம். இகத்தையும் பரத்தையும் ஏக காலத்தில் தரிசிக்க முடியாது. மாயையாகிய இகத்தில் மலம் என்னும் இயல்பு இடம்பெறுகிறது. 'மலம்' என்றால் நீக்க வேண்டியது என்பது ஒரு பொருள். இன்னொரு பொருள் அழுக்கு ஆகும். பரத்திலோ அது பரசொரூபமாக உருமாற்றம் அடைகிறது, மேன்மையடைகிறது.

ஓயாது மாறி மாறி அமைந்து வருகிற பிரபஞ்சம் அமிர்த சொரூபமாகவும் மல சொரூபமாகவும் மாறி மாறி அமைகிறது. நாம் உணவு உண்கிறோம். இந்த உணவு அமிர்தம். இது உடல் வளர்ச்சிக்குப் பயன்படுகிற பகுதியாகவும், பயன்படாத பகுதியாகவும் பிரிவுபடுகிறது. பயன்படாத பகுதி மலம் எனப்படுகிறது. அது பிரிந்து வெளியேறாவிட்டால் உடலுக்கு ஆபத்து. அமிழ்தமாக இருக்கும்போது அருந்தப்படுகிறது. பின்பு மலமாகும்போது கழிக்கப்படுகிறது. இவ்வாறே காற்றும் நீரும் கழிவுப்பொருளாகின்றன. "உண்டது மலமாகும் அணிந்தது அழுக்காகும்" என்பது ஒரு பழமொழியாகும்.

இங்ஙனம் பிரபஞ்சம் முழுவதிலும் உள்ள பொருள்கள் அமிர்தமாகவும் மலமாகவும் மாறி மாறி அமைந்துவருவது வெளிப்படை. உயிர் வாழ்க்கைக்கு உறுதுணையாவது அமிழ்தம். வாழ்க்கையை அழிக்கவல்லது மலம். அமிழ்தத்தை ஏற்று மலத்தை விலக்குவதன் மூலம் உயிர் வாழ்க்கை நிலைபெறுகிறது. ஆயினும் உயிர் வாழ்க்கையின் இறுதிக் கட்டத்தில் மலம் (அழுக்குகள்) ஒன்றுசேர்ந்து முன்னணியில் நின்று, உடல் வாழ்வை முடிவுக்குக் கொண்டு வருகிறது. இவ்வாறு அமிர்தமும் மலமும் மாறியமைவது இயற்கையின் அமைப்பு என்பதை அறிபவர் மலம் என்னும் தத்துவத்தை அறிபவர் ஆகின்றனர்.

இப்பிரபஞ்சம் மாயை என்பது தெளிவானது. சீவன் பலகோணப் பிறவிகளில் பரிணமித்துப் பக்குவமாகிக் கொண்டு வரும்போது மாயா சக்தியானது தாயின் நிலையிலிருந்து அச்சீவாத்மாவைப் பேணி வருகிறது. அப்படி, படிப்படியாகப் பக்குவப்படுத்தி வரும்நிலையில் மாயையை மலம் எனல் ஆகாது. இதற்குத் தக்கதோர் உபமானம் எடுத்துக் கொள்வோம். தாயின் கருப்பையில், சிசுவானது உருப்பெற்று வளர்கிறது. அப்படி உருவெடுத்து வளர்ந்து வரும்பொழுது தாயின் கர்ப்பம் போற்றுவதற்குரிய துணையாகிறது. கர்ப்பப்பையில் உள்ள குழந்தை முழு வளர்ச்சியடைந்தவுடன் கர்ப்பப்பையை விட்டு வெளியே வரவேண்டும். வந்தேயாக வேண்டும்.

அப்பொழுது வளர்த்த கருப்பை, அச்சிசுவுக்கு மலமாகிறது. அதாவது வேண்டாத இடமாகிறது. அந்த மலத்தினின்று வெளியேறாவிட்டால் சிசு அழிந்துவிடும். இதே பாங்கில், மாயை என்னும் பிரகிருதித்தாய் சீவாத்மனை வளர்த்துப் பக்குவப்படுத்திப் பரமாத்மனிடம்

ஒப்படைக்கிறது. சீவாத்மா பரமாத்மாவோடு செல்லும் சமயத்தில் மாயையானது மலம் என்னும் பெயர் பெறுகிறது.

பிரபஞ்சம் முழுவதும் கர்ம சொரூபம். "வினையே ஆடவர்க்குயிரே" என்று கூறுகிறது சங்கத் தமிழ். கர்மம், வினை, செயல் என்பன எல்லாவற்றிற்கும் அர்த்தம் ஒன்றே. சீவாத்மனுடைய - மனிதனுடைய முன்னேற்றத்திற்குத் தவிர்க்க முடியாத துணையாய் இருப்பது வினை (கர்மம்). சிலர் கன்மம் என்றும் கூறுவர். கன்மம், கருமம், செயல் யாவும் ஒன்றே. மனம், மொழி, உடல் ஆகிய மூன்றாலும் நிகழ்வன எல்லாம் கர்மமே. பக்தியில் ஈடுபடுதலும், ஞானத்தைத் தேடுதலும் கர்மத்தின் பண்பட்ட செயற்கூறுகளாகும். சீவாத்மா, பரமாத்மாவில் ஒன்றுபடுகிறபோது கர்மம் முடிவு பெறுகிறது. அத்தறுவாயில் அதற்கு மலம் என்னும் பெயர் வருகிறது. சீவாத்மனைப் பக்குவப்படுத்திக் கொண்டிருக்கின்ற போது கர்மம் மலமாகாது.

மாயா காரியமான இந்தப் பிரபஞ்ச வாழ்க்கை மனிதனுக்கு நிலையானதன்று. இப்பிரபஞ்சத்தைக் கடந்து போக வேண்டும் என்னும் கோட்பாடு எல்லா மதங்களுக்கும் பொதுவானது. செத்தபிறகு சீரும் சிறப்பும் அடைவதைப் பற்றிய நம்பிக்கை ஒவ்வொரு மதவாதியிடமும் காணப்படுகிறது. மேலும், இவ்வுலகில் வாழும்போதே மனிதன் எப்படியெல்லாம் முன்னேற்றமடையலாம் என்பதையும் ஒவ்வொரு மதமும் ஒவ்வொரு விதமாகக்கூறி வைத்துள்ளன.

மதங்களின் வெவ்வேறான கண்ணோட்டங்கள், போக்குகள், பிணக்குகளை உருவாக்க வேண்டிய அவசியம் ஏதுமில்லை. ஒரு மதத்தை இன்னொரு மதத்தைக் கொண்டு அளத்தல் நன்றன்று. எந்த ஒரு மதத்திற்கும் எந்த ஒரு மதமும் அளக்கும் கோல் ஆகாது. சீர்தூக்கிப் பார்க்கும் தராசு ஆகாது. இதை எல்லோரும் கருத்தில் கொள்ளவேண்டும்.

ஒரு தோட்டத்தில் விதவிதமான பழ மரங்களையும், பூஞ்செடிகளையும், பூங்கொடிகளையும் தோட்டக்காரன் வளர்க்கிறான். தோட்டத்தில் உள்ள செடிகொடிகள் போன்று பல மதங்களும் இந்த உலகில் தோன்றி வளர்ந்துள்ளன. தோட்டக்காரன் எவ்வித வேறுபாடுமின்றி வளர்ப்பது போன்று படைத்தவனும் (இறைவனும்) எல்லாவிதமான பாங்கு உடையவர்களையும் வளர்க்கிறார் என்று உணர்ந்து அறிந்து நடந்து

கொள்வது சமரசம் ஆகும். விஞ்ஞானிகள் இயற்கைத் தத்துவங்களை நடுநிலையோடு ஆராய்வது போன்று பரமார்க்கத்தில் ஈடுபடுகிறவர்கள் பரதத்துவங்களை நடுநிலை வகித்து ஆராய்தல் வேண்டும். அப்பொழுது மக்களது இணக்கத்தில் இனிமையும் மனத்தின் பக்குவத்தில் தெளிவும் ஒருங்கே திகழும்.

இனி, தாயுமானவர் இறையருளால் பாடிய பராபரக்கண்ணிகள் மூன்றினைப் படித்துப் பொருள் உணர்ந்து மகிழ்வது நலம் பயக்கும். பராபரக் கண்ணிகளின் விளக்கம் திருப்பராய்த்துறைத் தவமுனிவர் சித்பவானந்தர் எழுதியதாகும். நன்றியுடன் படித்துப் பயன்பெறவேண்டும்.

மாயா ஜகம் இலையேல் மற்று எனக்கு ஓர் பற்றும் இல்லை
நீயே நான் என்று வந்துநிற்பேன் பராபரமே

எது ஓயாமல் உருமாறிக் கொண்டிருக்கிறதோ அது மாயை. எது இடையறாது சலித்துக் கொண்டிருக்கிறதோ அது பிரபஞ்சம் (ஜகத்). ஒரு பொருளை உண்மையானது என்று கருதினால் அதன் மீது பற்று வருகிறது. அது வெறும் தோற்றம் என்று அறியும்போது அதில் பற்று உண்டாவதில்லை. இதற்குச் சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். தங்கத்திலும் வெள்ளியிலும் உருவாக்கிய நாணயங்கள் ஓரிடத்தில் குவித்து வைக்கப்பட்டிருக்கின்றன. மனிதன் அக்குவியலுக்கு மதிப்புத் தருகிறான். முடியுமானால் அதைக் கைப்பற்றவும் எண்ணுகின்றான். இனி இந்த நாணயங்களுக்கு நிகராக இதே தோற்றத்தில் தகரத்தில் அல்லது அட்டையில் செய்து (Token Coin) குவித்து வைக்கப்பட்டிருக்கிறது. அந்நாணயங்கள் நன்கு அமைக்கப்பட்டிருக்கின்றன என்று ஒருவன் பாராட்டலாம். ஆனால் அவைகளின் மேல் அவனுக்கு எவ்விதமான பற்றும் ஏற்படுவதில்லை. ஏனென்றால் அவை வெறும் தோற்றமான நாணயங்கள். உண்மையான தங்கமும் வெள்ளியும் அல்ல. விவேகம் படைத்தவனுக்கு இப்பிரபஞ்சம் தோற்றமான நாணயம் போன்று பொருளற்றதாகிறது. ஆகையால் அதில் அவன் பற்றுக்கொள்வதில்லை. அவன் புரிகிற வேறு ஒரு சாதனம் இருக்கிறது. நீயே அவன் என்றும் பாவனையை அவன் வளர்க்கிறான். அழுக்குப் படிந்த நீரும் தன்னை நீர் என்று சொல்லிக்கொள்வதில் குற்றம் எதுவுமில்லை. ஏனென்றால் அழுக்கைப் போக்கிச் சுத்தப்படுத்திவிடலாம். அதேபாங்கில் சித்தமலம் நீங்கப் பெற்ற சீவன் கடவுளாகிறான். (சிவமாகிறான்). பின்பு சித்தமலத்தோடு கூடியிருக்கும்பொழுது அவன்

'நான் கடவுள்' (சிவம்) என்னும் எண்ணத்தை வளர்த்துவரும்போது நல்ல ஆத்ம சாதனம் நடைபெறுகிறது. அந்த உருப்பெறுவதற்கு ஏற்ப சித்தமலம் அறுகிறது. சிவபோதம் ஓங்குகிறது. இறைவா, நான் பிரபஞ்ச ஈடுபாட்டை (போதத்தை) ஒழித்து, சிவநாட்டத்தை, கடவுள் நாட்டத்தை வளர்த்து வருவதற்குத் துணை புரியவேண்டும் என்று கேட்டுக்கொள்கின்றார்.

தாயுமானவரின் பராபரக்கண்ணி நம் உள்ளங்கொள்ளும்படி மாயை பற்றிக் கூறுகிறது.

மால்காட்டிச் சிந்தை மயங்காமல் நின்று சுகக்
கால்காட்டி வாங்காதே கண்டாய் பராபரமே (68)

இன்பத்தை நாடுவது உயிர்களின் இயல்பு. சிற்றுயிர், பேருயிர் ஆகிய அனைத்தும் இன்பத்தையே தேடி அலைந்து திரிகின்றன. அம்முயற்சியில் வெற்றியும் தோல்வியும் மாறி மாறி வந்து கொண்டேயிருக்கின்றன. சிற்றுயிர்கள் பேருயிர்களாகப் பரிணாமம் அடைவதற்கு இன்பநாட்டம் ஒரு முகாமையாக இருந்து வருகிறது. பெருநிலை அடையப்பெற்ற உயிர்கள் இன்பத்தை எளிதில் பெறுகின்றன. மற்ற உயிர்களை எல்லாம் விட அதிகமாக மனிதன் இன்பத்தைப் பெறுகிறான். ஆனால் அவ்வின்பம் நிலையற்றது என்பதனையும் மனிதனே புரிந்து கொள்ளுகிறான். பிரபஞ்சத்தில் பெறுகிற இன்பங்கள் அனைத்தும் மயக்கத்தின் விளைவாம். ஐந்து இந்திரியங்கள் மூலமாக வருகின்ற இன்பங்கள் யாவும் பின்பு துன்பங்களாக முடிகின்றன. ஐந்து கருவிகளையும் நெறிப்படுத்தி அடங்கிப் பழகுமிடத்து உண்மையான இன்பம் ஆன்மசொரூபத்தில் இருப்பது அறியப்படுகிறது. ஆதலால்தான் சுகத்திற்கு உண்மையான பிறப்பிடம் ஆத்மா என்னும் விவேகம் வருகிறது. அத்தகைய விவேகத்தை உறுதியாகப் பெறுகின்றனர். மீண்டும் இந்திரிய சுகங்களில் மயக்கங்கொள்வதில்லை. விவேகத்தை ஏகதேசம் பெறுகிறவன் சிற்றின்பத்தையும் பேரின்பத்தையும் மாறி மாறி நாடுகிறான். பேரின்பத்திலேயே நான் நிலைத்திருப்பதற்கு அருள் புரிவாயாக என்பது இக்கண்ணியின் கருத்து.

பொய்யைப்பொய் என்று அறியும் போதத்துக்கு ஆதரவு உன்
மெய் அருளே அன்றோ விளம்பாய் பராபரமே (105)

(விளம்பாய் = சொல்வாயாக)

ஒரு காலத்தில் இருந்து மற்றொரு காலத்தில் எது இல்லாது போகின்றதோ அது பொய். அதைப்பற்றி ஆராய இன்னும் ஒரு படி மேலே போக வேண்டும். அதற்கேற்ற உவமை கனவினின்று கிடைக்கிறது. ஏழை ஒருவன் பணக்காரன் ஆகிறான். கனவு இருக்கும் வரையிலும் அது மெய் என்றே தோன்றுகின்றது. அப்படித் தோன்றினாலும் அது உண்மையில் மெய்யன்று. கனவிலே பணக்காரனான ஏழை உண்மையில் பணக்காரன் அல்லன். தன்னைப் பணக்காரன் என்று எண்ணியது வெறும் மயக்கம். கனவைப் பற்றிய இக்கருத்து நனவிற்கும் பொருந்துகிறது. உற்றார் உறவினர்களுடன் வாழ்ந்திருக்கும் வாழ்வு மெய்யென்று தோன்றுகின்றது. ஆனால் அவர்கள் ஒருவர் பின் ஒருவராக மடிந்து போகின்றனர். அப்படி மடிந்து போனவர்கள் நாளடைவில் கனவில் தோன்றியவர்களுக்கு நிகராகக் காணப்படுகின்றனர். நாம் வாழ்ந்து வரும் பிரபஞ்ச வாழ்வு நீண்டதொரு கனவாம். முற்பகுதியில் வந்தவைகள் பிற்பகுதியில் கனவு போன்று மறைந்து விடுகின்றன. கடைசியில் இவ்வுலக வாழ்வு முழுவதுமே மறைந்து விடுகிறது. இங்ஙனம் யுக்தியின் மூலம் பிரபஞ்சம் பொய் என முடிவு கட்டுகிறோம்.

இறைவனுடைய மெய்யருளைப் பெற்ற பிறகு பொய்யான வாழ்வில் அதிக ஈடுபாடு வருவதில்லை. மெய்யான பரம்பொருளையே நாடும் மனப்பக்குவம் வாய்க்கிறது. இறைவா, மெய்க்காட்சிகளைத் தந்தருள்வாயாக என்பது இக்கண்ணியின் கருத்து. மாயையின் செயலான இருள்மலம் பற்றிப் பராபரக் கண்ணியில் உள்ளதை அறிவோம்.

காட்ட அருள் இருக்கக் காணாது இருள்மலத்து
நாட்டம் எனக்கு வரல் நன்றோ பராபரமே (79)

காட்சி இருவகைப்படுகிறது. ஒன்று அருள்காட்சி; மற்றது மருள்காட்சி. இவ்விருகாட்சிகளுள் ஒன்று நிலைபெறும்போது மற்றது மறைந்துவிடுகிறது. கயிற்றைப் பாம்பாகப் பொருள் படுத்துவது இதற்கு நல்ல உதாரணம். பாம்பாகக் கண்டபோது கயிறு இல்லை. கயிறாகக் கண்டபோது பாம்பின் காட்சி அகன்றுவிடுகிறது. அருளைச் சார்ந்திருப்பவனுக்கு மெய்க்காட்சி கிட்டுகிறது. அருளைச் சார்ந்திருத்தல் என்றால் என்ன? புறக்காரணமாகிய ஐம்பொறிகளும் அகக்காரணமாகிய மனதும் பரமனுக்கென்றே ஒப்படைக்க வேண்டும். உள்ளத்தில் நினைப்பது எல்லாம் பரமனைப் பற்றிய உணர்வேயாம். புறத்தில் புலப்படுபவைகள் எல்லாம் பரமனுடைய பெருமைகளாம். இத்தகைய இயல்பை உருவாக்குபவன் அருளைச் சார்ந்திருப்பவனாகின்றான்.

இருள்மலம் என்பது அஞ்ஞானத்தில் திளைத்திருக்கிற மனவிகாரமாகும். சகோதரனும் சகோதரியும் ஓர் இடத்தில் பக்கம் பக்கமாக அமர்ந்திருக்கிறார்கள். பரஸ்பரம் அவர்கள் கொண்டுள்ள பான்மை அருளைச் சார்ந்ததாகும். வழியில் போகிற ஒருவன் அவர்களைக் காதலர்கள் எனக் கருதுகிறான். அவன் உள்ளத்தில் பூண்டது இருள்மலம் அல்லது அறிவின்மையால் உதித்த கோணலான மனப்பான்மை.

எவ்வளவுக்கெவ்வளவு ஒருவன் அஞ்ஞானத்தில் தோன்றியுள்ள மனம் என்னும் மலத்தைக்கொண்டு பிரபஞ்சத்தில் உழல்கின்றானோ அவ்வளவுக்கவ்வளவு அவன் கீழ்மை அடைகிறான். பிரபஞ்ச நாட்டம் உள்ளத்தில் உருவெடுக்க இடந்தரலாகாது. பிரபஞ்ச நாட்டம் உள்ளத்தில் தீமையை வளர்க்கிறது. அருளைத் துணையாகக் கொண்டு பரத்தையே காண முயல்கின்றவனுக்கு மேலும் மேலும் நன்மை உண்டாகிறது. நன்மையை வளர்ப்பதற்கான பேரருள் எனக்குச் சொந்தமாயிருக்கையில் தீமையை வளர்ப்பதற்கான கோணலான மனப்போக்கில் நான் போய்க்கொண்டிருப்பது பொருந்துமா? அது ஒரு நாளும் பொருந்தாது என்பதே இக்கண்ணியின் கருத்தாம். இக்கண்ணிகள் மனிதன் மேல்நிலை அடையவேண்டிய அவசியத்தை உணர்த்துகின்றன.

மனிதன் ஒருவன் கீழ்நிலையிலிருந்து மேல்நிலைக்குப் போவதற்கு அவனே பொறுப்பாளியாகின்றான். அவன் மேற்கொள்கின்ற முயற்சிக்குத் தக்கவாறு கீழ்மையும் மேன்மையும் வந்தடைகின்றன. தான் அடைந்துள்ள நிலைக்குத்தானே பொறுப்பாளி என்னும் உணர்வு இன்னும் மேல்நிலையை எட்டுவதற்குத் தூண்டுகோலாக இருக்கிறது. "தானே தனக்குச் சுற்றமும் தானே தனக்கு விதிவகையும்" என்பது முன்னோர் வாக்கு. இக்கோட்பாடு பரிணமித்து மேலே வருகின்ற மனிதனுக்கு முற்றிலும் பொருத்தமானது.

மனிதப் பிறவியில் பிரபஞ்ச வாழ்வைப் பற்றிய உண்மை சிறிதுசிறிதாக விளங்கி வருகிறது. இன்பம் துன்பம் ஆகிய இரண்டும் மாறி மாறி வருவது பிரபஞ்ச வாழ்க்கையின் மாயையின் இயல்பு. துன்பம் கலவாத இன்பத்தை மனிதன் பிரபஞ்சத்தில் தேடுகிறான். அத்தகைய இன்பம் ஒருநாளும் கிட்டாது. துன்பம் என்னும் விலை கொடுத்தே இன்பத்தை ஈண்டுப் பெறமுடியும். இந்த நிர்பந்தத்தை முன்னிட்டு விவேகம் படைத்துள்ள மனிதனுக்குப் பிரபஞ்ச வாழ்க்கையில் பற்று குறைகிறது. ஆத்மசாதனத்தில் அவன் ஈடுபடுகின்றான். ஆத்மசாதனம் ஓங்குதற்கேற்பப் பிரபஞ்சப் பற்றும் குறைந்து மறைந்து போகிறது.

மேல்நிலைக்குப் போகப் போக யான் எனது என்னும் செருக்கு பின்னணிக்குப் போகிறது. தன்னை மறந்து ஈடுபட ஈடுபடப் பரபோதம் முன்னே நிற்கத் தொடங்குகிறது. நானும், தானும் ஒன்றே என்னும் தெளிவு ஏற்படுகிறது. கடலை அடைகின்ற நதி ஒன்றை இதற்குச் சான்றாகக் கொள்ளலாம். கடலை நெருங்குகின்ற பொழுது கடலின் பாங்காகிய பொங்குதல் வடிதல் என்னும் செயல்கள் நதியின்பாலும் தோன்றுகின்றன. கடலை அடைந்த பிறகு நதியின் பங்காகிய நல்ல நீர் சிறிதளவு அதனிடத்து இருக்கிறது. கடலுக்குள்ளே முற்றிலும் நுழைந்து இரண்டறக் கலந்த பின் நதி காணாமல்போய்விடுகிறது. கடலாக அது நிலைத்திருக்கிறது. அதேபோல் ஜீவாத்மன் பரமாத்மனில் இலயமாகும் தறுவாயில் ஜீவபோதம் பரபோதமாக மேலோங்குகிறது. மாயை முற்றிலும் மறைகிறது.

# 12. ஞானியர் நிலை

## (தத்துவ தரிசனம் பெற்றவர்)

'மௌனகுரு' போலப் பரிபூரண நிலையை அடைந்திருப்பவர்கள் ஞானிகள் என இயம்பப்படுகின்றனர். நிறைவு அனைத்தையும் அவர்களிடம் காணலாம். நல்ல ஒழுக்கத்துக்கும் அவர்களே சான்று ஆகின்றனர். பிறந்தும் புல்லிய இயல்புகள் அவர்களிடத்திருந்து வடிவெடுக்கமாட்டா. சிற்றியல்புகள் உள்ளத்தின் உள்ளே மறைந்து கிடந்தாலும் அவர்கள் ஞானத்திற்குத் தகுதியுடையவர்கள் ஆகமாட்டார்கள். மனம், மொழி மெய் ஆகிய மூன்றிலும் தூய்மையடைந்துள்ளவர் ஆகின்றனர். ஞானத்திற்குப் பரிபாகம் ஆகிக் கொண்டிருக்கின்ற பொழுதும் ஞானத்தை முற்றிலும் அடைந்தான பிறகும் புறத்தோற்றத்தில் அவர்கள் சிறுகுழந்தைகள் போன்றோ பேய் பிடித்தவர் போன்றோ பித்துப்பிடித்தவர் போன்றோ தோன்றலாம். ஆயினும் நிறை ஞானிகளுக்கும் இந்த மூன்றுவித மக்களுக்கும் இடையில் வெகுதூரமாம். சித்தர் பலர் இவ்வாறு இருந்திருக்கின்றனர்.

தாயுமானவரின் குரு மௌனவிரதம் பூண்ட ஞானியாவார். பேசாத நிலையில் இருந்துகொண்டே தனது மாணாக்கர் தாயுமானவருக்கு அரிய பெரிய கருத்துக்களை ஊட்டிவந்தார். அது எப்படி முடியும்? இது சரியான ஐயமே. பேச்சின் மூலமே புகட்டுவதைவிடச் சிறந்தது மௌனநிலையில் இருந்துகொண்டு புகட்டுவது. சிஷ்யன் பக்குவமடைந்தவனாக இருப்பானாகில் குருவினுடைய மௌன உபதேசம் அவனுடைய உள்ளத்தில் வடிவெடுக்கிறது. பேச்சின் துணையின்றி மனத்தோடு மனம் பேசுகிறநிலை பக்குவமடைந்திருப்பவர்களுக்குச் சாத்தியமாகிறது. இந்நிலையை அடைந்திருப்பவர்களுக்கு மொழி இடைஞ்சலாகிறது. இங்கு மௌனகுருவினுடைய பரிபாகத்திற்கு அருகில் வந்துள்ள நிலையில் தாயுமானவர் இருந்தார். ஆதலால் அவருடைய கருத்துக்களையெல்லாம் சொல்லின் உதவியின்றிச் சிஷ்யர் ஏற்றுக்கொண்டார். அப்படி ஏற்றுக்கொண்டதால் ஞானத்தெளிவும் பரமானந்தப்பேறும் சிஷ்யருக்குக் கிடைத்தன.

சாதாரணப் பொதுமக்களைப் போன்றே ஞானியர்களும் உண்பது உடுப்பது அணிகள் அணிவது ஆகிய செயல்களைச் செய்கின்றனர். உலகத்தவர்களுக்கு ஆடம்பரமான உடையணிந்திருக்கும்பொழுது பகட்டான மனப்பான்மை வந்தமைகிறது. கந்தல் உடை அணியும்போது நாணமடையும் பான்மை வருகிறது. இத்தகைய மனவிகாரம் ஞானியர்களுக்கு இல்லை. 'ஊருடன் கூடிவாழ்' என்னும்கோட்பாட்டிற்கு ஒப்ப உலகத்தவர்களின் வசதிக்காக அவர்கள் ஏதேனும் ஓர் உடையை அணிகின்றனர். கிடைத்த உணவை இறைவனுக்கு அர்ப்பணம் பண்ணும் பாங்கில் உண்கின்றனர். சுவை பார்த்து அவர்கள் உண்பதில்லை. உண்பதற்கிடையில் உண்ணுவதைப் பற்றிய உணர்ச்சியின்றி இருக்கின்றனர்.

சமயச் சின்னங்கள் எதை வேண்டுமானாலும் ஞானியர்கள் அணிந்து கொள்கின்றனர். அல்லது அணியாதிருக்கின்றனர். சின்னங்கள் அவர்களுக்கு ஒரு பொருட்டன்று. உண்பது, உடுப்பது அணிவது ஆகிய செயல்கள் ஆன்றோர்களின் உள்ளத்தில் எந்தவிதமான விகாரத்தையும் உண்டுபண்ணுவதில்லை. இவையாவிலும் கட்டுப்படாதவர்களாக அவர்கள் இருக்கின்றனர். உலகத்தவர்கள் போன்று அவைகளைப் பயன்படுத்துவது அவர்களுக்கு விளையாட்டாக இருக்கிறது. அவை கிடைக்காவிட்டால் சாதாரண மக்கள் திண்டாடுகின்றனர். ஞானியர்களுக்கோ அவை விளையாட்டுப் பொருள்களாம். உலகத்தவர்களின் நியதிகளில் ஞானிகள் கட்டுப்படுவதில்லை.

ஞானியர் பசியெடுத்தால் பிச்சை எடுத்து உண்பர். பொதுச் சாவடியில் தங்குவர். ஏரிகுளங்களில் தாகம் தணித்துக் கொள்வர். அவருடைய கவனம் விருப்பம் எல்லாம் ஏகாந்தத்தில் பேரின்பத்தில் திளைத்திருப்பது.

சான்றோர்களாகிய ஞானிகளிடத்துப் பேரியல்புகள் பல இருக்கின்றன. அவைகளுள் போற்றத் தகுந்தது உயிர்கள் அனைத்தையும் ஒரே பாங்கில் நேசிப்பதாம். அரக்க இயல்பு படைத்தவர்கள் தங்களுக்குப் புறம்பானவைகளுக்குச் சதா தீங்கு செய்து கொண்டு இருக்கின்றனர். சாதாரண மக்கள் தங்களுக்கு ஒத்துள்ள நல்ல உயிர்களுக்கு நலன் செய்கின்றனர். தீய உயிர்களுக்குத் தீங்கு செய்கின்றனர். ஆயின் அருள் நிலையை எட்டியுள்ள நல்லோர் எவ்வுயிர்க்கும் தீங்கு செய்வதில்லை. ஒவ்வொரு உயிரும் தன்னைத் தானே கண்ணுங்கருத்துமாய் ஓம்புவது

போன்று மேலோர் உலகிலுள்ள உயிர்கள் அனைத்தையும் தங்களுடைய சொந்தச் சொரூபமாகவே கருதி அன்பு காட்டுகின்றனர். பரமனே உயிர் அனைத்துமாய் மிளிர்கிறான் என்பதை அறிகின்றவர்கள் அவை யாவற்றையும் நேசிக்கின்றனர்.

## இல்லற ஞானி

'ஒழிவில் ஒடுக்கம்' என்னும் அரிய தமிழ் நூல் இல்லற நெறியினின்று வாழ்ந்து ஞானமடையும் இல்லற ஞானியர் பற்றி மிகவும் அழகாக வரையறுத்துக் கூறுகிறது.

அவரவரைப் போலிருப்பார் தாமவர் ஆகார் போல்
இவர் அவர்க் கொப்பில்லை எனினும் - உவமை சொலின்
வேசி. பணம். வெய்யோன். வெளி. விசிறி
யாசியர் போலென்கினும் ஆவர் (பாடல் 218)

விலைமகள் தன்மேல் விருப்பங்கொண்டு வருபவரிடம் தானும் அவர்மேல் விருப்பங்கொண்டதுபோல இன்மொழி கூறுதல் தழுவுதல் என்பன செய்து மனதில் அவர்மேல் எவ்வித ஆசையுமின்றிப் பொருள், பணம் ஆகியவற்றின் மேல்மட்டும் குறியாயிருப்பாள். அதுபோல இல்லற ஞானியானவன் மனைவி முதலிய குடும்பத்தார் தன்மீது அன்புகாட்டி ஆசையுடன் நடந்து கொண்டாலும் தாமும் அவர்மேல் அவ்வாறே அக்கறை உடையவர் போல் வாக்கு, காயம் ஆகியவற்றால் காட்டி மனத்தில் அவர்மேல் ஈடுபாடு இன்றி மெய்ப்பொருள்பால் நாட்டங்கொண்டவராக விளங்குவார்.

பணம் எவர் எவர் எமது எமது என்று உரிமை பாராட்டினாலும் தான் அவர்மேல் எந்த உரிமையும் கொண்டாடுவதில்லை. சுற்றத்தார் நண்பர் முதலியோர் எம்மவர் எம்மவர் என்று கொண்டாடி மகிழ்ந்தாலும் இல்லறஞானி 'பணம்' போல் தான் யார் மீதும் உரிமையுடையவன் என்ற எண்ணத்துடன் வாழ்வதில்லை.

இந்த உலகம் விளக்கமடைந்து தொழிற்படுவதற்கு அச்சாணியாய் விளங்குபவன் சூரியன். சூரியன் இல்லையெனில் இப்பிரபஞ்சம் இல்லை. எனினும் உலகத்து மக்களின் தொழில்களால் சூரியனுக்கு யாதொரு பயனுமில்லை. தனது சொல் செயல்களால் யாது நடந்தாலும் நிகழ்ந்தாலும்

அதனால் வரும் இன்ப துன்பங்களில் இல்லற ஞானி தோய்வதில்லை. அக்கறையோ ஆர்வமோ காட்டுவதில்லை. வீணையை மீட்டாதபோதும் மீட்டியபின் வைத்துவிட்டபோதும் செயலின்றியே கிடக்கும். இசை வல்லான் பாடும் பாட்டின்படி வீணை நடக்கும். தானே எதுவும் செய்யாது. ஒருவர் ஒன்றைப் பற்றிப் பேசாத முன்பும், பேசிச் சென்ற பின்பும் தாம் அதுபற்றி ஒன்றும் பேசாது யாதொரு விசாரணையும் செய்யாது, அவர் பேசிய காரியப் பேச்சு மாத்திரம் பேசி மற்றொன்றும் கூறாது இருப்பர் இல்லற ஞானியர். எனவே வீணை போன்றவராகிறார்.

வெளி எல்லாவற்றிற்கும் இடங்கொடுக்கிறது. அண்டங்களும் பகிரண்டங்களும் அவற்றின் தொழில் முறைகள் எல்லாம் வெளியில் நடைபெறுகின்றன. எனினும் வெட்டவெளி அவற்றால் எவ்விதத்திலும் பாதிக்கப்படுவதில்லை. அதுபோல் இல்லறஞானி குடும்பத்திற்கு முதன்மையானவனாக, தலைவனாக இருந்தும் அவற்றால் தாக்கற்றிருக்கிறான். எனவே இல்லறஞானி 'வெட்டவெளி' போல் என்று உவமிக்கப்படுகிறான்.

விசிறி தன்னை எடுத்து விசிறிக் கொள்பவர்க்குப் பயன்தருவதன்றி, அவரால் தனக்குப் பயன் வேண்டாதிருக்கிறது. இல்லற ஞானியர் தாம் பிறருக்குப் பயன்படுபவரே அல்லாது பிறரால் தாம் பயன் அடையக் கருதுவது இல்லை. எனவே விசிறி போன்றவராகிறார். ஒன்றை வேண்டி யாசிப்பவர் குற்றமுடைய்வரையும் குணமுடையவரையும் ஒன்று போலவே குணமாகப் புகழ்ந்து பேசுவர். இல்லற ஞானியர் யாசிப்பவர் போலவே குணங்குற்றம் பாராது யாவரிடமும் நன்மொழியே பேசுவர்.

ஞானியருக்கு இல்லறமும் துறவறமும் ஒன்றே. உலகியலில் இருப்பது போன்று இல்லாமல் இருப்பர். "ஒழிவில் ஒடுக்கம்" என்னும் ஓர் அரிய தமிழ் நூல்,

> தொடும்போது சுழல்காற்றுத் தூனம்போல் தொட்டு
> விடும்போது அங்ஙனே விட்டு - நடந்தாலும்
> ஆகாயம் நீங்காமல் ஆடியது போல் அடங்கும்
> ஏகாந்திக்கு எங்கிருந்தால் என்? (பாடல் 239)

என்று ஞானிகளின் நிலையை மிகவும் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டுகிறது.

ஞானியரின் சொல் எப்போதும் தப்பாமல் நற்பயனே தரும். அவர் சொற்களில் சொற்சுவையை விடச் சொற்பயனே, முதன்மையாக விளங்கும். தோற்றத்தில் நேரிதாக இருக்கும் அம்பு கொலை செய்யும் தொழிலால் தீய பயன் தரும் கருவியாகும். வளைவுகளைப் பெற்றுள்ள இனிமையல்லாத தோற்றமுடைய வீணை இன்னிசையால் எல்லோர் மனத்தையும் மகிழ்விக்கிறது. தம் மக்கள் மழலைச் சொல்போல் இனியது யாழ் - வீணை இசை.

பார்வைக்கு நேரான அம்பு பயனால் கொடுமையானது. வளைவான வீணை பார்வைக்கு நேராக இல்லை. பயனால் இனிதாகிறது. பொருளின் பயனே கொள்ளத்தக்கது.

கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல் (குறள் 279)

ஞானியர் மேலாந்தரமான உணர்வினராவர். உயிர் சிறப்புடைய நலன்கள் பெற உணர்வு தேவை. உணர்ச்சி வேறு. உணர்வு வேறு. உணர்ச்சி உடல் சார்புடையது. உணர்வு உயிர்ச்சார்புடையது. உணர்ச்சி தற்சார்புடையது. உணர்வு பிறர் நலச் சார்புடையது. உணர்ச்சி தீமையை விளைவிக்கும். உணர்வு தியாக இயல்பினது. நன்மையே செய்வது. ஆதலால் பிறர் நலம் விழையும் ஞானியர் உணர்வில் சிறந்து விளங்குவர்.

உலகியலில் எந்த ஒரு பொருளும் தனித்து இருப்பது இல்லை. தனித்திருப்பது வளர்ச்சிக்கு இடையூறு. முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டை. இதே தத்துவம் சமய இயலுக்கும் பொருந்தும். உயிர் தனித்திருப்பதில்லை. உயிருக்குச் சார்பின்றித் தனித்திருக்கும் இயல்பும் ஆற்றலும் இல்லை. உயிர் உலகப்பொருள்களைச் சார்ந்து, அவற்றை அனுபவிக்க வேண்டும். அல்லது இறைவனுடைய திருவருளைச் சார்ந்து திருவருள் இன்பத்தை அனுபவிக்க வேண்டும். இஃது உயிரின் இயற்கை. உயிர் திருவருளைச் சார்ந்திருப்பது திருத்தத்திற்கும் உய்திக்கும் வழிவகுக்கிறது. முழுக்க முழுக்க உலகியலைச் சார்ந்திருப்பது துன்பத்திற்குக் காரணமாக அமைகின்றது. உலகியல் வசப்பட்ட உயிர் எரியுள் அகப்பட்ட கட்டை போல அழிக்கப்படுகிறது. திருவருட்சார்பினைத் தழுவிய உயிர் விளையும் நிலத்திலே விழுந்த விதைபோல் விளைந்து சமுதாயத்திற்குப் பயன்தருகிறது. ஞானியர், துறவியர், தவம்புரிவோர் போன்றோர் உயிரும் திருவருட் சார்பினால் மனித குலத்திற்குப் பெரும்பயன் தரும்.

# 13. நிறை வாழ்வு

## (ஆற்றல், அன்பு, அறிவு)

மனிதன் வாழ்வின் முக்கியமான குறிக்கோள் வீடுபேறு அடைதலாகும். அதற்கு உற்ற நெறி யோகம். கர்மம், பக்தி, ஞானம் ஆகிய மூன்றும் சாத்திர நூல்களிலும் உயர் இலக்கியங்களிலும் இடம்பெறுகின்றன. இரண்டு சிறகுகளும் ஒரு வாலும் இருந்தால் பறவை பறக்கும். மனிதன் (ஜீவன்) பரத்தை அடைவதற்கு ஞானமும், பக்தியும் சிறகுகளாக அமைகின்றன. கர்ம யோகம் சமன்செய்யும் வால் ஆகிறது. இந்நூலில் கூறப்பட்ட எல்லா வகையான தத்துவங்களும் சாதனங்களும் இம்மூன்றினுள் அடங்கியிருக்கின்றன.

பரத்தை எண்ணி, இகவாழ்க்கையை அதாவது இவ்வுலக வாழ்க்கையைப் புறக்கணித்து விடும்படிப் புகட்டும் நூல்கள் இருக்கின்றன. இம்மை வாழ்வே எல்லாம் என்று வலியுறுத்தி மேலான பரத்தைப் புறக்கணிக்கும்படிப் போதிக்கும் நூல்களும் இருக்கின்றன. ஆனால் திருக்குறள், புறநானூறு, அகநானூறு, நாலடியார், ஞானவெட்டியான், வள்ளலார் பாடல்கள் போன்றவை இகம் பரம் இரண்டுக்கும் உரிய இடத்தை முறையாக வகுத்து வழங்குகின்றன. இகமும் பரமும் ஒன்று மற்றொன்றுக்கு முரண்பட்டதன்று என்ற கோட்பாட்டினை வலியுறுத்திப் பேசுகின்றன. இவ்வுலக வாழ்க்கையை நல்ல முறையில் நடத்துபவன் பரத்துக்கு உரியவன் ஆகிறான். பரத்தைச் சார்ந்திருக்க வல்லவன் இகத்துக்கும் நன்கு பயன்படுகிறான்.

கர்மத்தை (செயலை) இரண்டு விதமாகப் பிரித்து வைத்துப் பார்ப்பவர் உளர். ஒன்றைப் பரமார்த்திகத்துக்கு உரியது என்றும் மற்றதை இவ்வுலக வாழ்க்கைக்கு உரியது என்றும் அவர்கள் கருதுகின்றனர். அவ்விரண்டு பிரிவுகளுக்கும் உரியவைகளை முறையே வைதீகக் கர்மம், உலகியல் கர்மம், ஆத்மசாதனம், உலகவியவகாரம், அருள்நாட்டம், பொருள் நாட்டம், இன்ப நாட்டம் என இப்படியெல்லாம் கூறுகின்றனர். ஆனால்

பெரிய நூல்கள் வாழ்க்கையை இரண்டாகப் பகுத்துப் பார்ப்பதில்லை. ஆகையால் மனிதன் செய்யும் கர்மத்தை மேலானது என்றும் கீழானது என்றும் பேதப்படுத்திப் பார்ப்பது இல்லை. நல்வாழ்க்கை வாழத் தெரிந்து கொண்டவன் ஒருவன் எல்லாவிதமான கர்மங்களையும் ஆத்ம சாதனத்துக்கு உரியவையாக்கலாம். நல்ல முறையில் வாழத்தெரியாதவன் கடவுள் வழிபாடு போன்ற புனிதமான மேலான கர்மத்தைக் கெடுத்துப் பந்த பாசத்திற்குரியதாக்கி விடலாம். வினைகளை எல்லாம் மேலாம் வினைகளாக மாற்றவல்லவை நற்றமிழ் இலக்கியங்களாகும். மிகவும் குறிப்பாகக் கூறுவது எனில் திருக்குறள் இந்த இரசவாத வித்தையில் முதலிடம் பெறும் நூலாகும். உலகம் போற்றும் ஞானநூல் ஆகும்.

மன அமைப்பில், செயல், உணர்வு அறிவு என்ற மூன்று பகுதிகள் இருக்கின்றன. உளநூல் வல்லுநர் அவற்றை (Will, emotion, cognition) என்று கூறுவர். மனத்தில் இச்சா சக்தி, ஞான சக்தி, கிரியா சக்தி ஆகிய மூன்றும் கொலுவிருக்கின்றன என்பது தெரிந்ததே. மனதில் இந்த மூன்று வித மாண்புகளும் ஒருங்கே தொழிற்படுதல் அல்லது மிளிருதல் வேண்டும். அப்பொழுது மனிதப் பண்பாடு நிறைவு பெறுகிறது. மனிதன் திண்ணியன் ஆவதற்கு அதுவே உற்ற வழியாகும். நல்ல உள்ளத்துக்கு உரிய மூன்று பண்புகளையும், கூறுகளையும் முறையே எடுத்துக்காட்டி விளக்குவதால் திருக்குறள் எல்லார்க்கும் உரிய நூலாகிறது. மற்ற நற்றமிழ் இலக்கியத் தடங்களும் திருக்குறளில் ஒன்றி விடுகின்றன.

தமிழ் இலக்கியங்களின் குறிக்கோள், மற்றும் தமிழ் நூல்களில் காணலாகும் தத்துவக் கருவூலங்களின் கோட்பாடு மனிதனை நிறைமனிதன் ஆக்குவதே. உறுதியான உடலும், உயர்ந்த உள்ளமும் தெளிந்த அறிவும் நிறைவாழ்விற்கு, நிறை நிலைக்கு இன்றியமையாது வேண்டப்படுவன ஆகும். பேராற்றல் பெற்றிருப்பது முதல் தேவை. ஒழுக்கம் உயர்ந்த ஆற்றலில் அடங்கி விடுகிறது. நன்மையைச் செய்யவும் செய்விக்கவும் ஆற்றல் பெற்றவனுக்கே முடியும். அடுத்த கோட்பாடானது அன்பு. உயிர்க்குலம் அனைத்துக்கும் அன்பு பொதுவானது. அன்பைத் தூய அன்பாக மாற்ற உதவிபுரிவது பக்தியின் நோக்கம் எனலாம். தூய அன்பிலிருந்து இனிமையானவை அனைத்தும் தோன்றும். எல்லாவற்றையும் ஒன்றுபடுத்துவது தாயன்பு போன்ற தூய அன்பாகும். உலகில் உள்ள உயிர்கள் யாவும் தூய அன்புடையவனுக்குச் சொந்தமாகி விடுகின்றன.

அறிவு மூன்றாவது படியாகும். பட்டப்பகலைத் தோற்றுவிக்கும் சூரியன் போன்றது அறிவு. அனைத்தையும் அறிவு விளக்கவல்லதாகும். மாண்புகளை எல்லாம் எடுத்துக்காட்ட வல்லது. உயிர்கள் செயல்புரிய வைப்பது அறிவு. அதை மிகுந்த அக்கறையுடனும் கவனத்துடனும் வளர்ப்பது மனிதனின் கடமையாகும். ஆக ஆற்றலையும் அன்பையும் அறிவையும் ஒருங்கே அடையப் பெற்றிருப்பனுக்கு மேலும் பெறவேண்டிய பேறு ஏதுமில்லை. அவன் நிறைமனிதன் ஆகிறான். அவனுக்கே நிறைநிலை வாய்க்கிறது. நிறைநிலை எய்திய மனிதன், நிறை நிலை எய்த விரும்பும் மனிதர் யாவருக்கும் நற்றமிழ் நூல்கள் உற்றதுணையாக விளங்கும்.

நந்தமிழ் நூல்கள் கூறும் நல்ல தத்துவங்களை உணர்ந்து போற்றி வாழ்பவன் வையத்துள் வாழ்வாங்கு வாழும் மனிதன் ஆவான். அவன் வானுறையும் தெய்வத்துக்கு இணையாக மதிக்கப்படுவான். போற்றப்படுவான்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும் (குறள் 50)

நிறைவாழ்வில் மரணம்

நித்திரை அல்லது கனவற்ற உறக்கம் மரணத்துக்கு நிகரானது. அயர்ந்து உறங்குகின்ற ஒருவன் அவன் சரீரத்தில் ஞாபகம் பெறுவானாகில் அந்த உறக்கத்துக்கு நித்திரை என்று பெயர். அதே சரீரத்தில் ஞாபகம் பெறாது வேறு ஒரு சரீரம் எடுக்க அந்த உயிர் போய்விடுமேயானால் பழைய சரீரத்துக்கு மரணம் என்னும் பெயர் வருகிறது. இதை நன்கு எண்ணிப் பார்க்க வேண்டும். மனிதன் உறக்கத்தைக் குறித்து எப்படிப் பயப்படுவதில்லையோ அப்படி மரணத்தைக் குறித்தும் பயப்படுதல் கூடாது. ஆனால் மனிதர்களில் பெரும்பாலோர் அப்படி இருப்பதில்லை. எடுத்த உடல் ஒன்றுக்கு மரணம் வருவது ஒரே ஒரு தடவை. ஆனால் அதன் அழிவைக் குறித்து மனிதன் எத்தனை எத்தனையோ தடவை துயரப்பட்டுக்கொண்டு இருக்கிறான். சுடர் விளக்குப் போன்றது ஞானத் தெளிவுடன் மனிதன் வாழ்ந்து வருதல் வேண்டும். மனிதனின் உடலுக்கு நோய் நொடி ஏற்படும்பொழுது உடல் அழியுமே என்று துன்புறுவதாலோ விம்மி அழுவதாலோ அதன் அழிவையோ தேய்வையோ தடுத்துவிடமுடியாது.

வீணே துன்பப்படுவதுதான் கண்ட பலன். இந்த உடல் இருக்கும் வரையில் சரியான ஞானத்தோடும், மகிழ்ச்சியோடும் வாழ்ந்திருப்பது முறை. உடல் அழிகின்ற வேளையில் அதற்கு அந்த அழிவிற்கு உடந்தையாய் இருப்பது முறை. இப்படி நடந்து கொள்வது சான்றோர் கடன்; உடம்பின் பயன் கொண்டார் செயல்.

கரும்பாட்டி கட்டி சிறுகாலைக் கொண்டார்
துரும்பெழுந்து வேம்கால் துயராண்டுழலார்
வருந்தி உடம்பின் பயன் கொண்டார் கூற்றம்
வருங்கால் பரிவ திலார் (நாலடியார் 36)

நன்கு விளைந்து முற்றிய கரும்பை ஆலையில் கொடுத்துப் பிழிந்த பின் எஞ்சியிருக்கும் சக்கையைத் தீயிடுவர். அதற்காக யாரும் வருந்தமாட்டார்கள். வாழும் காலத்தே நல்லநெறிகளைக் கடைப்பிடித்து வாழ்வாங்கு வாழ்ந்தவர்கள் வாழ்வின் பயன் கொண்டவர்கள் கூற்றம் வரும்போது அஞ்சமாட்டார். உடம்பு அழியப் போகிறதே என்று வருத்தப்படமாட்டார். வாழ்ந்து முடிந்த உடம்பு சக்கைதானே. சக்கை சாம்பலானால் என்ன? மண்ணில் புதைந்து மக்கிப் போனால் என்ன? சாறுபிழிந்தபின் எறிந்த சக்கைக்கு யாரும் வருத்தப்படமாட்டார்கள். அதுபோல் நல்லவிதமாக வாழ்ந்தவர்கள் மரணம் கண்டு, உடல் அழிவதைக்கண்டு துயரமடையமாட்டார்கள். மரண பயமற்றவர் நிறைவாழ்வு வாழ்ந்தவர் ஆவார்.

நத்தம் போல் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க்கு அல்லால் அரிது (குறள் 235)

## பயன்பட்ட நூல்கள்

1. திருக்குறள்
2. தொல்காப்பியம்
3. புறநானூறு
4. திருமுருகாற்றுப்படை
5. குறுந்தொகை
6. சிலப்பதிகாரம்
7. மணிமேகலை
8. திருமந்திரம் - பத்தாம் திருமுறை
9. திருவாசகம் - எட்டாம் திருமுறை
10. சித்தியார் - அருணந்தி சிவாச்சாரியார்
11. கடவுளின் வடிவங்கள் - சித்பவானந்த அடிகள்
12. பராபரக்கண்ணி - தாயுமானவர் பாடல்கள் (சித்பவானந்தர் உரை)
13. திருமுறைகளின் யோக ரகசியங்கள் தம்மண்ணச்செட்டியார்
14. சமாதியோகம் - சுவாமி சிவானந்தா (1984)
15. திருவருட்பா - இராமலிங்கஅடிகள்
16. ஞானவெட்டியான் - திருவள்ளுவ நாயனார்
17. ஒழிவில் ஒடுக்கம்
18. நாயன்மார் நால்வர் - ஞா.சித்தன்
19. சைவசமயம் - மறைமலையடிகள்
20. முருகன் அல்லது அழகு - திரு.வி.க.
21. பட்டினத்தார் பாடல்கள்
22. குறள்நெறி விளக்கம் - குன்றக்குடி அடிகளார்

ஆங்கில நூல்கள்

1. G.E. Moore, 'Ordinary language, the begin all of philosophy'.

2. Feuerbach, Medical materialism.
3. Charles Darwin (1859), Origin of species.
4. Anaximander (Greece- 611-547 BC), Organic evolution.
5. John Stuart Mill, Three Essays on Religion.
6. Lord Tennyson, The Lotus Eaters.
7. Dummet (1964), Philosophical Review.
8. L.A.Reid, Knowledge and Truth.
9. H.H. Price (1950), Preparation, New York.
10. Alexander, "Knowledge is always of some thing other than itself".
11. Gilbert Ryle, Concept of Mind.
12. W.T.Stace, Mysticism and Philosophy.
13. Saint- Simon (1760-1875), "Society is a true being".
14. August Comte (1798-1853), "Family is a basis Unit".
15. Machenzic, A Manual of Ethics.
16. Immanual Kant, Metaphysics of Morals.
17. C.B.Garnatt (1940), Wisdom in Conduct.
18. P.K.Sundaram (1979), Some Philosophical concepts in Purananuru.
19. Dr.Radhakrishnan,
    1. My Search for Truth.
    2. Indian Philosophy.
    3. The Hindu view of Life (1927).
    4. The Reign of Religion in Contemporary Philosophy.
    5. The Religion we need (1928).
    6. Religion and society (1947).
    7. Fragments of confession.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை - 600 113

## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 901 – கி.பி. 1300 | 100.00 |
| தொல். பொருள். (அகம்–புறம்)– ஆங்கில மொழிபெயர்ப்பு | 50.00 |
| தமிழ் ஆய்வு இதழ்கள் | 50.00 |
| வேதாத்திரியத்தில் சமூகவியல் இறையியல் சிந்தனைகள் | 130.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 1851 – 2000 | 180.00 |
| இதழாளர் பெரியார் | 100.00 |
| மகாவித்துவான் ரா. ராகவையங்கார் | [illegible]0.00 |
| தமிழக வானவியல் சிந்தனைகள் | 35.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள்–நாட்டுப்புறவியல், கலை, பண்பாடு | 90.00 |
| தொல்காப்பியம்–எழுத்ததிகாரம் மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 200.00 |
| வாழிய செந்தமிழ் | 140.00 |
| பேராசிரியர் அ.மு.பரமசிவானந்தம் | 40.00 |
| தமிழக எல்லைப் போராட்டங்கள் | 60.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி – I | 90.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி – II | 90.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி – III | 80.00 |
| தொல்காப்பியம்–சொல்லதிகாரம் மூலமும் சேனாவரையருரையும் | 200.00 |
| தொல்காப்பியம்–பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 325.00 |
| தொல்காப்பியம்–பொருளதிகார மூலமும் பேராசிரியர் உரையும் | 300.00 |
| Economic Heritage of the Tamils | 115.00 |
| மலேசியத் தமிழரும் தமிழும் | 100.00 |
| மொழி, சமய, சமுதாயத் தளங்களில் பாவாணர் பங்களிப்பு | 50.00 |
| தமிழ்ப் புனைகதைகளில் உளவியல் | 35.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் – தொல்லியல், வரலாறு, சமூகவியல் | 100.00 |
| [illegible]யல் | 50.00 |
| பண்பாட்டு நோக்கில் திருமுறைகள் | 30.00 |
| [illegible]டல்களில் கட்டுப்பாட்டு மீறல்கள் | 95.00 |
| Bibliography on Translations | 175.00 |
| சங்க இலக்கிய ஆய்வு தெ.பொ.மீயும் மேலை அறிஞரும் | 60.00 |
| அறந்தாங்கித் தொண்டைமான்கள் | 45.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 200.00 |
| உ.வே.சாமிநாதையர் உரைநடை நூல்கள் உணர்த்தும் புலப்பாட்டு நெறி | 35.00 |

**604 தமிழில் தத்துவ நூல்கள் 40.00**